


நான்காம் பகுதி

***

1. சாந்தி பருவம்
2. அனுசாசன பருவம்
3. ஆஸ்வமேதிக பருவம்
4. ஆசிரமவாசிக பருவம்
5. மௌசல பருவம்
6. மகாபிரஸ்தானிக பருவம்
7. சொர்க்கரோகண பருவம்

தமிழில் :

அ. லெ. நடராஜன்

***

அருணா பப்ளிகேஷன்ஸ்
தியாகராய நகரம் • சென்னை-17.

# முன்னுரை

ஆண்டவன் அருளாலும் பெரியோர்களின் நல்லாசியாலும் வியாசர் அருளிய மகாபாரதம் என்னும் இந்த நூலின் கடைசிப் பகுதி இப்பொழுது வெளிவருகிறது.

வியாசர் அருளிய மகா பாரதத்தை எழுதி முடிப்பதற்கு எனக்கு மூன்று ஆண்டுகள் பிடித்தன. மிகுந்த பொறுப்பு உணர்ச்சியுடனும் கடமை உணர்ச்சியுடனும் இந்தக் காரியத்தை நான் செய்திருக்கிறேன் என்பதை, வாசக அன்பர்களுக்கு, பணிவுடன் நான் தெரிவித்துக்கொள்கிறேன்.

வட மொழி வியாச பாரதம் கிட்டத் தட்ட 86,000 சுலோகங்களில் அமைந்திருக்கிறது அதற்கு நேரான தமிழ் மொழி பெயர்ப்பை, பல ஆண்டுகள் அரும்பாடு பட்டு, ஊக்கத்துடனும் உள்ளன்போடும், பிரம்ம ஸ்ரீ ம. வீ. இராமானுஜசாரியார் அவர்கள் வெளியிட்டு இருக்கிறார்கள். அந்த நூல் டெம்மி அளவில் சுமார் 8600 பக்கங்களைக் கொண்டு, 14 புத்தகங்களாக வெளிவந்

திருக்கிறது. இன்னும் வேறு சிலரும் வியாச மகா பாரதத்தை, கூட்டியும் குறைத்தும், தமிழில் வெளியிட்டு இருக்கிறார்கள்.

மகா பாரத மூலக் கதையை மட்டும் தொடர்புவிட்டுப் போகாமல் சுருக்கி, சுமார் 1400 பக்கங்களில் நான் எளிய தமிழில் எழுதி இருக்கிறேன். மூலச் கதையை மட்டும் படிக்க விரும்புபவர்களுக்கு, நான் எழுதி இருக்கும் இந்த நூல் பெரிதும் பயன்படும். மூலக் கதையை மட்டும் படித்து, ருசி ஏற்பட்டுவிட்டால், பிறகு மூலம் முழுவதையும் படிக்கத் தூண்டும் என்பதற்காகத்தான் இந்த முயற்சி.

இனி, இந்த நான்காம் பகுதியைப்பற்றிச் சில வார்த்தைகள்: இந்த நான்காம் பகுதியில் மொத்தம் ஏழு பருவங்கள் வெளி வந்திருக்கின்றன:

1. சாந்தி பருவம்
2. அனுசாசன பருவம்
3. ஆஸ்வமேதிக பருவம்
4. ஆசிரமவாசிக பருவம்
5. மௌசல பருவம்
6. மகாபிரஸ்தானிக பருவம்
7. சொர்க்காரோகண பருவம்

இந்த ஏழு பருவங்களையும் ஒருவன் கருத்தூன்றிப் படித்தால் போதும். மகா பாரதம் போதிக்க விரும்பும் தருமங்கள், கடமைகள், நீதிகள் ஆகிய அனைத்தையும், சுருக்கமாகத் தெரிந்துகொண்டு விடலாம்.

சாந்தி பருவத்தில் ராஜ தருமம், ஆபத்து தருமம், மோட்ச தருமம் ஆகிய மூன்றும் விரிவாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

இந்த மூன்று தருமங்களில், முன் இரண்டு தருமங்களை மட்டும் சுருக்கி, இந்த நான்காம் பகுதியில் நான் தந்திருக்கிறேன்.

மோட்ச தருமம் என்பது மிகச் சிக்கலான விஷயங்களைக் கொண்டது. தகுந்த ஆசாரியனை அடுத்து, அதிலுள்ள விஷயங்களைக் கேள்வி ஞான மூலம் கேட்டுத் தெரிந்துகொண்டாலன்றி, ஐயங்கள் நீக்கி, மனத் தெளிவு ஏற்படுவது சாத்தியம் அன்று. ஆகவே, மோட்ச தரும பருவத்தை வியாசர் அருளிய மகா பாரதத்தில் நான் சேர்க்கவில்லை.

சாந்தி பருவத்தில், பெரும்பாலும் அரசனுடைய கடமைகள், அவன் பின்பற்ற வேண்டிய நடைமுறைகள், சாதாரண காலத்தில் அரசன் நடந்துகொள்ள வேண்டிய முறைகள், ஆபத்துக் காலத்தில் அவன் நடந்துகொள்ள வேண்டிய முறைகள் ஆகியன விரிவாகச் சொல்லப்பட்டு இருக்கின்றன

(1) ஆபத்துக் காலத்தில் மூன்று மீன்கள்
(2) ஆபத்துக் காலத்தில் எலியும் பூனையும்
(3) குற்றம் செய்த இடத்தில் தங்காதே

இந்த மூன்று அத்தியாயங்களும் ஆபத்துக் காலத்தில் அரசன் நடந்து கொள்ள வேண்டிய முறையை, கதை வடிவில் வெகு அழகாவும் கன கச்சிதமாகவும் விளக்கு கின்றன. அரசியல்வாதிகள ஒவ்வொருவரும் அவசியம் படிக்க வேண்டிய பருவம், சாந்தி பருவம்.

அனுசாசன பருவத்தில் மனிதர்கள் எல்லாரும் கடைப்பிடிக்க வேண்டிய பொதுத் தருமங்கள் சொல்லப்பட்டுள்ளன.

1. இல்லற தருமம்
2. பூதானம்
3. அன்னதானம
4. இன்சொல்
5, ஊழ்வினை பெரிதா? முயற்சி பெரிதா?
6. தவம் சிறந்ததா? தானம் சிறந்ததா?

இத்தகைய பொதுத் தருமங்களை ஒருவன் அனுசாசன பருவத்தில் படிக்கலாம்.

இந்தப் பருவத்தில்தான், வீரரும் அறிஞரும் தந்தையின் பொருட்டு, சகல இன்பங்களையும் துறந்த பீஷ்மர், மேலான கதியை அடைந்த நிகழ்ச்சி சொல்லப்பட்டுள்ளது.

மகா பாரதத்தில், பீஷ்மர் மிக முக்கிய மான பாத்திரம்; அதி அற்புதமான பாத்திர மும்கூட தந்தையின் பொருட்டாய் ராஜ்யம் தனக்கு வேண்டாம் என்று விட்டுக்கொடுத் தவர் பீஷ்மர்; அதன் பொருட்டாய், இல்லற இன்பத்தையும் துறந்த பெருமகன் அவர். இவருக்கு இணையான ஒரு தியாகச் செம்மலை, பேரிதிகாசங்களைத் தவிர்த்து, மற்ற இலக் கியங்களில் நாம் காண முடியாது.

''இத்தகைய தியாகச் செம்மல், அநீதிக் கட்சியில் சேர்ந்து ஏன் போர் செய்தார்? இது நல்லவனுக்கு ஏற்ற நடைமுறையா?'' என்ற எண்ணங்கள் பாரதம் படிப்பவர் எவர் மனதிலும், எழாமல் இரா.

பீஷ்மர் தியாகச் செம்மல்தான்; சந்தேகம் இல்லை; பற்றறுத்த வீரர்தான்; சந்தேகம் இல்லை; ஆயினும் தனக்குள்ள பொறுப்புகளையும் கடமைகளையும் உதறித் தள்ளிய துறவி அல்லர் அவர்; ராஜ்ய உரிமை யைப் பீஷ்மர் துறந்தாரெனினும, ராஜ்யப் பொறுப்புகள் அவரைவிட்டு நீங்க வில்லை. சிறு பிராயத்திலே அவர் தம்பி, விசித்திர வீரியன் இறந்துவிட்டமையால், ராஜ்யப் பொறுப்புகள் அனைத்தும் பீஷ்மரிடமே இருந்தன. பொறுப்புடன் நிர்வகித்து அந்த ராஜ்யத்தை உரியவனிடம் ஒப்படைக்க வேண்டிய பெரும் பொறுப்பு, அதனல் பீஷ்மருக்கு ஏற்பட்டது.

பேணிக் காத்த ராஜ்யத்தைத் ஒப்படைக்க வேண்டிய தருணம் வந்தபோது, பல சிக்கல்கள் தோன்றின. அவற்றைச் சமாளித்து, ராஜ்யத்தை இரு கூறிட்டு, ஒன்றைக் கௌரவர்களுக்கும் மற்றொன்றைப் பாண்டவர்களுக்கும் கொடுத்துச் சமாதானம் செய்து வைத்தார் பீஷ்மர்.

பாண்டவர்கள் இந்திரபிரஸ்த நகரை நிர்யாணித்துக்கொண்டு நாட்டை ஆண்டார்கள்; துரியோதனன் அத்தினபுரியில் இருந்துகொண்டு நாட்டை நிர்வகித்தான்.

இதுசமயம் பீஷ்மர் துரியோதனாதியர்களுடன் அத்தினபுரியிலே தங்கிவிட்டார். துரியோதனனை அரசனாக மதித்து நடந்துகொள்ள வேண்டிய அவசிய நிலை இதனால் பீஷ்மருக்கு ஏற்பட்டது. ஆகவே துரியோதனன் வார்த்தைகளை அவரால் தட்டிக் கழிக்க முடியவில்லை. நீதியும் நேர்மையும் பாண்டவர்கள் பக்கம் இருப்பது தெரிந்திருந்தும், துரியோதனனைவிட்டு விலகிப் போய்விட அவரால் முடியவில்லை. ஆகவே, துரியோதனன் பக்கம் சார்ந்து, அவர் போர் செய்திருக்கிறார்.

தன்னை ஆதரித்துக் காப்பாற்றின ஒருவருக்கு ஆபத்து நேரும்போது, அவரைவிட்டு விலகிப் போவது வீரர்களின் செயலன்று; அப்படிப் போனால் அவனை உலகம் தூற்றும் என்பது அனைவரும் அறிந்த உண்மை. அத்

ஞல்தான் பீஷ்மர் துரியோதனன் பக்கம் சார்ந்து போர் செய்திருக்கிருர் என்ற முடிவுக்கு நாம் வர வேண்டிய திருக்கிறது.

இது மட்டு மல்லாமல், பாண்டவர்களி டம் காணப் பெருத ஓர் அரிய குணம் துரி யோதனனிடம் இருப்பதை நாம் பார்க் கிருேம்.

துரியோதனன் தீயவன்தான்; அகந் தையும் பொருமையும் கொண்டவன்தான். ஆயினும், அண்டினவர்களே ஆதரித்துக் காப் பாற்றும் அரிய பண்பு துரியோதனனிடம் இருப்பதை நாம் பாரதத்தில் படிக்கிருேம். பீஷ்மர், துரோணர், கர்ணன், விதுரர், கிருபர் முதலியவர்களேத் தன்னுடன் கூடவே அத்திஞபுரியில் இருக்கச் செய்து, அவர்களே ஆதரித்துக் காப்பாற்றி இருக்கிருன் துரியோ தனன். அதன் காரணமாகத்தான், இவர் களில் நால்வர் துரியோதனன் சார்பாகப் போர் செய்திருக்கிருர்கள்.

மேலே தந்திருக்கும் சான்றுகள் மூலம் பீஷ்மர் தவறு செய்யாத பெரியவர் என்றும் கடமையை நிறைவேற்றி முடித்த கர்மவீரர் என்றும் நாம் தெரிந்துகொள்கிருேம்.

பீஷ்மரைப் போலவே, அதி அற்புத மான பாத்திரங்கள் பலரைக் கொண்ட படைப்பு மகா பாரதம், துரோணர், கர்ணன், யுதிட்டிரர், பீமன், அர்ச்சுனன், கண்ணன், திருதராட்டிரன், சல்லியன்,

அசுவத்தாமா, கிருபர், துருபதன், திரௌபதி, குந்தி, காந்தாரி ஆகிய பாத்திரங்கள் எப்பொழுதும் நம் நெஞ்சில் இடம்பெற்று நிற்கும் நிலையில் தனித்தன்மையுடன் இயங்கு கின்றனர். இத்தகைய பல்வேறு பாத்திரங் களைக் கொண்ட அரிய இதிகாச நூல் வேறு எந்த மொழியிலும் கிடையாது என்று, இலக்கிய ரசிகர்கள் அறுதியிட்டுச் சொல்லி இருக்கின்றனர்.

இத்தகைய அரிய நூலை எளிய தமிழில் நான் எழுத நேர்ந்தது எனது பெரும் பாக்கியம் என்று நான் கருதுகிறேன்.

சென்னை
15—8—64

அன்புள்ள,
அ. லெ நடராஜன்
60, பாரதி நகர், சென்னை—17.

# பொருளடக்கம்

## சாந்தி பருவம்



## ராஜ தருமம்



## ஆபத்து தருமம்

## அனுசாசன பருவம்



## ஆஸ்வமேதிக பருவம்

## ஆசிரமவாசிக பருவம்



## மௌசல பருவம்



## மகாபிரஸ்தானிக பருவம்



## சொர்க்காரோகண பருவம்

# அனுபந்தம்

1. யார் யார் அம்சம்?
2. சந்திரவமிசம்
3. பருவங்கள்
4. சுலோக எண்ணிக்கை
5. டாக்டர் வி. எஸ். சுதங்கர் பதிப்பு
6. அக்குரோணி
7. பதினெட்டு

# வியாசர்

## அருளிய

# மகா பாரதம்

## தமையனைக் கொன்றேன்

போரில் உயிர் துறந்த நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் எள்ளும் தண்ணீரும் இறைத்துத் தர்ப்பணம் செய்த பிறகு, பாண்டவர்களும், விதுரரும், திருதராட்டிரனும், பரத குலப் பெண்டிரும், கங்கைக் கரையில் ஒரு மாதம் தங்கினார்கள்.

அப்போது, ஒரு நாள் வியாசர், நாரதர், தேவலர் தேவஸ்தானர் முதலிய ரிஷிகள் தத்தம் சீடர்களுடன் யுதிட்டிரரைக் காண வந்தனர். வந்தவர்களை விதிப்படி யுதிட்டிரர் பூசித்ததும், முனிவர்கள் ஆசனங்களில் அமர்ந்தனர். சோகமே வடிவாய்த் திகழும் யுதிட்டிரரை நோக்கி, நாரத முனிவர், "தரும புத்திரனே! அர்ச்சுனனுடைய கைவன்மையாலும் கண்ணபிரானுடைய அருளினாலும் உனது தருமபலத்தாலும் நீ வெற்றிபெற்றாய். இந்தப் பூமண்டல முழுதும் உனது ஆதிக்கத்தின்கீழ் இப்பொழுது வந்துவிட்டது. இனி, உனக்கு மகிழ்ச்சிதானே?" என்று கேட்டார்.

அதற்கு யுதிட்டிரர், "பகவானே! பூமி முழுதும் எனது ஆதிக்கத்தின்கீழ் வந்துவிட்டது என்பது என்னவோ உண்மைதான்! ஆயினும் சுற்றத்தாரையும் அபிமன்யு முதலான புதல்வர்களையும் இழந்து, நான் பெற்றிருக்கும் இந்த வெற்றி, எனக்குத் தோல்வியாகத்தான் தோன்றுகிறது. பெரும்

துயரத்தைப் பொறுத்துக்கொண்டு திரௌபதி, பிரியத்தோடு பணிவிடை செய்துகொண்டிருப்பது எனது நெஞ்சை உறுத்து கிறது.

"இது மட்டுமில்லை: பதினாயிரம் யானைப் பலம் கொண்ட எங்கள் தமையன் கர்ணனைப் பகைவன் என்று எண்ணி, நாங் கள் கொன்றுவிட்டோம். மன உறுதியும் ஆற்றலும் நன்றி யறிதலும் உடைய கர்ணனை நாங்கள் கொன்றது, என் உள் ளத்தை எரிக்கிறது. தம் தாய்க்குக் கொடுத்த வாக்குத் தவறாமல் கர்ணன் நடந்துகொண்டிருக்கிறான் இதை நினைக்க நினைக்க என் நெஞ்சம் வெடித்துவிடும்போல் இருக்கிறது. கர்ணனுடைய பாதங்கள் எங்கள் தாய் குந்தியின் பாதங் களைப் போன்றே இருந்தன' என்று சொல்லிப் பெருமூச்சு விட்டு, யுதிட்டிரர் வருந்தினார்.

பிறகு அவர், "நாரத முனிவரே! ஒப்பற்ற ஆற்றல் பெற்ற எங்கள் தமையன் எதனால் போரில் தோல்வியடைந் தார்? இதற்கு முக்கிய காரணம் யாது? யாவற்றையும் உள்ளது உளளபடி எங்களுக்குக் கூற வேண்டும்" என்று வேண்டினார்.

கர்ணனுடைய சரித்திரத்தை, யுதிட்டிரருக்கு நாரதர் விரிவாகச் சொன்னா. "வேந்தே! முன்பு பரசுராமரிடத்தில், தான் ஒரு பிராமணன் என்று பொய் சொல்லி, உன் தமை யன் கர்ணன் சிறந்த அஸ்திரம் ஒன்றைப் பெற்றுக்கொண் டான். உண்மை வெளிப்பட்டதும், பரசுராமர் உன் தமைய னைச் சபிததுவிட்டார். தன் பசுவைக் கொன்றதற்காக மற் றோர் அந்தணரும் கர்ணனைச் சபித்திருக்கிறார். குந்திக்குக் கர்ணன் கொடுத்த வரம், வஞ்சித்துக் கர்ணனிடமிருந்து கவச குண்டலங்களை இந்திரன் பெற்றது, 'மாபெரும் வீரன் அல் லன்' என்று சொல்லிப் பீஷ்மர் கர்ணனை அவமதித்தது, சல்லி யன் செய்த இகழ்ச்சியுரை இவை அனைத்தும் சேர்ந்து, கர்ணனுடைய தோல்விக்குக காரணங்களாய் இருந்தன. கார ணம் நீ என்று கருதி, இதற்காக நீ வருந்த வேண்டாம்" என்று நாரத மகரிஷி சொன்னார்.

நாரதர் சொல்லியும் யுதிட்டிரர் ஆறுதல் அடைய வில்லே. துயரம் தாங்காது அவர் பெருமூச்சுவிட்டார். கண்கள் கலங்கி, நீரால் நனேந்தன.

சோகத்தில் அழுந்தியவளாய் இருந்தும், இனிய வார்த்தைகளால் குந்தி, யுதிட்டிரருக்கு ஆறுதல் சொன்னுள்: "புயவலிமிக்கோய்! கர்ணனே எண்ணி எண்ணி நீ வருந்தாதே; அவன் தந்தை சூரிய பகவானும் நானும் துரியோதனனே விட்டு விட்டு, உன்னுடன் சேர்ந்துகொள்ளும்படி கர்ணனிடம் சொன்னேம். நாங்கள் சொன்னதை அவன் கேட்கவில்லே. அவன் அழிவுக்கு அவனே காரணம். இதற்காக நீ வருந்தாதே" என்று சொன்னுள்.

தாய் ஆறுதல் சொல்லியும், யுதிட்டிரரின் நெஞ்சம் சமாதானம் அடையவில்லே. "அம்மா! உண்மையை வெளியிடாமல் மறைத்து வைத்திருந்து, எங்களே நீ வஞ்சித்து விட்டாய். அதனுல் எங்கள் தமையனேக் கொன்ற பெருந் துயரத்துக்கு நாங்கள் ஆளானேம். ஆகவே, இன்றுமுதல் பெண்களின் நெஞ்சத்தில் இரகசியம் தங்காமல் இருக்கக் கடவது!" என்று பெண்குலத்தையே யுதிட்டிரர் சபித்து விட்டார். *

* மகா பாரதத்தில் பல சாபங்கள் வருகின்றன. சாபமிடுவது கோபத்திலுைம், துக்கத்திலுைம் ஏற்படலாம். கர்ணனேப் பரசுராமர் சபித்தது, பாண்டுவைக் கிந்தம முனிவர் சபித்தது, மைத்திரேய மகரிஷி துரியோதனனேச் சபித்தது, குந்தி செய்தது தவறு என்று கருதி யுதிட்டிரர் பெண் குலத்தைச் சபித்தது, ஊர்வசி அர்ச்சுனனேச் சபித்தது, இவை முக்கியமானவை. ஒவ்வொரு சாபமும் நியாயமானதா அநியாயமானதா என்பதை முடிவு எடுப்பது எளிதன்று. அது அவரவர் மனநிலேக்கு ஏற்றவாறு தோன்றும்.

பலர் ஆறுதல் சொல்லியும், யுதிட்டிரர் சமாதானம் அடையவில்லை. சுற்றத்தார், நண்பர்கள், பிள்ளைகள், சகோதரர்கள், சம்பந்திகள் இவர்கள் எல்லாரையும் இழந்து நாட்டை ஒருவன் ஆள்வதால் யாது பயன் என்று கருதி, அவர் வருந்தினார். ராஜ்யமே தனக்கு வேண்டாம் என்று யுதிட்டிரர் வெறுக்கலானார்.

## நாடு வேண்டாம்

கர்ணனைக் கொன்றதை நினைந்து நினைந்து யுதிட்டிரர் துயரப்பட்டார். துறவறம் பூண்டு காடு சென்றால்தான், உறவினர்களைத் தாம் கொன்ற பாவம் நீங்கும் என்று கருதினார். ஆகவே, அவர் அர்ச்சுனனை நோக்கி, "வீரனே! பொருளுக்கு ஆசைப்பட்டுப் பெரும் பாவத்தை நாம் செய்துவிட்டோம். பூமியை ஆண்டு அனுபவிக்க ஆசைப்பட்ட நாம் சுற்றத்தார்களைக் கொன்று ஒழித்து, அதன் பயனாய்க் கவலையில் ஆழ்ந்து கிடக்கிறோம். மூன்று உலகங்களையும் நாம் ஆள நேரினும், அதனால் நம் நெஞ்சை உறுத்தும் கவலை அகலாது. குலமே பெரும்பாலும் அழிந்துபோன பிறகு, ஒருவன் மகிழ்ச்சியுடன் எப்படி வாழ முடியும்? துரியோதனன் நமக்கு இழைத்த கொடுமைகளால் கோபமுண்டு அவனை நாம் கொன்றோம். கொன்ற பின் கோபம் போய்விட்டது. ஆனால், அதற்குப் பதிலாக நெஞ்சைப் பிளக்கும் கவலை அதிகரித்துவிட்டது. பிறருக்கு நன்மை செய்தல், தான் செய்த பாவத்தைப் பிறர் அறியச் சொல்லல், பச்சாதாபப்படுதல், தானம் செய்தல், தவம் செய்தல், பற்றற்று இருத்தல், பல தீர்த்தங்களுக்குச் செல்லல், இவற்றில் ஏதாவது ஒன்றைச் செய்தாலும் செய்த பாவம் தீரும் என்று ஸ்மிருதிகள் கூறுகின்றன. ஆகையால், சுற்றத்தாரைக் கொன்ற பாவத்துக்குக் கழுவாயாக, நான் காடு செல்லப் போகிறேன். ராஜ்யத்தை ஆள்வதில் எனக்கு விருப்பம் இல்லை. பகைவர்கள் இல்லாத இந்தப் பூமியை நீங்கள் ஆளுங்கள்" என்று சொன்னார்.

யுதிட்டிரர் வெறுப்படைந்து பேசியதைச் செவிமடுத்த அர்ச்சுனன் மெல்லச் சிரித்தான். "அரசே! பகைவர்களை அழித்த பின்னர், ராஜ்யம் வேண்டாம் என்று வெறுப்படைந்து நீர் பேசுவது புத்திக்குறைவான போக்காகும். பயப்படுகிறவனுக்கும் சோம்பேறிக்கும் ராஜ்ய சம்பத்து கிட்டாது. 'தருமம், தருமம்' என்று நீர் பேசுகிறீரே, அந்தத் தருமத்தைச் செய்வதற்கு ஒருவனுக்குப் பொருள் வேண்டும். தருமத்துக்குக் காரணமான பொருளை எவன் அபகரிக்கிறானோ, அவன் தருமத்தையே அபகரிப்பவன் ஆவான். பொருள் இல்லாதவனை உலகம் பழிக்கும். எவனிடம் பொருள் இருக்கிறதோ அவனுக்கு நண்பர்கள் உண்டு; எவனிடம் பொருள் இருக்கிறதோ அவனுக்கு உறவினர்கள் உண்டு; எவனிடம் பொருள் இருக்கிறதோ, அவனையே உலகம் கனவான் என்று கருதும்; கல்விமான் என்று போற்றும். பொருள் இன்றிப் பொருளைச் சம்பாதிக்க முடியாது.

"பொருள் இருந்தால்தான் குலத்துக்குப் பெருமை. பொருள் இல்லாதவனுக்கு இம்மையும் இல்லை; மறுமையும் இல்லை. பிறருக்கு அபகாரம் செய்யாமல் எவனாலும் பொருளை ஈட்ட முடியாது. எல்லா அரசர்களும் பிறரை அபகரித்துப் பொருளை ஈட்டிப் பொக்கிஷத்தை நிரப்பித் தான தருமங்களைச் செய்திருக்கிறார்கள். ஆகையால், நீரும் இந்த உலகை ஆண்டு, பெரும் வேள்விகளை இயற்றிப் பெருமை அடையும்" என்று சொன்னான்.

இதன் பின்னர், பீமன் பேசினான்: "அரசே! வேதத்தைக் குருட்டுப் பாடம் செய்தவன் உண்மையை அறிவதில்லை. அவனுடைய புத்தி மந்த நிலையில் இருக்கும். அதே போலத் தான், உமது புத்தியும் இருக்கிறது. உமது புத்தி இத்தகையது என்பது எங்களுக்கு முன்பே தெரிந்திருந்தால், ஆயுதங்களை எடுத்து நாங்கள் போர் புரிந்து இருக்க மாட்டோம். பிச்சை எடுத்து உண்டு வாழ்நாளைக் கழித்து இருப்போம். அரச குலத்தில் பிறந்தவனுக்கு நாட்டை நிர்வகிப்பது தலையாய

கடமை அரச குலத்தில் பிறந்த நீர், நாட்டை அடைய விரும்பி முயன்ற நீர், அந்தக் குலத்துக்கு உரிய கடமைகளை நிந்திப்பது முறையா? ' என்று கேட்டான்.

பிறகு சுருக்கமாகப் பேசுகிற நகுலன் அர்ச்சுனனின் கருத்தை ஒட்டி, தனது கருத்தை வெளியிட்டான். "வேந்தே! மற்ற மூன்று ஆசிரமங்களைக் காட்டிலும் இல்லற தருமத்தைக் கற்றறிந்தவர்கள் சிறப்பித்துச் சொல்லி இருக்கிறார்கள். ஆசையைத் துறக்காமல் துறவற வாழ்க்கையை மேற்கொண்டால், அது போலித் துறவற வாழ்க்கையாகி விடும். ஆகவே, துயரத்தைவிட்டு, நாட்டை ஆண்டு, பெருமை தரும் காரியங்களைச் செய்யும்" என்று சொன்னான்.

சகதேவனும், "அரசே! தாய், தந்தை, ஆசான் எல்லாம் நீரே. அரசன் அவசியம் கருமத்தில், அதாவது செயலில் ஈடுபட வேண்டும். அன்பு மேலிட்டு வருத்தத்தால் நான் பிதற்றிய இந்த வார்த்தைகளைப் பொறுத்தருள வேண்டும்" என்று வேண்டினான்.

தம்பியர் நால்வரும் சொன்னவற்றைக் கேட்டு, யுதிட்டிரர் மௌனமாய் இருந்தார். அப்போது திரௌபதி, யுதிட்டிரரை நோக்கி, அன்பான சொற்களால் தனக்குத் தெரிந்த தருமம் அதருமம் இரண்டையும் பற்றி அவரிடம் சொன்னாள்:

"மன்னரே! நாம் துவைத வனத்தில் வாழ்ந்தபோது, நீர் உம் தம்பியர்களை நோக்கி, 'போரில் துரியோதனனைக் கொன்று, இந்தப் பூமியை நாம் ஆண்டு அனுபவிப்போம். பெரும் பெரும் வேள்விகளை எல்லாம் இயற்றி, சுகமாக வாழ்வோம்' என்று ஆறுதல் சொன்னீரே, அதைத்தானே இப்பொழுது உம் தம்பியர்கள் சொல்கிறார்கள். அதை அங்கீகரியாமல் எங்களை நீர் ஏன் துன்பப்படுத்துகிறீர்? தைரியமில்லாதவனால் பூமியை ஆள முடியாது. பொருளையும் அடைய முடியாது. நல்லோர்களை ஆதரிப்பதும், தீயோரை அடக்குவதும் அரசன் செய்ய வேண்டிய கடமை. தண்டிக்காமல் தீயோரைக் கட்டுப்படுத்த முடியாது. தீயவர்களாய்

இருந்த காரணத்தால்தான் கர்ணன், துரியோதனன் முதலானவர்களை நீர் கொன்றீர். அதற்காக நீர் வருந்த வேண்டாம். அப்படிக் கொன்றது குற்றமாகாது. சோர் வடையாமல் இந்தப் பூமண்டலத்தை ஆளும். தம்பியரின் மனம் மகிழச் செய்யும்'' என்று சொன்னாள்.

தம்பியர் பலவாறு சொல்லியும் திரௌபதி சொல்லியும் யுதிட்டிரர் ராஜ்ய பாரத்தை எற்கச் சம்மதிக்கவில்லை. துறவற வாழ்வை மேற்கொண்டால்தான் தனக்கு மன நிம்மதி ஏற்படும் என்று அவர் கூறினார்.

இதன் பின்னர், வியாச மகரிஷி யுதிட்டிரரை நோக்கி, "தரும நந்தன! இல்லறத்தையே சிறந்த தருமம் என்று அற நூல்கள் கூறுகின்றன. அரச குலத்தில் பிறந்தவன், நாட்டை ஆளப் பிறந்தவனே அன்றி, காடு செல்லப் பிறந்த வன் அல்லன். செங்கோல் செலுத்திய அரசன் சிறந்த பதவியை அடைவான். 'யுத்தம் செய்யாத அரசனையும் தேச சஞ்சாரம் செய்யாத பிராமணனையும், பாம்பு எலிகளை விழுங்குவதுபோல, பூமியானது விழுங்கிவிடும்' என்று பிருகஸ்பதி கூறி இருக்கிறார். ஆகையால், அரச பதவியை ஏற்று, செங்கோல் செலுத்து. அதுவே உனக்கு விதிக்கப் பட்ட சிறந்த தருமம்'' என்று சொன்னார்.

வியாசர் ஆறுதல் சொல்லியும்கூட, யுதிட்டிரர் சமா தானம் அடையவில்லை. "ராஜ்யத்தில் இருந்த ஆசையின் காரணமாக, சுற்றத்தார் பலரையும் குழந்தைகள் பலரை யும் கொல்லக் காரணன் ஆனேன். குலமே என்றால் அழிந்து போயிற்று. யாருடைய மடியில் புரண்டு நான் விளையாடி னேனோ, அந்தப் பீஷ்மரை, ராஜ்யத்தின் பொருட்டாய் நான் போரில் கொன்றேன். பொய் சொல்லி, ஆசாரியரைக் கொன்றேன். புறம்கொடாத வீரர் என் தமையன் கர்ணனைக் கொன்றேன். என்னைக் காட்டிலும் கொடிய பாவி வேறு யார் உளன்? இந்தப் பாவங்களுக்கு எல்லாம் கழுவாயாக, உண்டி முதலியவற்றைச் சுருக்கி, உடலை வாடச் செய்து, உயிரை நான் விட்டுவிடப் போகிறேன். அதனால் மறு பிறவி யிலாவது நற்பேறு அடையலாம்'' என்று சொன்னார்.

துயரம் தாங்காது யுதிட்டிரர் பலவாறு புலம்பினார்.

மீண்டும் வியாசர் யுதிட்டிரருக்கு ஆறுதல் சொல்லித் தேற்ற முயன்றார். "அரசனே! கரை கடந்து நீ சோகப் படுவது நியாயமன்று. உயர்வது தாழ்வதும், சேர்வது பிரிவதும், வாழ்வது மடிவதும் உலக இயற்கை. தெய்வத்தின் திருவுளப்படி நடப்பது நடக்கும். நீ செய்ய வேண்டிய கருமத்தைச் செய். அதைவிட்டு, விலகி இருக்கலாம் என்பது இயலாத காரியம். ஆகையால், குந்தி மைந்தனே! துயரப் படுவதை விட்டுவிடு; வெற்றி அடைந்து பெற்ற இந்தப் பூமியைப் பரிபாலனம் செய். அதைப் புறக்கணித்துத் தள்ளாதே" என்று சொன்னார்.

யுதிட்டிரர் பேசாமல் இருந்தார். இதைக் கவனித்த அர்ச்சுனன், கண்ணனை நோக்கி, "மாதவரே! சுற்றத்தாரைக் கொன்றதை நினைந்து நினைந்து. அரசர் சோகக் கடலில் மூழ்கி இருக்கிறார். அதனால், நாங்களும் அவதிப்படுகிறோம். அவருக்குள்ள சோகத்தை அகற்றும்" என்று வேண்டினான்.

இவ்வாறு அர்ச்சுனன் சொன்னதும், தாமரைக் கண்ணன் யுதிட்டிரர் பக்கம் திரும்பினார். தமது கைகளால் தரும புத்திரருடைய கையை அன்புடன் பற்றிக்கொண்டார். அப்போது யுதிட்டிரரின் முகம் அன்று அலர்ந்த தாமரை மலர்போல் விளங்கிற்று. கண்ணன், யுதிட்டிரரை நோக்கி, "அரசே! நீர் கவலைப்படக் கூடாது. போர்க்களத்தில் மாண்டவர்களை மீண்டும் பார்ப்பது சாத்தியப்படாத ஒரு காரியம். கனவில் கண்ட பொருள்களை நனவில் அடைய முடியாததுபோல, போர்க்களத்தில் மடிந்தவர்களையும் வாழ்வில் காண முடியாது. போரில் மடிந்த அரசர்களுக்கு நற்கதி உண்டு. ஆகையால் நீர் கவலைப்பட வேண்டாம்" என்று சொன்னார். பல கதைகள் சொல்லி விளக்கி, யுதிட்டிரருக்கு ஆறுதல் உண்டாக்க முயன்றார்.

இப்பொழுதும் சோகம் அகலாமல் யுதிட்டிரர் இருப்பதைக் கவனித்த வியாசர், "தரும நந்தன! மறைகளால் வகுக்கப்பட்டிருக்கும் தருமங்களைக் காப்பாற்ற வேண்டிய பெரும்

பொறுப்பு அரசனுடையது. நீதியைச் செலுத்தாவிட்டால் அரசன் பாவம் செய்தவன் ஆவான். தருமத்தைக் காவாது அரசன் அசட்டையாய் இருந்தால், அது தருமத்தைக் கொன்றதற்குச் சமம். அரசன் குடிமக்களைப் பாதுகாக்க வேண்டும்; தண்டிக்க வேண்டும்; ஆதரிக்க வேண்டும். கவலையை ஒழித்து இந்தக் காரியங்களைச் செய். அதுதான் உனக்குத் தருமம்', என்று கூறினார்.

வியாசர் இப்படிச் சொன்னதும், "உத்தமரே! தருமத்தை விட்டு விலகாத வழியில் சென்று, நான் நாட்டை ஆளக் கருதுகிறேன். அதற்கான வழிகளையும் தருமங்களையும் நீதிகளையும் எனக்குக் கூறுங்கள்; இவற்றைப்பற்றி எல்லாம் நான் விரிவாகத் தெரிந்துக்கொள்ள விரும்புகிறேன்" என்று கூறினார் யுதிட்டிரர்.

"அரசே, தருமங்களை நீ விரிவாகத் தெரிநதுகொள்ள விரும்பினால், பீஷ்மரிடம் கேட்டுத் தெரிந்துகொள். உனக்கு இருக்கும் ஐயங்கள் அனைத்தையும் அவர் அகற்றுவார்; இந்திரன் முதலிய தேவர்களை நேரில் பார்த்தவர் அவர்; பிருகஸ்பதியைப் போற்றி, அவரிடமிருந்து அரசியலைத் தெரிந்து கொண்டவர்; சுக்கிரரிடமிருந்து நீதி சாஸ்திரத்தைக் கற்றுக் கொண்டவர். சான்றோர் பலரை அடுத்து, சகல விஷயங்களையும் தெரிந்துகொண்டவர். அவருக்குத் தெரியாதது ஒன்றும் இல்லை. அவரிடம் கேட்டு, யாவற்றையும் தெரிந்துகொள்" என்று கூறினார் வியாசர்.

உடனே, யுதிட்டிரர், "மகரிஷியே! போரில் பீஷ்மரை நான் கபடமாக வதம் செய்தேன். அவரிடம் சென்று நான் நீதிபோதனை செய்யும்படி கேட்பது அடுக்குமா?" என்று கேட்டார்.

அதற்குக் கண்ணன், "அண்ணலே! நீர் கவலைப்பட்டுக் கொண்டிருப்பது முறையன்று; உம்மை அனைவரும் வேண்டுகிறார்கள்; குருஜாங்கல நாடு உம் வரவை எதிர்பார்த்து நிற்கிறது" என்று சொன்னார்.

யுதிட்டிரரும் ஆறுதல் பெற்று, நாட்டை ஆளச் சம்மதித்தார்.

# ராஜ்யாபிஷேகம்

சமாதானம் அடைந்த யுதிட்டிரர், திருதராட்டிர மன்னனை முன்னிட்டுக்கொண்டு, அத்தினபுரம் செல்ல முடிவு செய்தார்; தேவர்களையும் அந்தணர்களையும் வணங்கினார்.

பிறகு, உயர்ந்த பதினறு வெள்ளைக் குதிரைகள் பூட்டிய வெள்ளைத் தேரில் ஏறினார்; வந்திகள் கட்டியம் கூறி அவரைப் பெருமைப்படுத்தினார்கள். பீமன், குதிரைகளின் கடிவாளங்களைப் பிடித்தான். அர்ச்சுனன் சந்திரன் போன்ற வெள்ளைக் குடையைப் பிடித்தான். நகுலனும் சகதேவனும் சாமரங்கள் வீசினார்கள்.

திருதராட்டிரனும் காந்தாரியும் பல்லக்கில் ஏறிக் கொண்டு, பாண்டவர்களுக்கு முன்னே புறப்பட்டார்கள்.

கிருஷ்ணனும் சாத்தியகியும் பொன்மயமான தேரில் ஏறிக்கொண்டு, பாண்டவர்களுக்குப் பின்னே சென்றார்கள்.

குந்தி, திரௌபதி, சுபத்திரை முதலியவர்கள் விதுரரை முன்னிட்டுக்கொண்டு சென்றார்கள்.

யுதிட்டிரர் வருகிறார் என்பது தெரிந்ததும் அத்தின புரத்து மக்கள், தெருக்களை அலங்கரித்து, அவரை எதிர் கொண்டு வரவேற்க, கோலாகலமாக ஏற்பாடு செய்தார்கள். கொடிகளாலும் தோரணங்களாலும் வீதிகளை அலங்கரித்தார்கள். அகில் முதலிய நறுமணத் தூபங்களாலும் மலர்களாலும் வாசனைப் பொடிகளாலும் வீதிகள் பரிமளித்தன.

அத்தினபுரத்தினுள் யுதிட்டிரர் தம் நண்பர்களுடன் பிரவேசித்தார். ஆயிரக்கணக்கான மக்கள் கூட்டம் கூட்டமாக அரசரைக் காணத் திரண்டு நின்றார்கள்; சந்திரனைக் கண்டு மகிழ்ச்சியுறும் கடல்போல, ஜனத்திரள் ஆரவாரம் செய்து அரசரை வரவேற்றது.

அத்தினபுரத்துப் பெண்கள், திரௌபதியைப் பெரிதும் கொண்டாடினார்கள்.

யுதிட்டிரர், ராஜ வீதியைக் கடந்து, அரண்மனையை அணுகினார். நகரங்களிலிருந்தும் சிற்றூர்களிலிருந்தும் வந்

திருந்த ஜனங்கள் "அரசே! பகைவர்களை வென்று தருமத்தால் ராஜ்யத்தை நீர் அடைந்தது பெரும் பாக்கியம். ஆயிரக்கணக் கான ஆண்டுகள் எங்களுக்கு அரசராய் இருந்து, இந்தப் பூமண்டலத்தை, இந்திரன்போலப் பரிபாலனம் செய்யும்" என்று வாழ்த்தினார்கள். அந்தணர்கள் ஆசி கூறினார்கள்.

யுதிட்டிரர் தேரிலிருந்து இறங்கி, திருதராட்டிரன், தௌமியர் முதலியவர்களை முன்னிட்டுக்கொண்டு, ராஜ சபைக்குள் பிரவேசித்தார். அந்தணர்கள் ஆசிகூற, உயர்ந்த பொற்பீடத்தில், யுதிட்டிரர் கிழக்கு முகமாக உட்கார்ந்தார். அவருக்கு எதிரில் கிருஷ்ணனும் சாத்யகியும் ஒரு பொற்பீடத் தில் அமர்ந்தார்கள். அர்ச்சுனனும் பீமனும் அவருக்கு இரு மருங்கிலும் பின் புறத்தில் இருந்தார்கள். நகுலன், சக தேவன், குந்தி மூவரும் அழகிய பெரிய ஆசனத்தில் அமர்ந் தார்கள். விதுரர், தௌமியர், திருதராட்டிரன் முதலியோர் தனித்தனியே ஆசனங்களில் அமர்ந்தார்கள்.

ராஜ்யாபிஷேகத்துக்கு வேண்டிய ஏற்பாடுகள் நடந்தன. யுதிட்டிரரையும் திரௌபதியும் வெண்மையான ஒரு பீடத் தில் அமரச் செய்து, தௌமியர் ஓமம் செய்தார்.

இதன் பின்னர், கிருஷ்ணன் எழுந்து, சங்கத்திலிருந்த புனித நீரை எடுத்து, யுதிட்டிரரைப் பூமிக்கு அதிபதியாக்கி, அபிஷேகம் செய்தார். திருதராட்டிரனும் மற்றவர்களும் மஞ்சனப் புனித நீரைக்கொண்டு அபிஷேகம் செய்தார்கள்.

இன்னிசைகள் முழங்கின. அபிஷேகம் நடைபெற்ற யுதிட்டிரர் அந்தணர் முதலியவர்களுக்குத் தட்சணைகள் கொடுத்து, அவர்களின் ஆசீர்வாதங்களைப் பெற்றார்.

## ராஜ்யபாரம்

அந்தணர்கள் ஆசிகூறிப் பாராட்டியதும், யுதிட்டிரர் அவர்களிடம், "உங்கள் பாராட்டுப் பெற்ற நாங்கள் பாக்கிய சாலிகள்தாம். எங்கள் பெரிய தந்தை எங்களுக்குத் தெய் வம் ஆவார். அவர் விருப்பப்படி நடந்தால், அது என் விருப்

## ராஜ்யாபிஷேகம்

சமாதானம் அடைந்த யுதிட்டிரர், திருதராட்டிர மன்னனை முன்னிட்டுக்கொண்டு, அத்தினபுரம் செல்ல முடிவு செய்தார்; தேவர்களையும் அந்தணர்களையும் வணங்கினார்.

பிறகு, உயர்ந்த பதினாறு வெள்ளைக் குதிரைகள் பூட்டிய வெள்ளைத் தேரில் ஏறினார்; வந்திகள் கட்டியம் கூறி அவரைப் பெருமைப்படுத்தினார்கள். பீமன், குதிரைகளின் கடிவாளங்களைப் பிடித்தான். அர்ச்சுனன் சந்திரன் போன்ற வெள்ளைக் குடையைப் பிடித்தான். நகுலனும் சகதேவனும் சாமரங்கள் வீசினார்கள்.

திருதராட்டிரனும் காந்தாரியும் பல்லக்கில் ஏறிக் கொண்டு, பாண்டவர்களுக்கு முன்னே புறப்பட்டார்கள்.

கிருஷ்ணனும் சாத்தியகியும் பொன்மயமான தேரில் ஏறிக்கொண்டு, பாண்டவர்களுக்குப் பின்னே சென்றார்கள்.

குந்தி, திரௌபதி, சுபத்திரை முதலியவர்கள் விதுரரை முன்னிட்டுக்கொண்டு சென்றார்கள்.

யுதிட்டிரர் வருகிறார் என்பது தெரிந்ததும் அத்தினபுரத்து மக்கள், தெருக்களை அலங்கரித்து, அவரை எதிர் கொண்டு வரவேற்க, கோலாகலமாக ஏற்பாடு செய்தார்கள். கொடிகளாலும் தோரணங்களாலும் வீதிகளை அலங்கரித்தார்கள். அகில் முதலிய நறுமணத் தூபங்களாலும் மலர்களாலும் வாசனைப் பொடிகளாலும் வீதிகள் பரிமளித்தன.

அத்தினபுரத்தினுள் யுதிட்டிரர் தம் நண்பர்களுடன் பிரவேசித்தார். ஆயிரக்கணக்கான மக்கள் கூட்டம் கூட்டமாக அரசரைக் காணத் திரண்டு நின்றார்கள்; சந்திரனைக் கண்டு மகிழ்ச்சியுறும் கடல்போல, ஜனத்திரள் ஆரவாரம் செய்து அரசரை வரவேற்றது.

அத்தினபுரத்துப் பெண்கள், திரௌபதியைப் பெரிதும் கொண்டாடினார்கள்.

யுதிட்டிரர், ராஜ வீதியைக் கடந்து, அரண்மனையை அணுகினார். நகரங்களிலிருந்தும் சிற்றூர்களிலிருந்தும் வந்

திருந்த ஜனங்கள் "அரசே! பகைவர்களை வென்று தருமத்தால் ராஜ்யத்தை நீர் அடைந்தது பெரும் பாக்கியம். ஆயிரக்கணக்கான ஆண்டுகள் எங்களுக்கு அரசராய் இருந்து, இந்தப் பூமண்டலத்தை, இந்திரன்போலப் பரிபாலனம் செய்யும்" என்று வாழ்த்தினார்கள். அந்தணர்கள் ஆசி கூறினார்கள்.

யுதிட்டிரர் தேரிலிருந்து இறங்கி, திருதராட்டிரன், தெளமியர் முதலியவர்களை முன்னிட்டுக்கொண்டு, ராஜ சபைக்குள் பிரவேசித்தார். அந்தணர்கள் ஆசிகூற, உயர்ந்த பொற்பீடத்தில், யுதிட்டிரர் கிழக்கு முகமாக உட்கார்ந்தார். அவருக்கு எதிரில் கிருஷ்ணனும் சாத்யகியும் ஒரு பொற்பீடத்தில் அமர்ந்தார்கள். அர்ச்சுனனும் பீமனும் அவருக்கு இரு மருங்கிலும் பின் புறத்தில் இருந்தார்கள். நகுலன், சகதேவன், குந்தி மூவரும் அழகிய பெரிய ஆசனத்தில் அமர்ந்தார்கள். விதுரர், தெளமியர், திருதராட்டிரன் முதலியோர் தனித்தனியே ஆசனங்களில் அமர்ந்தார்கள்.

ராஜ்யாபிஷேகத்துக்கு வேண்டிய ஏற்பாடுகள் நடந்தன. யுதிட்டிரரையும் திரெளபதியும் வெண்மையான ஒரு பீடத்தில் அமரச் செய்து, தெளமியர் ஓமம் செய்தார்.

இதன் பின்னர், கிருஷ்ணன் எழுந்து, சங்கத்திலிருந்த புனித நீரை எடுத்து, யுதிட்டிரரைப் பூமிக்கு அதிபதியாக்கி, அபிஷேகம் செய்தார். திருதராட்டிரனும் மற்றவர்களும் மஞ்சனப் புனித நீரைக்கொண்டு அபிஷேகம் செய்தார்கள்.

இன்னிசைகள் முழங்கின. அபிஷேகம் நடைபெற்ற யுதிட்டிரர் அந்தணர் முதலியவர்களுக்குத் தட்சிணைகள் கொடுத்து, அவர்களின் ஆசீர்வாதங்களைப் பெற்றார்.

## ராஜ்யபாரம்

அந்தணர்கள் ஆசி கூறிப் பாராட்டியதும், யுதிட்டிரர் அவர்களிடம், "உங்கள் பாராட்டுப் பெற்ற நாங்கள் பாக்கிய சாலிகள்தாம். எங்கள் பெரிய தந்தை எங்களுக்குத் தெய்வம் ஆவார். அவர் விருப்பப்படி நடந்தால், அது என் விருப்

பத்தை அனுசரித்து நடந்ததாகும். உலகத்துக்கும் உங்களுக்கும் எங்களுக்கும் அவர்தான் அரசர். நான் இப்பொழுது சொல்லியவற்றை மனத்திற்கொண்டு நீங்கள் எப்பொழுதும் நடக்க வேண்டும்'' என்று சொன்னார்.

நகரங்களிலிருந்தும் கிராமங்களிலிருந்தும் வந்த குடிமக்களுக்கு, அவர்கள் திரும்பிப் போக, யுதிட்டிரர் அனுமதி கொடுத்தார். விடைபெற்றுக்கொண்டு அவர்கள் திரும்பினர்.

இதன் பின்னர், பீமசேனனை அவர் இளவரசாக்கினார்; விதுரரை மந்திரியாக நியமித்தார்; சஞ்சயனைப் பொருளாதார அதிகாரியாகவும், நகுலனைச் சேனைகளின் அதிகாரியாகவும், பகைவர்களையும் தீயவர்களையும் அடக்கப் பல்குனனையும் நியமித்தார். தௌமியரை, முக்கிய புரோகிதராக இருக்கச் செய்தார். சகதேவனை எப்பொழுதும் தம் அருகே இருக்குமாறு உத்தரவிட்டார்.

பிறகு அவர், விதுரர், சஞ்சயன், யுயுத்சு ஆகிய மூவரிடமும் "எங்கள் தந்தை திருதராட்டிரன் மனம் கோணாதவாறு, குறைவின்றி, யாவற்றையும் அவருக்கு நீங்கள் செய்ய வேண்டும். எது செய்தாலும் அவரிடம் தெரிவித்த பிறகே செய்ய வேண்டும்'' என்று உத்தரவிட்டார்.

பிறகு அவர் கண்ணனை நோக்கிக் கைகூப்பிக்கொண்டு, "யதுகுல திலகமே! உமது அருளாலும் யோசனையாலும் ஆற்றலாலும் தகப்பன் பாட்டன் வழியாக வந்த இந்த ராஜ்யம் எங்களுக்குக் கிடைத்தது. உமக்கு எங்கள் வணக்கம். உமது அருமை பெருமை எடுத்து உரைப்பது எளிதன்று. பலரும் உம்மைப் பாராட்டுகிறார்கள்'' என்று பல நாமங்களைச் சொல்லிக் கண்ணனை யுதிட்டிரர் துதித்தார்.

பதவிகளில் நியமித்த தம்பியர்களுக்கு அரண்மனைகளையும் அரசர் யுதிட்டிரர் ஏற்பாடு செய்தார். திருதராட்டிர மன்னரின் அனுமதி பெற்று, துரியோதனனுடைய அரண்மனையைப் பீமசேனனுக்கு வழங்கினார்; துச்சாதனனுடைய அரண்மனையை அர்ச்சுனனுக்குக் கொடுத்தார். துர்மர்ஷணனுடைய அரண்மனையை நகுலனுக்கும், துர்முகனுடைய அரண்மனையைச் சகதேவனுக்கும் வழங்கினார்.

யுயுத்சு, விதுரர், சஞ்சயன், தௌமியர் ஆகியோர் தத்தம் மாளிகை சென்றனர்.

பீமன், அர்ச்சுனன் முதலானவர்களும் தத்தமக்கு ஒதுக்கப்பட்ட அரண்மனைகளுக்குப் போனார்கள். கண்ணன், சாத்யகியை அழைத்துக்கொண்டு, அர்ச்சுனனுடைய அரண்மனைக்குச் சென்றார். அன்று இரவு எல்லோரும் திருப்தியாகச் சாப்பிட்டு விட்டு, நன்றாக உறங்கினார்கள். மறுநாள் பொழுது புலர்ந்ததும், தத்தம் கடமைகளை முடித்துக் கொண்டு, யுதிட்டிரரிடம் வந்தார்கள்.

பிறகு, அம்புப் படுக்கையில் படுத்திருக்கும் பீஷ்மரைத் தரிசிக்க, அங்கிருந்து எல்லாரும் சென்றார்கள். ஓகவதி ஆற்றங்கரையில், பல முனிவர்கள் புடை சூழ்ந்து இருக்க, பீஷ்மர் அம்புப் படுக்கைமீது படுத்திருந்தார்.

பீஷ்மரைக் கண்டவுடன், சிறிது தூரத்திலேயே யுதிட்டிரர், கண்ணன், கிருபர் முதலானவர்கள் தத்தம் தேர்களிலிருந்து இறங்கிக்கொண்டார்கள். அடக்கத்துடனும் பணிவுடனும் சென்று வியாச முனிவரை வணங்கினார்கள். பிறகு எல்லாரும் பீஷ்மரிடம் போனார்கள்; தவத்தின் பெருமையைப்பற்றிப் பீஷ்மரிடம் வினவிவிட்டு, அவர் அருகே கண்ணபிரான் உட்கார்ந்தார். அதன் பின்னர் மற்றவர்களும் உட்கார்ந்தார்கள்.

கண்ணன் பீஷ்மரை நோக்கி, "வாக்குவன்மையுடையவரே! பொறிகள் முன்னைப்போல் தெளிவுடன் இருக்கின்றனவா? அம்புகளால் அடிபட்டு இருக்கும் உமக்கு உடம்பு சோர்வடையாமல் இருக்கிறதா? உம்மைப்போல் புலன் அடக்கம் உடையவர்களைக் காண்பது அரிது. உம்மைத் தவிர்த்து மரணத்தை வென்ற அரசனை நாங்கள் கண்டது இல்லை. சுற்றத்தாரின் அழிவினால் பாண்டவர்களில் மூத்தவர் பெரிதும் புலம்புகிறார். யாவற்றையும் அறிந்த நீர், அவருடைய சோகத்தை அகற்ற வேண்டும்" என்று சொன்னார்.

கண்ணன் இப்படிச் சொன்னதும், பீஷ்மர் அவரைப் பலவாறு போற்றிப் புகழ்ந்தார். "வாசுதேவரே! நீர் யாவற்றையும் அறிந்தவர். அறம், பொருள், இன்பம் இவற்றைப்

போதிக்கும் அருகதை உமக்குத்தான் உண்டு. நான் காய முற்று, களைப்படைந்து இருக்கிறேன். புத்தியில் சோர்வு இருக்கிறது'' என்று சொன்னார்.

அதற்குக் கண்ணன், ''நீர் என்பால் மிகுந்த பக்தியுள்ள வர். உமக்கு நான் அருள் செய்கிறேன். உடல் துன்பம் குறைந்து, உமக்குப் புத்தியில் தெளிவு ஏற்படும்; நீரே உபதேசம் செய்யும்'' என்று மீண்டும் வற்புறுத்தினார் கண்ணன்.

இது சமயம், மாலை நேரம் வந்துவிட்டது. முனிவர்கள் விடைபெற்றுக்கொண்டு திரும்பினார்கள். யுதிட்டிரர், கண் ணன், கிருபர் முதலானவர்களும், ''நாளை வருகிறோம்'' என்று கூறிப் பீஷ்மரிடம் விடைபெற்றுக்கொண்டு, தத்தம் அரண் மனைகளுக்கும் மாளிகைகளுக்கும் திரும்பினார்கள்.

## நாணப்படுகிறார்

மாளிகை திரும்பிய கண்ணன், நன்றாக உறங்கினார். பொழுது புலர்வதற்குச் சிறிதுநேரம் முன்னதாக விழித்துக் கொண்டார். காலைக் கடன்களை முறைப்படி முடித்த பின்னர், சாத்யகியை நோக்கி, ''பீஷ்மரைக் காணச் செல்ல யுதிட்டிரர் தயாராக இருக்கிறாரா என்பதை அறிந்து வா'' என்று சொன்னார்.

சாத்யகி புறப்பட்டுச் சென்றான்; யுதிட்டிரரைச் சந் தித்து, ''அரசே! குதிரைகள் பூட்டித் தேர் தயாராக இருக் கிறது. பீஷ்மரிடம் செல்லக் கிருஷ்ணன் தங்கள் வரவை எதிர்பார்க்கிறார்'' என்று தெரிவித்தான்.

யுதிட்டிரர், ''அர்ச்சுனா! எனது தேரைச் சித்தப்படுத்து சேனைகள் நம்முடன் வரவேண்டாம். நாம் மட்டும் போக லாம். நமது மற்றப் பரிவாரங்களும் வரவேண்டாம். இரகசிய மான தத்துவங்களைப் பீஷ்மர் நமக்கு உபதேசிக்கப் போகிறார். அப்போது விவேகக் குறைவானவர்கள் நம்முடன் இருக்கக் கூடாது'' என்று கூறினார்.

''தேர் தயார்'' என்று அர்ச்சுனன் தெரிவித்தா

பாண்டவர்கள் ஐவரும் கண்ணனுடைய விடுதிகளுக்குச் சென்றார்கள். கண்ணன் சாத்யகியுடன் ஒரு தேரில் ஏறிக் கொண்டார். எல்லாரும் பீஷ்மர் படுத்திருக்கும் இடத்தை அடைந்தார்கள். தேர்களிலிருந்து இறங்கிக்கொண்டு, அங்குள்ள முனிவர்களைக் கைகூப்பி வணங்கினார்கள். அப்புப் படுக்கையில் கம்பீரமாகப் படுத்திருக்கும் பீஷ்மரைக் கண்ட யுதிட்டிரர், பயந்து நடுங்கினார். பீஷ்மருடன் பேசுவதற்கு அவருக்குத் தைரியம் வரவில்லை. ஆகவே, அவர் கண்ணனிடம், "தேவகி மைந்தரே! பாட்டனாரிடம் பேச்சைத் தொடங்குவதற்கு நீர்தான் திறமையுள்ளவர்" என்று சொன்னார்.

அதன்படி கண்ணன் பீஷ்மரிடம், "அண்ணலே! இரவு உமக்குச் சுகமாகக் கழிந்ததா? சோர்வின்றி உற்சாகத்துடன் இருக்கிறீரா? மனத் தெளிவு ஏற்பட்டு இருக்கிறதா?" என்று கேட்டார்.

"விருஷ்ணி குலத் தோன்றலே! எனக்கு யாவும் உமது அருளால் தெளிவாய்த் துலங்குகின்றன. தருமங்களையும் அவற்றின் பிரிவுகளையும் விவரிக்கும் ஆற்றல் எனக்கு ஏற்பட்டு இருக்கிறது. மீண்டும் இளமை பெற்றது போன்ற தெம்பு எனக்கு வந்து இருக்கிறது. ஆயினும் யாது காரணம் பற்றி யுதிட்டிரனுக்கு நீர் தரும உபதேசம் செய்யாமல் என்னை உபதேசம் செய்யச் சொல்கிறீர்?" என்று கேட்டார்.

"பீஷ்மரே! உமக்கு இப்பொழுது இருப்பதைக் காட்டிலும் இன்னும் அதிகமான கீர்த்தி வேண்டும் என்பதற்காகத் தான், உம்மை நான் உபதேசம் செய்யச் சொல்கிறேன். அதனால் உமது புகழ் இந்தப் பூமியில் எப்பொழுதும் நிலை பெற்று இருக்கும். பாண்டவர்கள் கேட்கும் கேள்விகளுக்கு நீர் கூறும் பதில்கள் வேதம்போல் பெருமை பெற்றுவிளங்கும். தருமத்தைத் தெரிந்துகொள்ள விருப்புடன் கேட்பவர்களுக்குத் தருமம் தெரிந்தவர்கள் அவசியம் உபதேசிக்க வேண்டும் என்று பெரியோர்கள் கூறி இருக்கின்றனர். உபதேசியாமல் இருந்தால் அது கொடுமையான குற்றத்தின் பாற்படும். பரதகுல திலகமே! தெரிந்துகொள்ள விரும்பி உம்மை அடுத்து

இருக்கும் உம் புதல்வர்களுக்கும் பேரன்மார்களுக்கும் நிரந்தரமான தருமத்தை நீர் உபதேசியும்'' என்று சொன்னார்.

"கோவிந்தரே! தருமங்களைப்பற்றி யுதிட்டிரன் என்னிடம் கேட்பானாயின் விருப்புடன் சொல்ல நான் சித்தமாய் இருக்கிறேன். எவன் அரசனாய் இருப்பதில் மகரிஷிகள் மகிழ்ச்சி அடைகிறார்களோ அந்த யுதிட்டிரன் தருமங்களைப் பற்றி என்னிடம் கேட்கட்டும்'' என்று கூறினார் பீஷ்மர்.

"அரசே! பெரியோர், சம்பந்திகள், உறவினர்கள், அன்பர்கள், ஆசிரியர்கள் இவர்கள் எல்லாரையும் பாணத்தால் அடித்துக் கொன்ற காரணத்தால், உம்மை அணுக யுதிட்டிரர் நாணப்படுகிறார். சாபம் நேருமோ என்ற அச்சமும் யுதிட்டிரருக்கு இருக்கிறது. அதனால்தான் உம்மை அணுக அவர் நடுங்குகிறார்'' என்று பதில் சொன்னார் கண்ணன்.

அதற்குப் பீஷ்மர், "கேசவரே! போரில் பகைவர்களைக் கொல்வது தருமத்துக்கு விரோதம் அன்று. தன்னை எதிர்ப்பவர்கள் யாராக இருந்தாலும் அவர்களைக் கொல்லலாம் என்பது விதி. தந்தை, பாட்டன், குரு, சம்பந்தி என்று பார்க்காமல் அவர்களை வதம் செய்யலாம்'' என்று பதில் சொன்னார்.

இப்படிப் பீஷ்மர் சொன்னதும், மிகுந்த பணிவுடனும் அடக்கத்துடனும் பீஷ்மருக்கு எதிரே சென்று அவருடைய பாதங்களைத் தொட்டு, யுதிட்டிரர் வணங்கினார்.

மகிழ்ச்சியுடன் உச்சி மோந்து, அவரைப் பீஷ்மர் உட்காரச் சொன்னார். "குருகுலத் தோன்றலே! சிறிதும் பயம் வேண்டாம். கேட்க விரும்புவதைக் கேள்'' என்று கூறினார் பீஷ்மர்.

உடனே யுதிட்டிரர் பீஷ்மரையும் கண்ணனையும் வணங்கினார். "பிதாமகரே! அரச தருமத்தை ஆதாரமாகக் கொண்டுதான், மற்றத் தருமங்கள் நிலைபெற்றிருக்கின்றன. அரசர்கள் நீதி செலுத்துவதைப் பொறுத்தே, உலக நலன் இருக்கிறது. ஆகையால் ராஜதருமத்தைப்பற்றி, தாங்கள் எனக்கு முதலில் கூற வேண்டும்'' என்று யுதிட்டிரர் வேண்டினார்.

# ராஜதருமம்

## அரசன்

பீஷ்மர், யுதிட்டிரரை நோக்கி, "மைந்தா! அரசர்களுக்கு உரிய கடமைகளைப்பற்றி உனக்கு நான் கூறுகிறேன். கவனத்தோடு கேள்.

"அரசன் எப்பொழுதும் விடாமுயற்சியோடும் ஊக்கத்தோடும் இருக்க வேண்டும். தெய்வ உதவியும் ஊக்கமும் தான் காரியத்தை நிறைவேற்றத் தேவைப்படும் சாதனங்கள் ஆகும். தெய்வ உதவியைக் காட்டிலும் ஊக்கமே மேலானது.

"அரசன் சத்தியசீலனாய் இருக்க வேண்டும். அதனால் இம்மையிலும் மறுமையிலும் அரசன் நலம் அடைவான்.

"அரசாங்க சம்பந்தமான ரகசியங்களைத் தவிர்த்து, மற்றச் சமயங்களில் எல்லாம், எப்பொழுதும் அரசன் உண்மையையே பேச வேண்டும்.

"அரசன் சாந்த குணமுள்ளவனாய் இருந்தால் உலகம் அவனை மீறி நடக்கும்; கொடியவனாக இருந்தால், உலகம் அவனைக் கண்டு நடுங்கும்.

"அரசன் அந்தணர்களை ஆதரிக்கக் கடமைப்பட்டவன்; ஆயினும், அந்தணர்கள் தருமத்தை மீறி நடந்தால், ஆயுதம் ஏந்தி, அவர்களைத் தண்டிக்க அரசனுக்கு அதிகாரம் உண்டு.

"கர்ப்பிணிபோல் அரசன் நடந்துகொள்ள வேண்டும்; தன் மனத்துக்கும் நாவுக்கும் ருசியான ஆகாரத்தை உண்ணாமல், கரு வளர்வதற்கு ஏற்ற ஆகாரத்தைக் கர்ப்பிணி உண்பதை ஒப்ப, அரசன் நடந்துகொள்ள வேண்டும். தனக்கு நன்மை தரும் காரியத்தை விலக்கிவிட்டு, உலகத்துக்கு நன்மை பயக்கும் காரியத்தை அரசன் எப்பொழுதும் செய்ய வேண்டும்.

"வேலைக்காரர்களுடன் அரசன் பரிகாச வார்த்தைகள் பேசி விளையாடக் கூடாது. அப்படி நடந்தால் அரசனை அவர்கள் அவமதிக்கத் துணிவார்கள்; அவன் இடும் கட்டளைகளைப் பயமின்றி மீறி நடப்பார்கள். அரசனுக்குப் புத்தி கூறவும் முற்படுவார்கள். என் சொற்படிதான் அரசன் நடக்கிறான் என்று தற்பெருமை யடித்துக் கொள்வார்கள். ஆகையால், வேலைக்காரர்களுடன் பழகும் விஷயத்தில், அரசன் எச்சரிக்கையாய் இருக்க வேண்டும்.

"அரசாங்க ரகசியங்கள் வெளிப்படாமல் இருப்பதில் அரசன் கண்ணும் கருத்துமாய் இருக்க வேண்டும்.

"அரசன் விடாமுயற்சியுடையவனாய் இருக்க வேண்டும்; அரசாங்க உறுப்புகள் எதற்காயினும், ஒருவன் தீங்கு செய்தால், தீங்கு செய்பவன் நண்பனாயினும் ஆசானாயினும பாராது அவனைக் கொல்ல வேண்டும்.

"கொடுக்க வேண்டிய கூலி முதலியவற்றைக் காலா காலத்தில் அரசன் கொடுத்துவிட வேண்டும்.

"சம்பள மில்லாதவர்களை அரசன் காப்பாற்ற வேண்டும்; சம்பளமுள்ளவர்களை அரசன் கவனிக்க வேண்டும்.

"தீயோரிடமுள்ள பொருளைக் கைப்பற்றி, நல்லோருக்கு அரசன் வழங்க வேண்டும்.

"தகப்பன் வீட்டில் பிள்ளைகள் வாழ்வதுபோல, நாட்டில் மக்கள் அமைதியுடன் வாழும் வகையில், அரசன் ஆட்சி செலுத்த வேண்டும்.

"ஓதுவியாத ஆசிரியன், ஓதாத ரித்விக், பாதுகாவாத மன்னன், பிரியமற்ற வார்த்தைகளைச் சொல்லுகின்ற மனைவி, கிராமத்திலேயே இருக்க விரும்பும் இடையன், காட்டில் இருக்க விரும்பும் நாவிதன் இந்த அறுவரையும் உடைந்து போன மரக்கலத்தை ஒதுக்கித் தள்ளுவதுபோல, தள்ளிவிட வேண்டும் என்று பிருகஸ்பதி கூறி இருக்கிறார்.

"முயற்சியுள்ள மனிதன் பண்டிதனைவிட மேலானவன். வீரமுள்ள அரசனைப் பண்டிதர்களும் போற்றுவார்கள். முயற்சியில்லாத அரசன் புத்திசாலியாய் இருப்பினும், பயன் படாது.

"ராஜ்ய பாரம் என்பது மிகப் பெரிய காரியம். கொடிய சிந்தையுள்ளவனுலும் நாட்டை நீடித்து ஆள முடியாது; சாந்த குணமுள்ளவனுலும் நீடித்து ஆள முடியாது; இரண்டு குணங்களும் கலந்துள்ள மனிதன்தான் நாட்டை ஆளத் தகுதிவாய்ந்தவன்.

"குருகுலச் செம்மலே! அரசனுக்கு உரிய தருமங்களைப் பற்றி இப்பொழுது சிறிது சொன்னேன். உனக்கு ஐயமுள்ள விஷயங்களைப்பற்றி மறுபடியும் கேள்; விளங்கச் சொல்லு கிறேன்" என்று சொன்னர் பீஷ்மர்.

பீஷ்மர் சொல்லி ஓய்ந்ததும், வியாசர், கிருஷ்ணன் முதலானவர்கள், "நல்லது, நல்லது" என்று சொல்லி அவரைப் பாராட்டினர்கள்.

யுதிட்டிரர் கண்களில் நீர் ததும்ப, பீஷ்மரின் கால்களைத் தொட்டு வணங்கினர். "பெரியீர்! பகலவன் மறையப் போகிருன். எனக்கு உள்ள ஐயங்களை, நாளை வந்து தங்களிடம் நான் கேட்டுத் தெரிந்துகொள்கிறேன்" என்று சொன்னர்.

பிறகு கண்ணன், கிருபர், யுதிட்டிரர் ஆகியோர் பீஷ்மரை வலம் வந்து விடைபெற்றுக்கொண்டு தேர்களில் ஏறினர்கள். திருஷத்வதி நதிக் கரையை அடைந்து, தேர்களிலிருந்து இறங்கிக்கொண்டு சந்தியாவந்தனம் செய்தார்கள். பிறகு அங்கிருந்து புறப்பட்டு அத்தினபுரியை அடைந்தார்கள்.

## அரச பதவி

மறுநாள் பொழுது புலர்ந்ததும், எழுந்து காலைக்கடன்களை முடித்துக்கொண்டு, பாண்டவர்களும் யாதவர்களும் தேர்களில் ஏறிப் பீஷ்மரிடம் சென்றர்கள். வியாசர் முதலான ரிஷிகளை முதலில் வணங்கிவிட்டு, பிறகு பீஷ்மரை அணுகி, "இரவு சுகமாகக் கழிந்ததா?" என்று நலம் விசாரித்தார்கள். எல்லோரும் பீஷ்மரைச் சுற்றி அமர்ந்த பின், யுதிட்டிரர், பீஷ்மரைக் கைகூப்பி வணங்கிவிட்டு, அடியில் வரும் கேள்வியை அவரிடம் கேட்டார்.

"பிதாமகரே! வாய், வயிறு, தசை, எலும்பு, குருதி எல்லாம் சகல மானுடர்களுக்கும் ஒன்றுபோலவே இருக்கின்றன. அப்படி இருந்தும், ஒருவன் மட்டும் மானுடர்களுக்கு மேம்பட்டவனாக விளங்கி, அரசனாக இருக்கக் காரணம் என்ன ? அரச பதவி என்பது உலகில் எவ்வாறு தோன்றியது? அரச பதவி சாமானியமானதன்று; ஆகலால் அது ஏற்படுவதற்கு உரிய காரணம் சிறிய காரணமாய் இருக்க முடியாது. ஆகையால் இவற்றை எல்லாம் பற்றி எனக்கு விரிவாகச் சொல்ல வேண்டும்" என்று சொன்னார்.

அதற்குப் பீஷ்மர், "அரசனே! அரச பதவி ஏற்பட்ட விதத்தை உனக்குக் கூறுகிறேன் கேள். ஆதியில் மக்கள் தருமத்துக்குக் கட்டுப்பட்டு ஒழுகினார்கள். அதனால் அரசன், ராஜ்யம், தண்டனை, தண்டிப்பவன் ஆகியவை தேவையில்லாமல் இருந்தன. காலக்கிரமத்தில் வேலை செய்வதே சிரமமாகத் தோன்றியதால் மானுடர்கள் தவறு செய்யத் தலைப்பட்டார்கள். அறிவுகுன்றி மக்கள் ஆசை வயப்பட்டார்கள். தம்மிடமில்லாத பொருள்களை அடைவதில் விருப்பம் கொண்டார்கள். அதன் பயனாய், செய்யத்தக்கது இன்னது செய்யத்தகாதது இன்னது என்று பகுத்தறிய முடியாமல் தவித்தார்கள். பேசத்தகாததைப் பேசினார்கள்; செய்யத்தகாததைச் செய்தார்கள்; சேரத்தகாத மடந்தையரைச் சேரத் தலைப்பட்டார்கள்; தின்னத் தகாததைத் தின்றார்கள்.

இதனால் தரும வரம்பு குன்றி, மானுடர்கள் அவதிப்பட்டார்கள்; மறைகள் அழிந்தன. இந்தப் போக்கைக் கண்டு பயமடைந்த தேவர்கள் பிரம்மாவை அணுகி, "பகவானே! ஆசைக்கும் கோபத்துக்கும் வயப்பட்டு, மானுடர்கள் தரும வரம்பை மீறி, நடக்கத் தலைப்பட்டுவிட்டார்கள். வரம்பு கடவாமல் நடக்க வழி செய்தாலல்லது, உலகம் அழிந்து போகும். அதற்கு ஆவன செய்து, மானுடர்களைத் தரும நெறியில் நிற்கச் செய்ய வேண்டும்" என்று வேண்டினார்கள்.

"தேவர்களே! நீங்கள் பயப்பட வேண்டாம். தரும நெறியில் மானுடர்கள் நிற்பதற்கான ஏற்பாட்டை நான்

செய்கிறேன். அறம், பொருள், இன்பம் இந்த மூன்றையும் பற்றி விரிவான நூல் ஒன்றை நான் இயற்றுகிறேன்" என்று சொல்லி, இலட்சம் அத்தியாயங்கள் கொண்ட ஒரு நீதி நூலை, பிரம்ம தேவர் இயற்றினர்.

இயற்றி முடித்ததும் இந்திரன் முதலான தேவர்களை நோக்கி, "அறம், பொருள், இன்பம் இந்த மூன்றையும் பற்றி உலக நலத்தின் பொருட்டாய் இந்த நூலில் நான் விவரித்து இருக்கிறேன். பாதுகாத்தல், தண்டித்தல் இரண்டும் அடங்கிய இந்த நூல் தண்டநீதி என்னும் பெயரால் உலகில் வழங்கும்" என்று சொன்னர்.

முதன் முதலில் இந்த நீதி நூலை, உமையின் பதியான சிவபெருமான் கற்றார். அதன் சாரத்தைப் பதினயிரம் அத்தியாயங்களில் அவர் சுருக்கினர்.

தேவேந்திரன் பதினயிரம் அத்தியாயங்கள் கொண்ட நீதிநூலைச் சிவபெருமானிடமிருந்து கற்றுக்கொண்டான். பிறகு அதன் சாரத்தை ஐயாயிரம் அத்தியாயங்களில் இந்திரன் சுருக்கினன்; அதைப் பிருகஸ்பதி மூவாயிரம் அத்தியாயங்களாகச் சுருக்கினர்; அதைச் சுக்கிராச்சாரியார் ஆயிரம் அத்தியாயங்களாகச் சுருக்கிச் செய்தார்.

இதன் பின்னர், தேவர்கள், மனிதர்களை அடக்கியாளத் தக்க ஒருவனை உண்டாக்கித் தருமாறு வேண்டினர்.

திருமால் சம்மதித்து, விரஜஸ் என்னும் ஒரு புதல்வனை உண்டுபண்ணினர். அந்த விரஜஸ் பூமியை ஆள விரும்பவில்லை; அவருடைய புதல்வர் கீர்த்திமான் என்பவரும் அரசாளப் பிரியப்படாது, தவத்தில் நாட்டமுடையவராய் இருந்தார்; அவர் மகன் கர்த்தமரும் தவம் செய்யச் சென்றுவிட்டார். கர்த்தமரின் புதல்வன் அனங்கன் என்பவன் உலகத்தை நன்கு பரிபாலித்தான். இவன் புதல்வன் அதிபலன் என்பவனும் செங்கோல் செலுத்தி, குடிமக்களைப் பாதுகாத்தான். பிறகு இவன் சுந்தை என்னும் பெண்மீது மோகம் கொண்டு, அறிவு மயங்கிப் புலன் அடக்கமின்றி வாழ்ந்தான்.

"அவனுக்குச் சுந்தையிடம் வேனன் என்பவன் பிறந்தான். தரும வரம்பை மீறி நடக்கத் தலைப்பட்டதால் வேனனை, ரிஷிகள் குசப்புற்களால் அடித்துக் கொன்றுவிட்டார்கள்.

"இந்த வேனனுடைய வலக்கையிலிருந்து, ரிஷிகள் ஒருவனை உண்டாக்கினார்கள். அவனுக்குப் பிருது என்று பெயர். இவன் செங்கோல் ஓச்சிப் பூமியை நன்கு பரிபாலித்தான். மக்களின் மனம் மகிழும்படி ஆட்சி செய்த காரணத்தால், அவனுக்கு அரசன் என்ற பெயர் உண்டாயிற்று.

"அரசன் திருமாலின் அம்சம். அவனுடைய பாதுகாப்பு இருந்தால்தான் செல்வமும் தருமமும் செழித்தோங்கும். ஆகையால் அரசனை மீறி எவனும் நடக்கக் கூடாது" என்று பீஷ்மர் சொன்னார்.

* * *

அரச பதவியின் பெருமையைப் பீஷ்மர் கூறி முடித்ததும், யுதிட்டிரர் அவரைக் கைகூப்பி வணங்கினார். "பரத குலத்தில் உதித்த உத்தமரே! எல்லாச் சாதியாருக்கும் பொதுவான தருமங்கள் யாவை? அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் இவர்களுக்குச் சிறப்பாக உள்ள தருமங்கள் யாவை? அரசனும் அரசாங்கமும் விருத்தியடைவதற்கு என்ன செய்ய வேண்டும்? குடிமக்களும் சிப்பந்திகளும் எதனால் விருத்தி அடைகிறார்கள்?" என்று கேட்டார்.

"அரசனே! முதலில் நான்கு வருணத்தாருக்கும் பொதுவான தருமத்தைக் கூறுகிறேன் கேள். கோபமின்மை, சத்தியம் பேசுதல், தானம் செய்தல், தன் மனைவியிடத்தில் குழந்தையை உண்டுபண்ணுதல், சுத்தமாக இருத்தல், துரோகம் செய்யாமை, நேர்மையாக வாழ்தல், பேணத்தக்கவர்களைப் பேணுதல் இவை அனைத்தும் அனைவருக்கும் பொதுவான தருமம்.

"அந்தணர்களுக்கு உரிய சிறப்பான தருமம், அடக்கமாக வாழ்தல், வேதம் ஓதல், ஓதுவித்தல் இவை மூன்றும் ஆம்

னதைச் செய்தாலும் செய்யாவிட்டாலும், வேதம் ஓதல், பிராமணனுக்கு விதிக்கப்பட்ட கட்டாயமான கடமையாகும்.

"அரசன் தானம் கொடுக்க வேண்டும். அவன் தானம் பெறுதல் கூடாது; வேள்விகள் இயற்ற வேண்டும்; ஆனால் புரோகிதனாக இருந்து, தானே வேள்விகளை நடத்தக் கூடாது; வேதம் ஓத வேண்டும். ஆனால், ஓதுவித்தல் கூடாது. குடிமக்களைக் காப்பதும் திருட்டு நடைபெறாமல் தடுப்பதும், அரசனின் தலையாய கடமை. எதைச் செய்தாலும் அல்லது செய்யாவிடினும், குடிமக்களைப் பாதுகாத்தல் என்பதை மட்டும் அரசன் அவசியம் செய்ய வேண்டும்.

"வணிகனுக்கு உரிய தருமம் தானம் செய்தல், நேரிய வழியில் பொருள் ஈட்டல், யாகம் செய்தல், வேதம் ஓதல் பசுக்களைப் பாதுகாத்தல். இவை யாவும் வணிகருக்கு விதிக்கப்பட்ட தருமங்களாம்.

"மேலே கூறப்பட்ட மூன்று வருணத்தாருக்கும் பணிவிடை செய்தலே சூத்திரனுக்கு விதிக்கப்பட்ட தருமமாகும்."

"எல்லாத் தருமங்களுக்கும் ராஜ தருமம் முக்கிய ஆதாரம். யானையின் கால் அடிக்குள் மற்ற விலங்குகளின் காலடிகள் அடங்கிவிடுவதுபோல, ராஜ தருமத்துக்குள் மற்றத் தருமங்கள் அனைத்தும் அடங்கிவிடுகின்றன."

## ஆட்சி முறை

"மானுடர்களுக்கு அதிபதியான அரசனைத் தெய்வத்தின் அம்சம் என்று அந்தணர்கள் கூறி இருக்கிறார்கள். அதை எனக்கு விளக்கிச் சொல்ல வேண்டுகிறேன்" என்று சொன்னார் யுதிட்டிரர்.

"அறிவில் சிறந்த அரசனே! தருமம் உலகில் நிலைத்து இருப்பதற்குக் காரணம் அரசன்தான். அரசன் இல்லாவிடில் மக்கள் ஒருவருடன் ஒருவர் சண்டையிட்டுக் கொள்வார்கள்;

பலம் குன்றியவர்களின் பொருள்களைப் பலசாலிகள் பறித்துக் கொள்வார்கள்; எதிர்த்தால் அவர்களைக் கொன்றுவிடுவார் கள். பெண்டிர், பிள்ளை, செல்வம் எதுவுமே ஒருவனிடம் நிலைத்து இருக்க மாட்டாது. எனது. உனது என்ற எண்ண மும் அற்றுப்போகும். களவு அதிகரித்துவிடும். தருமம் செய்ய விரும்புபவர்கள் தருமத்தைச் செய்ய முடியாது: அதருமம் மேலோங்கிவிடும். வாணிபமும் விவசாயமும் நடைபெற மாட்டா: தொழில்கள் அபிவிருத்தி அடையா. தாய், தந்தை, பெரியோர், ஆசிரியர், விருந்தினர், குரு இவர் கள் துன்பங்களுக்கு இலக்காவர். மக்கள் அகாலத்தில் அழிந்து போவார்கள். வியபிசாரம் குற்றமாகாத நிலை உண் டாகும். விலங்கினங்களும் தமது இயல்புக்கு மாறுபாடாக நடக்கத் தலைப்படும். ஜனங்கள் கட்டுப்பாடு இன்றி, தம் மனம் போனவாறு நடப்பார்கள். நாட்டில் வறுமையும் பிணியும் அதிகரிக்கும்.

"அரசனுடைய பாதுகாவல் செம்மையாக இருக்கு மாயின், மனிதர்கள் பயமின்றி வாழ்வார்கள்; கதவைத் திறந்து போட்டுவிட்டே படுத்து உறங்குவார்கள்; ஆடவர் துணையின்றி, மாதர்கள் தைரியமாக வெளியே செல்வார்கள்; யாவரும் ஒழுக்கசீலர்களாக இருப்பார்கள்; அரசனுக்கு ஏற்ப நடப்பார்கள்.

"மனித வடிவில் நடமாடும் தெய்வம் என அரசனை மக்கள் கருத வேண்டும். அக்கினி, ஆதித்தன், மிருத்யு, குபே ரன், யமன் இந்த ஐந்து தேவதைகளின் அம்சத்தைப் பெற்ற வன் அரசன். பாவிகளைத் தனது வல்லமையால் அரசன் அக்கினிபோலக் கொளுத்துகிறான்; யாவரையும் சாரர்கள் மூலம் கண்காணித்து நலம் செய்வதால் ஆதித்தன் ஆகிறான்; கெட்ட நடையுள்ள மனிதர்களைத் தண்டித்து அழிப்பதால் மிருத்யுவாகிறான்; அதரும வழியில் செல்பவர்களைத் தண்டிப் பதால் யமன் ஆகிறான். ஜனங்களுக்கு உபகாரம் செய்வதால் குபேரன் ஆகிறான்.

"பிள்ளை, நண்பன், உடன்பிறந்தான், உயிர்த்தோழன் யாராய் இருப்பினும், அரசனுக்கு விரோதமாக நடந்தால்,

அவன் சுகத்தை அடைய மாட்டான். அரசனுடைய சினத்துக்கு ஆளானவர்கள் மிச்சமின்றி அழிந்து போவார்கள்.

* * *

"அரசன் முதலில் தன்னை வெல்ல வேண்டும்; பிறகு மற்றவர்களை வெல்ல முயல வேண்டும். தன்னை ஜெயிக்காத அரசனால் பகைவனை ஒருபோதும் ஜெயிக்க முடியாது. ஐம்பொறிகளையும் அடக்கிக் கட்டுப்படுத்தி வாழ்வதே தன்னை ஜெயிப்பதாகும்.

"குருகுலத் தோன்றலே! கோட்டைகள், எல்லைகள், சோலைகள், தோட்டங்கள், மக்கள் மிகுதியாகக் கூடும் இடங்கள், இரகசியமான இடங்கள், நகரின் நடுப் பகுதி, அரண்மனை இந்த இடங்கள் அனைத்தையும் அரசன் தகுந்தவர்களை நியமித்து, தக்க முறையில் பாதுகாக்க வேண்டும்.

"அறிவுள்ளவன், நன்கு சோதிக்கப்பட்டவன், பசி, தாகம், களைப்பு இவற்றைப் பொறுக்கும் இயல்பினன், அசடன், செவிடன், குருடன் இவர்களைப்போல் தோற்றமளிப்பவன், இத்தகைய ஆடவர்களை உளவாளிகளாக நியமிக்க வேண்டும்.

"கடைகள், விளையாடுமிடங்கள், சோலைகள், தோட்டங்கள், மக்கள் கூடுமிடங்கள், பள்ளிக்கூடங்கள், விலைமாதர் வசிக்கும் வீதிகள், நீதிமன்றம், சிப்பந்திகள் வாழும் இடங்கள், பணக்காரர்களின் மாளிகைகள் இந்த இடங்களில் எல்லாம் பிற நாட்டு ஒற்றர்கள் புக வசதி உண்டு. அந்த இடங்களுக்கு எல்லாம் தன் ஒற்றர்களை அனுப்பி, மற்ற நாட்டு ஒற்றர்கள் ஊடுருவ முடியாதபடி செய்ய வேண்டும்.

"ஒற்றனைத் தடுத்துவிட்டால், மற்றவற்றைத் தடுத்ததற்கு அது சமமாகும்.

"சந்தர்ப்பம் வாய்க்கும்போது, உலக நலனுக்குக் கேடு விளைவிப்பவர்களாய் இருப்பவர்களையும், தனக்கு முன்பு அபகாரம் செய்தவர்களையும் கொஞ்சமும் தயங்காது கொல்ல வேண்டும்.

'அரசன் ஏழு அங்கங்களை மிகவும் கருத்தோடு பேணிக் காக்க வேண்டும். தான், அமைச்சர்கள், பொக்கிஷம், தண்டனை நிறைவேற்றிகள், நண்பர்கள், நகரம், கிராமம் இந்த ஏழு அங்கங்களையும் அரசன் கவனத்துடன் பாதுகாக்க வேண்டும்.

"ராஜ்யத்தின் குறை, சமநிலை, வளர்ச்சி, இவை மூன்றையும் பற்றி அரசன் நன்கு தெரிந்து கொள்ள வேண்டும்.

"யுதிட்டிரா! காலம் அரசனுக்குக் காரணமா? அல்லது அரசன் காலத்துக்குக் காரணமா? என்னும் ஐயம் உனக்கு வேண்டாம். அரசன்தான் காலத்துக்குக் காரணம் ஆவான். நீதி வழுவாது அரசன் செங்கோல் செலுத்தி வந்தால், அது சமயம், சிறந்த கிரத யுகம் நடைபெறுவதாகக் கொள்ள வேண்டும். நான்கு வருணத்தாரும் தரும நாட்டத்தோடு நடக்க அது வழிகோலும்.

"முழுதும் தரும நாட்டத்தோடு அரசன் ஆட்சி செய்தால், அப்பொழுது கிரத யுகம் நடக்கும். முக்கால் பகுதி அளவில் தரும நாட்டத்துடன் ஆட்சிபுரிந்தால் அப்பொழுது திரேத யுகம் நடக்கும்; அவன் ஆட்சியில் அரைப் பங்கு தருமம் இருந்தால் அது துவாபர யுகம் நடைபெறுவது: கால் பங்கு தருமம் இருந்தால் அப்பொழுது கலி யுகம். இவ்வாறு அரசனைப் பொறுத்தே யுகம் ஏற்படுகிறதே யல்லாமல், யுகத்தைப் பொறுத்து, அரசன் இல்லை என்பதை நீ நன்றாகத் தெரிந்துகொள்.

"அரசன் தன்னிடம் இல்லாத பொருளை அடையவும் அடைந்த பொருளைப் பாதுகாக்கவும் வேண்டும்.

"அரசன் குடிமக்களிடம் ஆறில் ஒரு பங்கு வரி வசூல் செய்யவேண்டும்; குற்றவாளிக்கு விதிக்கும் அபராதத் தொகை, இதர வரவினங்கள் ஆகியவற்றால் அரசன் அரசை நடத்த வேண்டும்.

"தருமத்துக்கு மாறுபடாமல் பொருள் ஈட்டி, மக்களை பொறுப்புடன் விருப்பு வெறுப்பின்றிப் பாதுகாத்தால், மக்கள் அந்த அரசனைப் பெரிதும் போற்றுவார்கள்; விரும்பிய வண்ணம் அவனிடம் பொருள் வந்து குவியும்.

"பொருளைப் பெரிதாக நினைத்து, தருமத்தை அரசன் புறக்கணித்தால், அந்த அரசனிடம் பொருளும் தங்காது; தருமமும் தங்காது. பாலை விரும்பும் மனிதன் பேராசை வயப் பட்டு பசுவின் மடியை அறுத்தால், பால் எப்படி அவனுக்குக் கிடைக்காது போகுமோ, அதே போல, பேராசை வயப்பட்டு நீதிக்குப் புறம்பாக வரி விதிக்கும் அரசனுக்கும் பொருள் கிட்டாது போகும். பூ வியாபாரியைப்போல் அரசன் இருக்க வேண்டுமே யன்றி, கரி வியாபாரியைப்போல் அரசன் இருத்தல் கூடாது. பூ வியாபாரி பூவுக்காக மரத்தைப் பேணி வளர்ப்பான்; கரி வியாபாரி, கரிக்காக மரத்தை வெட் டிச் சுடுவான்.

"ஆட்சிபுரியும் காலத்தில் தானத்தால் சிலரையும் பலத்தால் சிலரையும் இன்சொலால் சிலரையும் அரசன் வசப்படுத்திக்கொள்ள வேண்டும்.

கால வேறுபாட்டாலும், தேச வேறுபாட்டாலும் அதரு மம் தருமமாகவும் தருமம் அதருமமாகவும் தோன்றுவது இயல்பு. இவற்றை நன்கு புரிந்துகொண்டு அரசன் நடக்க வேண்டும்.

'ஆபத்துக் காலத்தில் உதவி புரிந்தவன் எந்தச் சாதி யாயினும் பொருட்படுத்தாது, மரியாதை செய்து அவனைப் பூசிக்க வேண்டும்.

"சுமை தூக்காத காளை, கறவாத பசு, மலட்டு மனைவி, பாதுகாவாத அரசன் இவர்கள் இருந்தாலும் இல்லாத தற்குச் சமம்தான். இவர்களால் எவ்விதப் பயனும் கிட்டாது."

## நட்பு

"பிதாமகரே! பிறருடைய ஒத்துழைப்பு இன்றி, எந்தச் சிறிய காரியத்தையும் மனிதனால் செய்ய முடிவது இல்லை அப்படி யிருக்கும்போது, அரசை நடத்தும் பெரிய காரி யத்தை அரசன் எவ்வாறு செய்யவேண்டும்? யார் யார் உத விலைய அரசன் நாட வேண்டும்? அரசன் யாரை நம்ப வேண் டும்? யாரை நம்பக்கூடாது?" என்று கேட்டார் யுதிட்டிரர்.

"குருநந்தன! நான்கு விதமானவர்களின் நட்பை அரசன் சம்பாதித்துக்கொள்ள வேண்டும் ஒரேவித நோக்கமுள்ள வன், பக்தியுள்ளவன், உறவினன், தன்பால் உபகாரம் பெற்ற வன் இந்த நால்வரையும் அரசன் நண்பனாகக் கொள்ளலாம். நேர்மையாளனை ஐந்தாவது நண்பனாகக் கொள்ளலாம்.

"நேர்மையாளன் யாரோடும் சார்பாக இருக்க மாட்டான். நேர்மை ஒன்றையே அவன் முக்கியமாகக் கவனிப்பான். ஆகவே, அவனுக்குச் சம்பந்தம் இல்லாத விஷயங்களை அவனிடம் ஒருபோதும் கூறக் கூடாது. தான் நேர்மைக் குறைவாகக் கருதுவதை, யாராய் இருப்பினும் அவன் விட்டுக் கொடான். வெற்றிபெற விரும்பும் அரசன் நேரிய வழியிலும் செல்லக் கூடும்; நேர்மையற்ற வழியிலும் செல்லக் கூடும். அதனால் நேர்மையாளனிடம் அனைத்தையும் வெளியிடக் கூடாது.

"மேலே கூறிய நான்கு நண்பர்களில், பக்தியுள்ளவன் உறவினன் இருவரையும் உத்தம நண்பர்களாகக் கொள்ளலாம்; மற்ற இருவித நண்பர்களையும் முழுக்க முழுக்க நம்பக் கூடாது.

"தானே நேரில் கவனிக்க வேண்டிய காரியமாய் இருப்பின், அதை இந்த ஐந்துவித நண்பர்களையுமே நம்பி ஒப்படைத்தல் கூடாது. ஆயினும் நண்பர்களைப் பாதுகாக்கும் விஷயத்தில் அரசன் அதிகப் பொறுப்புடன் இருக்க வேண்டும்; கவனக் குறைவாக இருத்தல் கூடாது. நண்பர்களைப் பாதுகாவாத அரசனை மற்ற ஜனங்கள் நம்ப மாட்டார்கள்.

"மனிதனுடைய புத்தி எப்பொழுதும் ஒரே நிலையில் இருப்பது இல்லை. நல்லவன் தீயவனாவதும், தீயவன் நல்லவனாவதும், நண்பன் பகைவனாவதும், பகைவன் நண்பனாவதும், தவறு செய்வதும் இயல்பு. ஆகையால் முக்கிய காரியங்களை அரசனே நேரில் கவனிக்கவேண்டும்.

"எதையும் யாரையும் அரசன் முழுக்க முழுக்க நம்பக் கூடாது; நம்பாமலும் இருக்கக் கூடாது. நம்பாமல் இருப்பதும் தீங்கு பயக்கும்; நம்புவதும் தீங்கு பயக்கும்.

"ஒரு காரியத்தில் இரண்டு அல்லது மூன்று மனிதர்களை நியமித்தல் கூடாது. அப்படி நியமித்தால் ஒருவரிடம் ஒருவர் பொறுமைகொண்டு காரியத்தைக் கெடுத்துவிடுவார்கள்; ஒருவருடன் ஒருவர் இணங்கிக் காரியத்தைக் கவனிக்க மாட்டார்கள்.

"புகழுள்ளவன், நீதியில் பிடிப்புள்ளவன், திறமைசாலிகளைப் பகையாதவன், விருப்பு, வெறுப்பு, பயம், கோபம் இவை காரணமாகத் தருமத்தை விடாதவன், கெட்ட காரியங்களைச் செய்யாதவன், திறமைசாலி, அளவோடு பேசுபவன், நற்குலத்தில் பிறந்தவன், நல்ல ஒழுக்கமுள்ளவன், பொறுமையுள்ளவன், தற்புகழ்ச்சி இல்லாதவன், சூரன், காரியத்தைப் பகுத்தறிவதில் திறமையுள்ளவன் இத்தகைய பண்புகள் உடையவனையே நீ முதன் மந்திரியாக நியமித்துக் கொள்ள வேண்டும்

"அரசன் நல்லவனாயும் மக்களுக்கு நன்மை செய்பவனாயும் இருந்தால், உறவினர்களைத் தவிர்த்து, மற்றவர்கள் அரசன அழிவை விரும்ப மாட்டாாகள்; மகிழ்ச்சியடையவும் மாட்டார்களா. உறவினர்களில் உபகாரம் செய்பவர்களும் உண்டு; அபகாரம் செய்பவர்களும் உண்டு. உறவும் பந்தமும் இல்லாத மனிதனை மற்ற மனிதர்கள் அவமதிப்பாககள். பிறன் ஒருவன், தன் உறவினனை அவமதிக்கிறுன் என்பது தெரிந்தால், உறவினருக்கு உதவ எந்த மனிதனும் விரைந்து முன்வருவான். தனக்கு ஏற்பட்ட அவமதிப்பாகக் கருதி அதைத் துடைக்க முயலுவான். ஆகவே, உறவினர்களிடம் நன்மையும் தீமையும் கலந்து இருப்பதை நாம் காணலாம். உறவினர்கள் இல்லாத மனிதனுல் மகிழ்ச்சியோடும் பெருமையோடும் வாழ முடியாது. எனவே, உறவினர்களை உள்ளன்போடு கௌரவிக்க வேண்டும்; பிரியக் குறைவான எந்தக் காரியத்தையும் அவர்களுக்குச் செய்யக் கூடாது. அவர்களிடம் தனக்கு நம்பிக்கையில்லாவிட்டாலும் நம்பிக்கை இருப்பதுபோல் காட்டிக்கொள்ள வேண்டும். உறவினர்கள் குணமுள்ளவர்களா அல்லது குற்றமுள்ளவர்களா என்பதை எப்பொழுதும் உறுதியாகத் தீர்மானிக்க முடியாது. ஆகவே

கவனத்துடன் பழகினால், பகைவனாய் இருப்பவனும் நண்பனாக மாறிவிடுவான். சுற்றத்தார், நண்பர்கள், பகைவர்கள் இவர்களிடம் இப்படிக் கவனத்துடன் நடப்பவன் பெரும் புகழுடன் வாழ்வான்.''

## உறவினர்

''பிதாமகரே! உறவினர், சுற்றத்தார் இவர்களுக்கு இடையிலே பொறாமை ஏற்படுவது இயல்பு என்று தெரிகிறது. இவர்களை எப்படி வசமாக்கிக்கொள்வது?'' என்று கேட்டார் யுதிட்டிரர்.

''குருகுலத் தோன்றலே! இது சம்பந்தமாக, தேவரிஷி நாரதரும் வாசுதேவரும் உரையாடி இருக்கிறார்கள். அதை உனக்குச் சொல்லுகிறேன் கேள்:

''ஒரு முறை நாரத மகரிஷியை நோக்கி, வாசுதேவர் 'நாரத முனிவரே! படியாத நண்பனிடத்திலும் பாங்கற்ற மனப்பான்மையுள்ள பண்டிதனிடத்திலும் அந்தரங்க விஷயங்களைச் சொல்லக் கூடாது என்பது விதி. நீர் பூர்ண அறிவும் உறுதியான மனப்பாங்கும் உடையவர். அதனால் உம்மிடம் சில விஷயங்களைச் சொல்லி, தெரிந்துகொள்ள ஆசைப்படுகிறேன். அரசன் என்னும் பெயரைத் தாங்கி, உறவினர் முதலியோருக்கு அடிமையாகி, அவர்களுக்கு நான் ஊழியம் புரிகிறேன். உண்ணும் உணவில் பாதியை உறவினர்களுக்குக் கொடுத்துவிட்டு, பாதி உணவைத்தான் நான் உண்ணுகிறேன். அவர்கள் சொல்லும் கடும் சொற்கள் என் நெஞ்சைத் துளைப்பினும், அவற்றைப் பொறுமையுடன் சகித்துக்கொள்கிறேன். கதன் அழகிலும், பிரதியுத்மனன் வடிவிலும், சங்கர்ஷணன் பலத்திலும் மதமடைந்து கொழுப்புடன் நடக்கிறார்கள். எனக்கு உதவி செய்வார் யாரும் இல்லை. மற்ற விருஷிணிகளும் அந்தகர்களும் பெருமையாலும் பலத்தாலும் கர்வத்தாலும் விடாமுயற்சியாலும் அருகே நான் செல்ல முடியாத நிலையில் இருக்கிறார்கள். எவன் பக்கம்

அவர்கள் சார்பாக இருக்கிறார்களோ, அவன் செழிப்புடன் இருப்பதும், எவனுக்கு அவர்களுடைய சார்பு இல்லையோ அவன் அழிவதும் நிச்சயம். ஆகுகனும் அக்ரூரனும் ஊக்கம் காட்டாதபடியால், எந்தச் சார்பிலும் சேர முடியாது நான் தவிக்கிறேன். இந்த இருவரையும் சேர்த்துக்கொண்டாலும் துன்பமாய் இருக்கிறது. சூதாடும் இரு புதல்வருக்கு இடையில் தத்தளிக்கும் தாயைப்போல நானும் தத்தளிக்கிறேன். யார் வெற்றி பெற்றாலும் சரி, அல்லது தோல்வியுற்றாலும் சரி, அது எனக்குத் துன்பத்தைத்தான் கொடுக்கிறது. ஆகையால் நாரதரே! நானும் உறவினர்களும் பூசலின்றி மகிழ்ச்சியுடன் வாழ வழி என்ன?" என்று கேட்டார்.

அதற்கு நாரதர், "விருஷ்ணி குலத்தில் உதித்த கண்ண பிரானே! மனிதனுக்கு அகத்திலிருந்தும் புறத்திலிருந்தும் இரு விதத் துன்பங்கள் உண்டாகின்றன. உறவினர்களாலும் சுற்றத்தாராலும் ஏற்படுகின்ற துன்பங்கள் அகத்திலிருந்து ஏற்படுபவை; பிறரால் ஏற்படும் துன்பங்கள் புறத்திலிருந்து ஏற்படுபவை. அதன்படி பார்த்தால் அக்ரூரன், போஜன் முதலியவர்களால் அகத்திலிருந்து உமக்குத் துன்பங்கள் நேர்ந்திருக்கின்றன. சங்கர்ஷணர் முதலியோர் அக்ரூரரின் சார்பாக இருக்கின்றனர். பொருளின் பொருட்டாகவும் இதர ஆசைகளாலும் தூண்டப்பெற்று, அவர்கள் உமக்குத் துன்பம் கொடுக்கிறார்கள். தேடிய ராஜ்யத்தை நீர் ஆகுகனிடம் கொடுத்துவிட்டீர். உறவினர்களிடம் சென்றுவிட்ட அரசை மீண்டும் அடைய நீர் முயன்றால், அது உமிழ்ந்த அன்னத்தை மீண்டும் எடுத்து உண்ண ஆசைப்படுவதை ஒக்கும். உறவினர்களிடையே பூசல் வளரும் என்ற பயம் உமக்கு இருந்தால், பப்ரு, உக்கிரசேனன் இவர்களிடமிருந்து ராஜ்யத்தைத் திரும்பப் பெறும் எண்ணத்தை விட்டுவிடும். இல்லையேல் அரும்பாடுபட்டு, பெரும் முயற்சி செய்து, காரிய சித்தி பெற வேண்டியது இருக்கும். அதனால் ஆள் சேதம் பொருட்சேதம் அதிகமாகிப் பெருத்த அழிவு உண்டாகும். ஆகையால் இரும்பால் செய்யப்படாத, மென்மையான,

ஆனால் உள்ளத்தை அறுக்கும் இயல்புடைய ஓர் அரத்தைக் கொண்டு அவர்களின் நாவை அறுத்துவிடும். அதனால் உம்மைப் பழிப்பதும் தூற்றுவதும் அடங்கிப்போகும்!" என்று சொன்னார்.

"முனிவரே! இரும்பினால் செய்யப்படாத, மென்மையான, ஆனால் உறுதிவாய்ந்த அரம் எது? அதை எப்படிப் பயன்படுத்தினால் உறவினர்கள் திருந்தி வழிக்கு வருவார்கள்?" என்று கேட்டார் கிருஷ்ணன்.

"உமது சக்திக்கு ஏற்ப உணவு அளித்து, உறவினர்களை நீர் உபசரிக்க வேண்டும். மன்னித்துப் பொறுமையைக் கைக்கொள்ள வேண்டும். நேர்மையோடும் அடக்கத்தோடும் வாழ வேண்டும். அவரவர் தகுதிக்கு ஏற்பச் செய்ய வேண்டிய மரியாதையை அவசியம் செய்ய வேண்டும். இது இரும்பினால் செய்யப்படாத கூரிய அரத்தை ஒக்கும். கொடுமையாகவும் இகழ்ந்தும் சுடுசொற்கள் பேசும் உறவினர்களை — அவர்களின் வாழ்க்கையும் மனத்தையும்-நன்மொழிகளால் அடக்க வேண்டும். நல்ல பண்பும் தெம்பும் உள்ளவர்களைத் தவிர்த்து, மற்றவர்களால் பெரும் பாரத்தைச் சுமக்க முடியாது. மேடு பள்ளமில்லாத வழியில் எல்லாக் காளைகளும் எளிதில் பொதி சுமந்து சென்றுவிடும்; கரடுமுரடான கடினமான பாதையில் நல்ல காளை மட்டுமே பொதியைச் சுமந்து செல்லும். உங்கள் இனத்தவரில் நீர் பிரதானமானவர். இனத்தவர் தனித் தனியே கலைந்து அழிவதற்கு நீர் இடம் அளித்தல் கூடாது. தன் இனத்தாரைக் காப்பது கடமை. இதனால் ஆயுளும் பொருளும் புகழும் பெருகும். உறவினர்களுக்குக் குறைவு நேராதபடி கவனிக்க வேண்டிய பெரும் பொறுப்பு உமக்கு உண்டு. நீர் அறியாதது ஒன்றும் இல்லை. யாதவர்கள், குருரர்கள், போஜர்கள், அந்தகர்கள், விருஷ்ணிகள் இவர்கள் அனைவரும் உம்மை அடுத்து இருப்பதால், அவர்களைப் பாதுகாப்பது உமது கடன்" என்று சொல்லி முடித்தார்.

# அதிகாரிகள்

"யுதிட்டிரா! அதிகாரிகள் குற்றம் செய்தால், அவர்களை அரசன் எவ்வாறு நடத்த வேண்டும் என்பதை நீ அவசியம் தெரிந்துகொள்ள வேண்டும். அடியில் வரும் கதை அதை விவரிக்கிறது" என்று சொல்லி, பின்வரும் கதையைப் பீஷ்மர் யுதிட்டிரருக்குக் கூறினர்.

வெகு காலத்திற்கு முன்னர், கோசல நாட்டை சேமதர்சி என்னும் அரசன் ஆண்டுவந்தான். அவனைக் காணக் காலக விருட்சிய முனிவர் கோசல நாட்டுக்கு வந்தார்; கூண்டில் ஒரு காகத்தை வைத்துக்கொண்டு நாடு முழுதும் அவர் சஞ்சரித்தார். "காகங்கள் பேசுவதை நான் அறிவேன். நடந்தது, நடக்கின்றது, நடக்கப்போவது மூன்றையும் அறிவிக்கும் ஆற்றல் இந்தக் காகத்துக்கு உண்டு" என்று கூறிக்கொண்டே நாடு முழுதும் காகத்துடன் அவர் சஞ்சரித்தார். ராஜ்யத்தின் நட்பையும், அதிகாரிகளின் குற்றங் குறைகளையும், தாம் கூண்டில் அடைத்து வைத்திருக்கும் காகத்தின் மூலம் அந்த முனிவர் தெரிந்துகொண்டார்.

பிறகு, அவர் அரசனிடம் போனர். அரசனைச் சுற்றி அதிகாரிகள் குழுமி இருந்தார்கள். ஓர் அதிகாரி தன்னை வெகுவாக ஆடை ஆபரணங்களால் அலங்கரித்துக்கொண்டு விளங்கினன். முனிவர் அந்த அதிகாரியை நோக்கி, "அரசனுடைய பொக்கிஷத்திலிருந்து பொருளை நீ அபகரித்து இருக்கிறாய். நீ செய்த காரியத்துக்கு இருவர் உடந்தையாய் இருந்திருக்கின்றனர். இப்படி நான் வைத்திருக்கும் காகம் அறிவிக்கிறது" என்று கூறினர்.

விசாரணை செய்தபோது இது உண்மை என்பது வெளியாயிற்று.

இதனல் ஆத்திரமடைந்த அதிகாரிகள், முனிவர் தூங்கும் சமயம் பார்த்து, அவர் வைத்திருந்த காகத்தை, இரவில் கொன்றுவிட்டனர்.

பொழுது புலர்ந்ததும், முனிவர் எழுந்து காகத்தைப் பார்த்தார். அம்பால் அடிபட்டு அது இறந்து கிடப்பதை முனிவர் கண்டார். உடனே அவர் சோசல நாட்டு மன்னனிடம் போனார். "அரசே! உயிரையும் பொருளையும் காப்பாற்ற அரசன் கடமைப்பட்டவன். அபயம் அளித்து என்னை நீ காக்க வேண்டும். உனது நன்மையை விரும்பி, நாட்டு நடப்பை உனக்கு நான் கூறினேன். நான் கூறுவதை நீ பொறுமையுடன் கேட்க வேண்டும்" என்று சொன்னார்.

"முனிவரே! தாங்கள் கூற விரும்புவதைக் கூறுங்கள். அதற்குக் கட்டுப்பட்டு நான் அவசியம் நடக்கிறேன்" என்று கூறினான் அரசன்.

"அரசே! உன் அதிகாரிகளிடம் காணப்படும் குணங்களையும் குறைகளையும் உனது நன்மையை நாடி அன்போடு நான் வெளியிட்டேன். அவர்களால் உனக்கு நேரப்போகும் அபாயங்களையும்பற்றி அறிவித்தேன். பிறரை அடுத்துப் பிழைப்பது கேவலம்; அரசனை அடுத்துப் பிழைப்பது மகா கேவலம் என்று பெரியோர்கள் கூறி இருக்கின்றனர். கொடிய பாம்புகளுடன் பழகுவதற்குச் சமம் அரசர்களுடன் பழகுவதும் என்று சொல்லி இருக்கின்றனர். 'அரசன் அன்புள்ளவனாய் இருந்தால் தெய்வத்தைப்போல் அனைத்தையும் வாரி வழங்குவான்; கோபம் கொண்டால் நெருப்புப் போல அனைத்தையும் எரித்துச் சாம்பலாக்கிவிடுவான்' என்று யமன் கூறி இருக்கிறான். அரசே! உனக்கு நன்மையை உரைக்க நான் வந்தேன். ஆனால், உன் அதிகாரிகளோ உன்னை அடுத்து இருந்து உனக்கே தீமை விளைவிக்கிறார்கள். அதை நான் உனக்கு எடுத்து உரைத்ததனால், எனது காகத்தை உன் அதிகாரிகள் கொன்றுவிட்டார்கள். ஆகையால் அரசே! நான் உனது நாட்டைவிட்டுப் போக முடிவு செய்துவிட்டேன். நீ நல்லோரைக் காத்துத் தீயோரை அடக்குவதில் நாட்டம் செலுத்தவில்லை, நீ நல்லவனாய் இருந்தாலும், உன்னைச் சார்ந்திருப்பவர்கள் நல்லவர்களாய் இல்லை. அரச அன்னத்தை நாய், கழுகு, நரி சூழ்ந்திருப்பதுபோல, உன்னைத் தீயவர்கள் சூழ்ந்திருக்கிறார்கள். ஒரு பெரிய மரத்தை அடுத்து வளர்ந்து

கொடி, அந்த மரத்தையே மூடி மறைத்து, காட்டுத் தீயால் தானும் அழிந்து. மரமும் அழிவதற்குக் காரணமாய் இருப் பதைப்போல, உன்கீழ் இருக்கும் அதிகாரிகள் இருக்கிறார்கள். வேந்தே! உனது நலத்தில் நாட்டமுள்ள எனக்கு அவர்கள் தீங்கு புரிகிறார்கள். இதை நீ அறியாமல் இருக்கிறாய். அவர் களுக்கு நான் எவ்விதத் தீங்கும் புரியவில்லை. அவர்கள் செய்த குற்றங் குறைகளை எடுத்துக்காட்டினேன். அதை அவர்கள் குற்றமாகக் கருதுகிறார்கள், தீய சிந்தையுள்ள அவர்களுக்கு அஞ்சி நான் வாழும்படி நேர்ந்திருக்கிறது" என்று சொல்லி வருந்தினார்.

அரசன் ஆறுதல் சொல்லி அந்த அந்தணரைத் தேற்ற லானான். "அந்தண சீலரே! நல்ல எண்ணமுள்ள நீர் என் நாட்டிலேயே தங்கும். உம்மை ஆதரித்துக் காப்பாற்று கிறேன்" என்று கூறினான்.

"அரசே! குற்றம் செய்த அதிகாரிகளை ஒவ்வொருவ னாகக் கூப்பிட்டு, மெல்ல மெல்ல அவனுக்கு இருக்கும் அதி காரத்தை முதலில் குறைத்துவிட வேண்டும். பிறகு, ஒவ் வொருவனையும் தனியே கூப்பிட்டுக் குற்றத்தைச் தெரிவித் துக் கொல்ல வேண்டும். ஒரே குற்றம் புரிந்துள்ள பலர் ஒன்றுசேர வாய்ப்பு அளித்தால், அவர்கள் சேர்ந்து, மிக்க கொடியவனாய் இருப்பவனையும் வெகு எளிதில் கொன்றுவிடு வார்கள். உலகம் பொருளால் கட்டுண்டு கிடப்பதால், உல கத்தை நிர்வகிப்பவன் பொருளைக் கொண்டுதான் அதை நிர் வகிக்க வேண்டும். பொருள் இருந்தால்தான் மனிதனுக்கு அகந்தை ஏற்படுகிறது. ஆகவே, பொருளைப் பிடுங்கி அதி காரிகளுக்குள்ள அகந்தையைக் குறைக்கவேண்டும். அரசன் எப்பொழுதும் தனது மனநிலையைப் பிறர் புரிந்துகொள்ள முடியாதபடி நடக்க வேண்டும். வில்வக் காயைக்கொண்டே வில்வக்காயை அடிப்பதுபோல, தீய எண்ணமுள்ள அதிகாரி யைக்கொண்டே தீய சிந்தையுள்ள மற்றோர் அதிகாரியை அடிக்க வேண்டும்" என்று அந்த அந்தணர் அரசனுக்கு அறி வுரைகள் கூறினார்.

அரசன் தன் நாட்டிலேயே தங்கும்படி அவரை வேண்டிக் கொண்டான். முனிவரும் சம்மதித்து அந்த நாட்டில் தங்கி, அரசனுடைய நலத்தில் கண்ணும் கருத்துமாய் இருந்தார்.

## கட்டுக்கோப்பு

"பிதாமகரே! அரசை எவ்வாறு அமைத்துக்கொள்ள வேண்டும்? பொருளை எவ்வாறு தேடி, அதை நிர்வகிக்க வேண்டும்?" என்று கேட்டார் யுதிட்டிரர்.

"பாரத! அவற்றைப்பற்றி நான் விவரமாகச் சொல்லுகிறேன்; நீ கவனத்துடன் கேள்.

"கிராமத்துக்கு ஒரு தலைவனை நியமிக்க வேண்டும். பத்துக் கிராமங்களை ஒன்று சேர்த்து, அவற்றை நிர்வகிக்கும் பொறுப்பையும் அதிகாரத்தையும் ஓர் அதிபதியிடம் விட வேண்டும். பிறகு இருபது கிராமங்கள், முப்பது கிராமங்கள், நூறு கிராமங்கள், ஆயிரம் கிராமங்கள் இப்படி என்ற எண்ணிக்கையில் கிராமங்களைப் பிரித்தும், ஒவ்வொரு பிரிவுக்கும் தனித்தனியே தகுதியான அதிகாரியை நியமிக்க வேண்டும். ஒரு கிராமத்துக்குத் தலைவனாய் இருப்பவன் தன் கிராமத்து நிலையை நன்கு அறிந்து, உள்ளது உள்ளபடி பத்துக் கிராமங்களுக்கு அதிபதியாய் இருப்பவனிடம் தெரிவிக்க வேண்டும். பத்து கிராமங்களுக்கு அதிகாரியாய் இருப்பவன் இருபது கிராமத்து அதிகாரியிடமும், இருபது கிராமங்களுக்கு அதிகாரி முப்பது கிராமத்து அதிகாரியிடமும், அவன் நூறு கிராமங்களுக்கு அதிகாரியிடமும் அனைத்தையும் அறிவிக்க வேண்டும். ஆயிரம் கிராமங்களுக்கு அதிகாரியாய் இருப்பவன், அறம் தெரிந்த அமைச்சனுக்குக் கீழிருந்து தன் அலுவல்களைக் கவனிக்க வேண்டும்; இந்த அதிகாரியின் அலுவல்களை அமைச்சன் சோம்பலின்றிக் கவனிக்க வேண்டும். பாதுகாக்கும் அதிகாரிகளாய் இருப்பவர்களிடம் வஞ்சனைக் குணம் இருக்

கும்; பிறர் பொருளைக் கவர்ந்துகொள்ள ஆசையிருக்கும்; பாவம் செய்யும் துணிச்சல் இருக்கும்; கொலை செய்யவும் தயங்க மாட்டார்கள். இத்தகையவர்களிடமிருந்து குடிமக்களைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு அரசனுக்கு உண்டு.

"விற்றல், வாங்கல், அதற்கான வழிகள், உணவு, வரவு செலவு, ஆகியவற்றைக் கவனித்து, வணிகர்களுக்கு வரி முதலியன விதிக்க வேண்டும்; தொழிலுக்குத் தக்கபடி வரி விதிக்க வேண்டும்; அரசும் தொழிலும் அழிந்துவிடாதபடி கவனித்துக்கொள்ள வேண்டும். பேராசை வயப்பட்டு, அரசன் என்ற பெயர் ஏற்பட்டுவிட்டால், அந்த அரசனைக் குடிமக்கள் வெறுப்பார்கள்; பகைப்பார்கள்.

"கொடுமையற்ற முறையில் அரசன் வரிகளை வசூலிக்க வேண்டும். பசுவின் காம்புகளிலிருந்து பாலை மெதுவாகக் கறப்பதைப்போலக் கறக்க வேண்டும்; முரட்டுத்தனமாகக் கறந்து, மடிக் காம்புகளுக்குத் தொந்திரவு ஏற்படும்படி செய்யக் கூடாது. வரியைப் படிப்படியாக உயர்த்தவேண்டுமே யல்லாது, எடுத்த எடுப்பிலேயே உயர்த்திவிடக் கூடாது.

"தலைவர்களாய் இருப்பவர்களை வசதிப்படுத்திக்கொண்டு விட்டால், மற்றவர்களை வசப்படுத்துவது எளிது.

"அதிகாரமுள்ள அரசன் தீயோரைத் தக்கபடி தண்டியாவிட்டால், அதனால் ஏற்படும் பாவத்தில் நாலில் ஒரு பங்கை அவன் அனுபவிப்பான் என்று வேதம் விதித்திருக்கிறது. பாவிகளை அடக்காத அரசன் பாவம் செய்தவன் ஆவான்.

"ராஜ்யத்தில் திருடர்களும் பிச்சைக்காரர்களும் இல்லாதபடி அரசன் நாட்டை நிர்வகிக்க வேண்டும். அவர்களால் குடிமக்களுக்குத் துன்பம்தான் ஏற்படும்; நன்மை ஏற்பட மாட்டாது.

"வேளாண்மை, வாணிபம், கால்நடை அபிவிருத்தி இவற்றில் அதிகக் கவனம் செலுத்தி, அவை விருத்தியடைய ஏற்பாடு செய்யவேண்டும்.

"நாட்டில் கனி கொடுக்கும் மரங்கள் ஏராளமாக இருக்க வேண்டும். அவற்றை வெட்ட அனுமதிக்கக் கூடாது.

"தன் ஆட்சியை மக்கள் விரும்புகிருர்களா என்பதைச் சாரணர்கள் மூலம் தெரிந்துகொண்டு, அரசன் ஆட்சி புரிய வேண்டும்.

"அரசன் செய்ய வேண்டிய கடமைகளைப்பற்றி, மாந்தாவுக்கு உசத்தியர் கூறின அறிவுரைகளை உனக்குக் கூறுகிறேன் கேள்.

உசத்தியர் கூறுகிருர் :

"ஏ மாந்தாதா ! அரசன் தருமத்தை நிலைநிறுத்தும் பொருட்டு இருக்கிருனே யல்லாமல், தனது விருப்பங்களைப் பூர்த்தி செய்துகொள்வதற்காக அல்ல என்பதை நீ நன்கு தெரிந்துகொள்ள வேண்டும்.

"அரசன் தான் செய்ய வேண்டிய கடமைகளைச் செவ்வனே செய்யாது, குற்றம் செய்வானுயின், தருமம் இல்லாத நிலை ஏற்படும். அதருமமான செயல்களைப் புரிபவர்களிடம் பொருள் மிகுதியாகச் சேரும்.

"பாவத்தைத் தடைப்படுத்தித் தண்டிக்காவிட்டால், அதருமம் மேலோங்கி வளர வழி ஏற்படும். அறவொழுக்கம் அழிந்து போகும். 'எனது, உனது' என்ற நியதி கெட்டுக் குலைந்துபோகும். மனைவி, மக்கள், வீடுவாசல், நிலம், ஆடு மாடு முதலியன எதுவும் நிலைத்திரா. விருந்தோம்பலும் பெரியோரைப் போற்றுதலும் நடைபெரு; கல்வி, கேள்வி, ஒழுக்கம் முதலியன ஓங்கி வளரா.

"ஏ மாந்தாதா ! அரசன் அகந்தையின்றி, ஆட்சி புரிய வேண்டும். அகந்தையுள்ள அரசன் விரைவில் அழிந்து போவான்.

"பலம் என்பது, பலமற்றவர்களைப் பகதுகாப்பதற்காக ஏற்பட்டிருக்கிறதே யல்லாமல், பலவீனர்களை அழிப்பதற்காக அல்ல என்பதைத் தெரிந்துகொண்டு, அரசன் அதன்படி நடக்கவேண்டும்.

"மெலியாரை வலியார் அடித்தால், வலியாரைத் தடுத்து அரசன் காப்பாற்ற வேண்டும். இல்லையேல் தெய்வம் சினந்து அரசனை அடித்துக் கொன்றுவிடும்.

"தண்டித்தல், காத்தல் இரண்டையும் நேர்மையாகச் செய்யும் அரசன், மேலான கதியை அடைவான்; இகத்திலும் பரத்திலும் அவன் பெருமையோடு வாழ்வான்.

"ஆட்சி செய்வது என்பது எளிதான காரியமல்ல. அடக்கி ஆள ஆற்றல் இல்லாதவன், தைரியமில்லாதவன், புத்தியில்லாதவன் ஆகியோரால் ஆட்சியைச் செவ்வனே செலுத்த முடியாது.

'அறம், பொருள், இன்பம் மூன்றனுள், அறத்தையே முக்கியமாகக் கொண்டு அரசன் ஆட்சிபுரிய வேண்டும்."

## அகமும் புறமும்

"பிதாமகரே! சிலர் புறத்தில் தீயோராயும் அகத்தில் நல்லவராயும் இருக்கின்றனர்; வேறு சிலர் அகத்தில் தீயோராயும் புறத்தில் நல்லவராயும் இருக்கின்றனர். இவ்வாறு இருப்பவர்களை வேறுபடுத்தித் தெரிந்துகொள்வது எவ்வாறு?" என்று கேட்டார் யுதிட்டிரர்.

"யுதிட்டிரா! இது சம்பந்தமாகப் புலிக்கும் நரிக்கும் முன்பு நடந்த ஒரு கதையை விளக்கிக் கூறுகிறேன் கேள்" என்று பின்வரும் கதையைச் சொன்னார் பீஷ்மர்.

முன்பு, செல்வச் செழிப்பு நிறைந்த புரிகை என்னும் நகர் ஒன்று இருந்தது. அந்த நகரத்தைக் கேடுகெட்ட இழிந்த அரசன் ஒருவன் ஆண்டுவந்தான். பிறருக்குத் துன்பம் செய்வதையே பெரிதாகக் கருதி வாழ்ந்த அந்த அரசன் பெயர் பௌரிகன். ஆயுள் முடிந்து, அந்தத் தீயவன் இறந்த பின்னர், தான் செய்த தீவினைப் பயனால் நரியாகப் பிறந்தான்.

முன் பிறப்பை நினைந்து நினைந்து, அந்த நரி பெரிதும் வருந்தியது. மாமிசமே சாப்பிடாது வாழ்ந்து வந்தது. பிறருக்குத் துன்பம் விளைவிப்பதை விட்டொழித்தது. பொய்

பேசாமல் மெய்யே பேசி வந்தது. இலை, கனி இவற்றை உண்டே காலத்தையும் பொழுதையும் கழித்தது. பிறருக்கு வசப்பட்டுவிடாமல், அது கவனமாக இருந்துகொண்டதுடன் மயானத்தில் வசிப்பதையே பெரிதும் விரும்பியது.

விரத நியமத்தோடு வாழும் இந்த நரியின் போக்கு, மற்ற நரிகளுக்குப் பிடிக்கவில்லை. அதன் மனப்போக்கை மற்ற நரிகள் மாற்ற முயன்றன. "நீ ஏன் இப்படி விபரீத வாழ்க்கை நடத்துகிறாய்? மாமிசம் உண்ணும் ஜாதியில் பிறந்த நீ, எங்களைப் போலவே மாமிசத்தைச் சாப்பிடு; மயானத்தில் வாழாதே. நாங்கள் தருவதைச் சாப்பிடு; தவ வாழ்வை விட்டுவிடு" என்று சொல்லின.

அதற்கு அந்த நரி, "பிறப்பு முக்கியமன்று; ஒழுக்கந்தான் முக்கியம். புகழ் தரும் காரியங்களையே செய்வதற்குத்தான் நான் ஆசைப்படுகிறேன். மயானத்தில் வசித்தபோதிலும் அதைப் பொருட்படுத்தாது எனது மனநிலையை நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும். இடம் முக்கிய மன்று; செயலே முக்கியம். ஆசிரமத்தில் இருந்துகொண்டு ஒருவன் அந்தணனைக் கொல்லுகிறான். ஆசிரமம் இல்லாத இடத்தில் இருப்பவன் தானம் செய்கிறான். இதில் எது மேலானது? நீங்கள் உணவையே பெரிதாகக் கருதுகிறீர்கள். நான் அப்படிக் கருதவில்லை" என்று பதில் சொல்லிற்று.

நரியின் இந்தப் போக்கைக் கவனித்த ஒரு புலி, அதைப் பெரிய பண்டிதன் என்று கருதி, தனக்கு மந்திரியாக நியமித்துக்கொண்டது. "நண்பனே! உன் தகைமையை நான் தெரிந்துகொண்டேன். எனக்கு மந்திரியாக இருந்து அரசாட்சிக் காரியங்களை நீ கவனித்து வா. அனுபவிக்க வேண்டிய இன்பங்களை அனுபவி. வேண்டாதவைகளை விலக்கிவிடு. எங்கள் இனத்தினர் கொடியவர்களாய் இருப்பதால்தான் ஆட்சியை உன்பால் ஒப்புவிக்கிறேன். நான் சொல்லுகிறபடி ஆட்சியை நடத்து. அதனால் உனக்கும் நன்மை உண்டு" என்று புலி கூறிற்று.

புலி இப்படிச் சொன்னதும், நரி அதைத் தலை தாழ்த்தி வணங்கிற்று. "அரசே! அறம் பொருள்களைத் தெரிந்த நேர்

மையானவர்களைக் கொண்டு ஆட்சியை நடத்த நீர் பிரியப் படுவது நியாயமே. திறமையுள்ள அமைச்சர் இல்லாவிட் டால் நாட்டை அரசன் பெருமையுடன் ஆள முடியாது. அரசே! இப்பொழுது நான் திருப்தியுடன் வாழ்வதால் எனக்கு வேறு ஒன்றிலும் நாட்டமில்லை. இன்பத்துக்கும் செல் வத்துக்கும் ஆசைப்பட்டு உம் விருப்பத்துக்கு நான் சம்மதிக்க வில்லை. அதனால் உம் பழைய சிப்பந்திகளின் இயல்புக்கும் என் இயல்புக்கும் ஒத்து வராது. நான் மந்திரியாய் இருப்பதை நீர் அவசியம் விரும்பினால், நடைமுறை சம்பந்தமாக ஓர் உடன்பாட்டை நம்மிடையே நாம் செய்துகொள்வது நலம். என்னைச் சார்ந்தவர்களை நீர் மரியாதையுடன் நடத்த வேண் டும். எனக்குப் போதிய அளவு சம்பளமும் தர வேண்டும். மற்ற மந்திரிகளுடன் நீர் ஆலோசனை நடத்தக்கூடாது. இவற்றுக்கு எல்லாம் நீர் சம்மதித்தால் நான் மந்திரியாக இருக்கிறேன்'' என்று கூறிற்று.

நரி கூறின நிபந்தனைகளுக்குச் சம்மதித்துப் புலி அதை மந்திரி பதவியில் அமர்த்திக்கொண்டது.

பதவிக்கு வந்ததும் முன்பு பதவியில் இருந்த விலங்குகள் அந்த நரியைப் பகைக்கத் தொடங்கின. நரிக்குத் தீய யோச னைகள் கூறி, அதன் உள்ளத்தில் ஆசையைக் கிளறிவிட முயன்றன. ஆனால் நரி அதற்கு இடம் கொடுக்கவில்லை. ஆகவே, நரியை அழிப்பதற்கு ஒரு சந்தர்ப்பத்தை எதிர் நோக்கி அந்த விலங்குகள் இருந்தன; அரசனுக்கு என நன்கு பக்குவம் செய்து தயாரித்து இருந்த இறைச்சியை எடுத்துப் போய், நரியினுடைய வீட்டில் ஒளித்து வைத்தன.

நரிக்கு இவை அனைத்தும் தெரிந்து இருந்தும், பந்தத்தை விட்டு விலகிக்கொள்ள வேண்டும் என்ற விருப்பத்தால், பொறுமையுடன் இருந்து வந்தது.

இது சமயம் புலி பசியுடன் இருந்ததால் உணவு உட் கொள்ளும் பொருட்டு வந்தபோது, இருக்க வேண்டிய இடத் தில் உணவு இல்லை. ஆகவே கோபமுற்று, "எனது உணவைத் திருடினவனைக் கண்டுபிடியுங்கள்'' என்று உத்தரவிட்டது.

உடனே முந்தின பரிவாரங்கள் அரசனிடம் சென்று, "அரசே ! உமது உணவைப் படித்த, புதிய மந்திரி திருடிப் போய்த் தன் வீட்டில் வைத்திருக்கிறார்" என்று தெரிவித்தன.

விவரம் தெரிய வந்ததும், தீர விசாரியாமல், தகாத காரியம் செய்த நரியைக் கொல்லும்படி புலி உத்தரவிட்டது.

அரசனின் கோபத்தைக் கண்ட நரிகள், மேலும் அதன் கோபத்தைக் கிளறிவிடும் வகையில் பேசின ; அரசே ! பார்த்தீர்களா அநியாயத்தை ! மந்திரியாய் இருக்கும் நரி பெரிதும் வஞ்சகமானது ; அரசனுடைய உணவையே அபகரிக்கும் துணிச்சல் அதற்கு ஏற்பட்டுவிட்டது. தேவரீர் ! அந்த நரியை அபாரமாக நம்புகிறீர்கள். அதன் குணம் அப்படிப் பட்டது அன்று. அதன் பேச்சும் செய்கையும் மாறுபட்டு இருப்பதைத் தாங்கள் இன்னும் தெரிந்துகொள்ள வில்லை. பொய் ஒழுக்கமுள்ள அந்த நரியின் வீட்டில்தான் உமது உணவு இருக்கிறது. அதை நாங்கள் உமக்குக் காட்டுகிறோம்" என்று கூறின.

பிறகு, உடனே நரியின் வீட்டிற்குச் சென்று, மாமிசத்தை எடுத்துவந்து புலிக்குக் காட்டின.

புலி கோபம் அடைந்தது. நரியைக் கொல்வதற்கு உடனே, அது உத்தரவு பிறப்பித்தது.

இதை அறிந்த புலியின் தாய், அதை அணுகி, "மகனே ! உன் முந்தின பரிவாரத்தினர் உன்னிடம் கபடமாகப் பேசுகின்றனர். இதை அறியாது நீ நடக்கிறாய். பொறாமை வந்துவிட்டால், தூயவனைக்கூடத் தீயவன் என்று உலகம் குற்றம் சாட்டும். முனிவர்களாயினும் சரி, விருப்பு வெறுப்பு இல்லாமல் வாழ முடியாது. உலோபிகள் தாராள மனப்பாங்கு உடையவனையும், படியாத முட்டாள் படித்தவனையும், ஏழை பணக்காரனையும், அழகில்லாதவன் அழகுள்ளவனையும் பகைப்பது இயல்பு. பொய் உண்மை போலவும், உண்மை பொய் போலவும் பல நிகழ்ச்சிகள் உலகில் நடக்கின்றன. ஆகவே, தீர ஆலோசித்துத்தான் எதையும் முடிவு செய்ய வேண்டும். ஆகாயம் பார்ப்பதற்குக் கறுப்பாய் இருக்

கிறது; ஆனால் உண்மையில் அது கறுப்பு இல்லை. மின்மினிப் பூச்சியில் நெருப்பு இருப்பதுபோல் தெரிகிறது. ஆனால், உண்மையில் அதனிடம் நெருப்பு இல்லை. மகனே! பிறரைக் கொல்வது உனக்கு அரிதன்று. ஆயினும், பொறுமையுடன் இருப்பது நல்ல பயனை அளிக்கும். நரியிடம் குற்றம் இருப்ப தாக நான் கருதவில்லை. அதைக் குற்றமுடையது நீ என்று கருதித் தண்டித்தால், அதனால் உனக்கு அழிவு உண்டாக லாம்'' என்று புத்திமதி சொல்லிற்று.

தாய் சொன்னதைச் செவிமடுத்த புலி, உண்மை நிலையை அறிந்து, நரிக்கு விடுதலை அளித்தது.

மந்திரியாய் இருந்த நரிக்கு அவமானம் தாங்க முடிய வில்லை. அது தற்கொலை செய்துகொள்ளப் போயிற்று.

''வேண்டாம்'' என்று தடுத்துப் புலி, நரியைக் கட்டித் தழுவிக்கொண்டது.

உடனே நரி கண்களில் நீர் மல்கி நிற்க, ''அரசே! முன்பு என்னை நீர் மரியாதை செய்து போற்றினீர். பிறகு பகை வன் எனக் கருதி என்னை நீர் அவமதித்துவிட்டீர். உம் முடன் சேர்ந்து வாழ நான் விரும்பவில்லை. மகிழ்ச்சியில்லாத வர்கள், அதிகாரத்திலிருந்து நழுவினவர்கள், அவமானம் அடைந்தவர்கள், தாமே துன்பத்தைத் தேடிக்கொண்டவர் கள், பிறரால் வஞ்சிக்கப்பட்டவர்கள், தாழ்வுற்றோர், உலோபிகள், கோபமுள்ளோர், பயந்தவர்கள், இகழ்ச்சிக்கு இலக்கானோர், பொருளை அபகரித்தோர், கர்விகள், வேலை யிலிருந்து விலக்கிப் பின்னர் சேர்த்துக்கொள்ளப்பட்டோர், பேராசையுள்ளோர், சலுகை பெற்றோர், இலஞ்சம் வாங்கு வோர் ஆகியோர் எப்பொழுதும் முதலாளிக்குத் தீங்கு நேர் வதை விரும்புவார்கள். என்னை நீர் அவமதித்துப் பிறகு என்னை நீர் அதிகாரத்தில் அமர்த்தினால் உமக்கு என்னிடம் நம்பிக்கை உண்டாகாது. பிறரும் என்னை நம்ப மாட்டார்கள். நானும் உம்மை நம்ப முடியாது. ஆகையால் உம்மிடம் இருக்கப் பிரி யப்படவில்லை'' என்று சொல்லிவிட்டு, நரி விடைபெற்றுக் கொண்டு போய்விட்டது.

* * *

புறத் தோற்றத்தைக் கொண்டு, ஒருவனை மதிப்பிடுதல் பொருந்தாது; சோதனை செய்து பார்த்த பின்னர், ஒருவன் நல்லவனு அல்லது தீயவனு என்பதை முடிவெடுக்க முடியும் என்பது இந்தக் கதையில் பொதிந்துள்ள கருத்து.

## யோக்கியனைத் துணைசேர்த்துக்கொள்

"பிதாமகரே! அரசனுக்கு உதவிசெய்ய நற்குலத்தில் பிறந்தவர்கள் துணை கிடைக்காவிட்டால், அரசன் கீழான குலத்தில் பிறந்தவர்களைத் துணைவர்களாக நியமித்துக் கொள்ளலாமா? இதுபற்றித் தாங்கள் உபதேசிக்க வேண்டும்" என்று கேட்டார் யுதிட்டிரர்.

இதற்குப் பீஷ்மர், "யுதிட்டிரா! இதுபற்றி உனக்கு ஒரு பழமையான கதையைக் கூறுகிறேன் கேள். மனிதர்களின் சஞ்சாரமே இல்லாத ஒரு காட்டில் ரிஷி ஒருவர் இருந்தார். அவர் கிழங்கு கனிகளை உண்டு, புலன் அடக்கத்துடன் தவ வாழ்க்கை வாழ்ந்து வந்தார். அவரிடம் புலி, சிறுத்தை, சிங்கம், கரடி, யானை, காண்டாமிருகம் முதலிய கொடிய மிருகங்கள்கூட அன்புடன் பழகின. அவற்றைக் கண்டதும், "சுகமா?" என்று அந்த முனிவர் நலம் விசாரிப்பார். "சுகம்" என்று பதில் அளித்துவிட்டு அவை திரும்பிச் செல்லும்.

இப்படி முனிவருடன் பிரியமாகப் பழகிய விலங்குகளில் நாய் ஒன்றும் இருந்தது. அந்த நாய் காய், கிழங்கு, கனிகளை உண்டு முனிவரைப்போல் வாழ்ந்து வந்தது.

இந்த நாயைத் தின்னும் பொருட்டு ஒரு நாள் சிறுத்தைப் புலி ஒன்று அதைத் துரத்தி வந்தது.

நாயோ தனது உயிரைக் காப்பாற்றிக்கொள்ள எண்ணி, முனிவரைச் சரண் அடைந்தது. "முனிவரே! நாய்களுக்குப் பகைவனுன இந்தச் சிறுத்தை என்னைத் தின்னத் துரத்தி வருகிறது. அபயம் அளித்து, சிறுத்தையிடமிருந்து தாங்கள் என்னைக் காப்பாற்ற வேண்டும்" என்று நாய் வேண்டிற்று.

அந்த முனிவர் விலங்கு பேசும் மொழிகளை அறிந்தவர். அவர் நாயை நோக்கி, "நீ சிறுத்தையிடம் பயப்பட வேண்டாம். நாய் உருவம் அகன்று, சிறுத்தையின் உருவத்தை நீ அடைக" என்று சொன்னார்.

உடனே, அந்த நாய், சிறுத்தையின் வடிவத்தை அடைந்தது; உடம்பு மஞ்சள் நிறத்தில் பிரகாசித்தது; கோரப் பற்கள் பார்க்கப் பயங்கரமாய் இருந்தன. தனக்குச் சமதையான வடிவத்துடன் நாய் விளங்குவதைக் கண்டதும், அந்தக் கணமே பகைமை உணர்ச்சியை அந்தச் சிறுத்தை விட்டு விட்டது.

இதன் பின்னர், பெரிய புலி ஒன்று, நாயாக இருந்து சிறுத்தையாக மாறிய விலங்கை எதிர்க்க வந்தது.

உடனே சிறுத்தைப் புலி, பயந்துபோய் மீண்டும் முனிவரைச் சரண் அடைந்தது. உடனே முனிவர் அந்தச் சிறுத்தையைப் பெரும் புலியாக மாற்றினார். அடிக்க வந்த புலி, ஒன்றும் செய்யாமல் அப்பால் போய்விட்டது.

புலியின் தன்மையை அடைந்த நாயோ காய் கிழங்கு கனிகளை அருந்தாமல், ஊன் தின்பதிலேயே அதிகம் விருப்பம் காட்டியது. சிங்கத்துக்கு நிகராக ஊன் தின்பதில் புலி மேலும் மேலும் ஆசையோடு இருந்து வந்தது. மற்ற விலங்குகளை அடித்துக் கொன்று, அவற்றின் இறைச்சியைத் தின்று தின்று, புலி வடிவில் இருந்த நாய் சுகமாக வாழ்ந்து வந்தது.

புலியாய் இருந்த நாயை, மதயானை ஒன்று விரட்டி வந்தது உடனே முனிவர், புலியாய் இருக்கும் நாயை ஒரு யானையாக மாற்றினார்.

இதன் பின்னர் இந்த யானையை, சிங்கம் ஒன்று விரட்டிக் கொல்ல வந்தது; முனிவர் யானை வடிவில் இருக்கும் நாயைச் சிங்கமாக மாற்றினார். உடனே விரட்டி வந்த சிங்கம் பயந்து விட்டது.

• சிங்க உருவத்தைப் பெற்ற நாய் பயமின்றி, ஆசிரமத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்தது. அப்போது சிங்கத்தைக்

கொல்லும் ஆற்றல் பெற்ற, எட்டுக் கால் படைத்த சரபம் ஒன்று, அந்தச் சிம்மத்தைக் கொல்லப் போயிற்று.

இதை அறிந்த முனிவர், சிங்கத்தைச் சரபமாக மாற்றினுர். விரட்டி வந்த சரபம் பயந்து, அப்பால் விலகிப் போயிற்று. சரப வடிவத்தைப் பெற்ற நாய், பயமின்றிக் காடுகளில் சஞ்சரித்துக் கொண்டிருந்தது. அப்போது அதன் உள்ளத்தில் ஒரு தீய எண்ணம் தலை தூக்கலாயிற்று. "கருணை நிறைந்த இந்த முனிவர் நாயாக இருந்த என்னைச் சிறுத்தையாக மாற்றினுர்; சிறுத்தையைப் புலியாகவும், புலியை யானையாகவும், யானையைச் சிங்கமாகவும், சிம்மத்தைச் சரபமாகவும் மாற்றி அருள்புரிந்தார். பெறுதற்கரிய சரபப் பிறவியை நான் அடைந்திருக்கிறேன். கருணையுள்ள இந்த முனிவர், மற்ற விலங்குகளையும் சரபமாக மாற்றினுலும் மாற்றக் கூடும். ஆகவே, அதற்குள்ளாக இந்த முனிவரை நான் கொன்றுவிட வேண்டும்" என்று தீர்மானித்தது.

நாயின் தீய எண்ணத்தை ஞான திருஷ்டியால் முனிவர் தெரிந்துகொண்டார். உடனே சரபமாய் இருந்த நாயை விழித்து, "ஏ தீய மிருகமே! உயர்ந்த சரப வடிவத்தை உனக்கு நான் வழங்கினேன்; ஆயினும் நீ அந்தக் குலத்தில் பிறந்தவன் இல்லை. தீய எண்ணத்துடன் என்னை நீ கொல்ல நினைத்தாய்; அதனுல் நீ மீண்டும் நாய்ப் பிறப்பை அடைவாய்" என்று சபித்தார்.

உடனே சரபம் நாயாக மாறிவிட்டது. இழிந்த நிலையை அடைந்து, ரிஷி சாபத்தால் அது மிகுந்த துன்பத்தை அனுபவித்தது.

"ஆகையால் அரசனே! ஒழுக்கம், நேர்மை, கல்வி, அறிவு, ஊக்கம், உறுதிப்பாடு, கருணை, புலனடக்கம், பொறுமை, பெருமை முதலியன உள்ளவனையே அரசன் அமைச்சனுக நியமித்துக்கொள்ள வேண்டும்.

"யோக்கியமானவர்களையே அரசன் பதவியில் அமர்த்த வேண்டும். சோதனை செய்யாமல் யாரையும் பதவியில் அமர்த்தக் கூடாது. கெட்ட குலத்தில் பிறந்தவர்களை மந்திரியாகக் கொண்டுள்ள அரசன் மேன்மை அடைய மாட்டான்.

"நல்ல குலத்தில் பிறந்தவன் விவேகக் குறைவானவனும் இருப்பினும், தீய காரியங்களில் பிரவேசிக்க அவனுக்குத் துணிவு ஏற்பட மாட்டாது.

"பிராமணனாய்ப் பிறந்தும், பாவ காரியத்தைச் செய்வானாயின் அவனை விலக்க வேண்டும். தாழ்ந்த குலத்தில் பிறந்தும் தருமத்தைக் கடைப்பிடிப்பவனை மேன்மையானவனாகக் கருத வேண்டும். அவனுடைய உறுதிப்பாட்டை ஆராய்ந்து அறிந்து, உயர் பதவியில் நியமிக்க வேண்டும்."

## அரசன் கடமைகள்

"பிதாமகரே! அரசர்களின் கடமைகளைப்பற்றி இது வரை தாங்கள் விரிவாகச் சொன்னீர்கள். அவற்றை மீண்டும் சுருக்கிச் சொன்னால், நினைவில் பதித்துக்கொள்வது எளிதாக இருக்கும்" என்று சொன்னார் யுதிட்டிரர்.

"அரசனே! சொல்லுகிறேன் கேள். சகல உயிர்களையும் பாதுகாப்பது அரசனது தலையாய கடமை. பல விதங்களில் அரசன் மயிலைப்போல் நடந்துகொள்ள வேண்டும்.

"கவர்ச்சிகரமாகப் பல வண்ணங்களுள்ள தோகையோடு மயில் விளங்குவதைப்போல, தருமத்தை அறிந்த அரசன் பலவித வடிவங்களை எடுத்துக்கொள்ள வேண்டும். தான் நிறைவேற்றிக்கொள்ள விரும்பும் காரியத்துக்குத் தக்கவாறு தனது வடிவத்தை மாற்றி அமைத்துக்கொண்டால், அந்தக் காரியம் எளிதில் முடியும்.

"இலையுதிர் காலத்தில் மயில் கூவாது; அதேபோல, அரசன் தன் மந்திராலோசனையை எப்பொழுதும் வெளியிடாமல் இருக்க வேண்டும்.

"மயில் அழகிய தோற்றத்துடன் விளங்குவதை ஒப்ப, எப்பொழுதும் அரசன் அழகிய தோற்றத்துடன் விளங்க வேண்டும். சுருக்கமாகப் பேச வேண்டும். அதை இனிமையோடு பேசத் தெரிந்துகொள்ள வேண்டும்.

"அருவியில் மயிலுக்கு நாட்டம் இருப்பதைப்போல, வரவுசெலவு கணக்குகளில் அரசன் அதிக நாட்டம் உடையவனாய் இருக்க வேண்டும்.

"மலையிலுள்ள ஏரிகளை அடுத்து, மயில் வாழ்வதைப் போல், சான்றோரை அடுத்து, அரசன் நீதி செலுத்த வேண்டும்.

"தனது கொண்டையை மயில் பகட்டுடன் காட்டிக் கொள்வதைப்போல, தான் தருமசீலன் என்று பிறர் எண்ணும்படி அரசன் பகட்டுடன் நடந்துகொள்ள வேண்டும்.

"தன்னைப் பாதுகாத்துக்கொண்டு, மயில் பாம்பைக் கொத்துவதுபோல, அரசன் தன்னைப் பாதுகாத்துக்கொண்டு, தண்டனையை நிறைவேற்ற வேண்டும்.

"மயிலானது இருக்கும் மரத்தைவிட்டு அதிகச் செழுமையுள்ள மரத்துக்குச் செல்வதுபோல, வரவு அதிகமும், செலவு குறைவுமுள்ள காரியங்களை அரசன் செய்ய வேண்டும்.

"மயில் தன் தோற்றத்தினாலே காக்கை முதலியவற்றின் தோற்றத்தைக் குறைவுடையதாகச் செய்வதுபோல, தன் நேர்மையினாலேயே பகைவர்களின் குற்றங்கள் வெளிப் படும்படி அரசன் செய்ய வேண்டும்.

"மழை காலத்தில் மயில் களிப்புடன் இருப்பதைப் போல, இரகசியமாக இன்பங்களை அரசன் நுகர வேண்டும்.

"கோணலான நடையும் கோபமும் நஞ்சுமுள்ள பாம்புகளை, மயில் கொல்வதைப்போல, கோணல் நடையும் கோபமும் நஞ்சு போன்ற தீய புத்தியுமுள்ள மனிதர்களை அரசன் கொல்ல வேண்டும்.

"புத்தியுள்ளவன் நாள்தோறும் பசுவைக் கறப்பதைப் போல, நாள்தோறும் பூமியிலிருந்து பலன் கிட்டும்படி அரசன் பார்த்துக்கொள்ள வேண்டும். ஒவ்வொரு மலரிலிருந்தும் எடுத்து, ஒரு இடத்தில் வண்டு தேனைச் சேகரித்துவைப்பது போல, அரசன் பொருளைச் சேகரித்துக் குவித்து வைக்க வேண்டும்.

"பொக்கிஷத்திலுள்ள பணத்தை அரசன் வீண் விரையம் செய்யக் கூடாது. மக்களின் நலத்துக்கும் பாதுகாப்புக்கும் பெரும் பகுதியை ஒதுக்கி வைத்துவிட்டு, மீதி இருப்பதைத்தான் தன் பொருட்டு செலவுக்கு வைத்துக்கொள்ள வேண்டும்.

"சிறிது பொருள்தான் என்ற அலட்சிய மனப்பான்மை கூடாது; பகைவர்களின் பலத்தைக் குறைத்து மதிப்பிடக் கூடாது; தன்னைத் தானே சோதித்துத் தெரிந்துகொள்ள வேண்டும். அறியாதவர்களை நம்பக்கூடாது.

"உற்சாகம், திறமை, அடக்கம், அறிவு, உடல்நலம், ஊக்கம், பொறுமை, இடத்துக்கும் நேரத்திற்கும் ஏற்பக் கவனமாய் இருத்தல் இந்த எட்டுக் குணங்களும் அரசனுக்கு இருக்க வேண்டும். பொருள் சிறிதாய் இருப்பினும் சரி, அல்லது பெரிதாய் இருப்பினும் சரி, அது பெருகி வளர்வதற்கு இவை அவசியமாகும். நெருப்பு சிறிதாய் இருப்பினும், சிறிது நேரம் கிடைத்துவிட்டால் அது பெரிய நெருப்பாக வளர்ந்துவிடுகிறது; ஒரு சிறிய விதை பல ஆயிரமாகப் பெருகி விடுகிறது. ஆகவே, தனக்கு வரவும் செலவும் பெரும் அளவில் இருப்பதை எண்ணிக்கொண்டு, சிறிய அளவில் இருப்பதைப் புறக்கணிக்கக் கூடாது.

"அரசன் புத்தியுள்ளவனைத் தனக்குத் துணையாக வைத்துக்கொள்ள வேண்டும். கூர்மையான புத்திக்குப் பலமான பகைவனையும் கொல்லும் ஆற்றல் உண்டு. பலம் குறைவாய் இருப்பினும், புத்தியால் அதைச் சரிக்கட்டிக்கொண்டு விடலாம். புத்தியை முன்னிட்டுக்கொண்டு செய்யும் காரியம், சிறந்த காரியமாக அமையாது.

"வழி, துறை புலப்படாத காரியங்களில் அரசன் புத்தியைச் செலுத்தக்கூடாது. குற்றமில்லாதவர்களிடத்தில் குற்றத்தைக் கற்பிக்கும் மன்னனுக்குப் பொருளும் கிட்டாது; புகழும் கிட்டாது.

"யுதிட்டிரா! நான் கூறியுள்ள இந்தக் கடமைகளைச் செய்து, குடிமக்களை நீ பாதுகாத்தால், மேன்மை அடைவாய்," என்று பீஷ்மர் சொன்னார்.

# ஆபத் தருமம்

## ஆபத்துக் காலத்தில் மூன்று மீன்கள்

"பிதாமகரே! தனக்கும் நாட்டுக்கும் ஆபத்து நேரும் சமயத்தில் அரசன் எப்படி எப்படி நடப்பது நல்லது?" என்று கேட்டார் யுதிட்டிரர்.

அதற்குப் பீஷ்மர் அடியில் வருமாறு பதில் சொன்னார்.

"குந்தி மைந்தனே! இந்தக் கதையைக் கவனத்துடன் கேள்.

அதிக மேடு இல்லாத ஓர் இடத்தில், ஒரு குட்டை இருந்தது. அதில் மீன்கள் ஏராளமாக இருந்தன. அவற்றில் மூன்று மீன்கள், கனிவோடு ஒன்றுடன் ஒன்று நெருங்கிப் பழகி, அந்த குட்டையில் வாழ்ந்தன.

அந்த மூன்று மீன்களுக்குள், ஒன்று முன்னெச்சரிக்கையுள்ள மீன்; மற்றொன்று சமயத்திற்குத் தக்க அறிவுள்ள மீன்; மூன்றாவது மந்த புத்தியுள்ள மீன்.

இவை மூன்றும் சேர்ந்து ஒரே இடத்தில் வசித்து வந்த காலத்தில், ஒரு நாள், செம்படவர்கள் சிலர் வந்து, மேட்டிலுள்ள குட்டை நீரை, கால் தோண்டி, நாற்புறங்களிலும் கீழே வடியவிட்டார்கள்.

தாங்கள் வாழும் குட்டை நீர் குறைவதைக் கவனித்த முன்னெச்சரிக்கையுள்ள மீன், தன் இரு நண்பர்களையும் நோக்கி, "குட்டை நீர் குறைந்து வருகிறது. நீரில் வாழ்கின்ற நாம் வழி காய்வதற்கு முன்பே, வேறு இடத்துக்குச் சென்று விடலாம். வரப் போகிற ஆபத்தை அறிந்து, விலகிக்கொள்பவன் பின்பு மகிழ்ச்சியாக வாழ்வான்" என்று கூறிற்று.

அதற்கு மந்த புத்தியுள்ள மீன், "அவசரப்பட்டு ஏன் வேறு இடத்துக்குப் போக வேண்டும்? அபாயம் இருப்பதாக என் புத்திக்குத் தோன்றவில்லை; ஆகவே, அவசரப்பட வேண்டாம்" என்று பதில் சொல்லிற்று.

சமயோசித புத்தியுள்ள மீன், "சமயம் வரும்போது பார்த்துக்கொள்ளலாம். இப்பொழுது அவசரப்படத் தேவையில்லை. ஆபத்து வந்தால் அப்பொழுது சமாளித்துக்கொள்ளலாம்" என்று கூறிற்று.

மற்ற மீன்கள் சொன்ன பதிலைச் செவிமடுத்த முன்னெச்சரிக்கையுள்ளமீன், ஒரு வாய்க்கால் வழியாக இறங்கி நீர் நிலையுள்ள வேறு ஓர் இடத்தை அடைந்து, அந்த நீரில் சௌகரியமாக வசிக்கத் தொடங்கிற்று.

குட்டையில் நீர் வடிந்திருக்கிறதா என்று செம்படவர்கள் பார்க்க வந்தார்கள். நீர் நன்றாக வடிந்திருப்பதைக் கண்டதும், அந்தக் குட்டையில் இருக்கும் மீன்களைப் பிடிக்கத் தொடங்கினார்கள்.

மந்த புத்தியுள்ள மீன் செம்படவர்கள் கையில் சிக்கி விட்டது; அதைப் பிடித்துச் செம்படவர்கள் கயிற்றில் கோத்துவிட்டார்கள்.

இதைப் பார்த்ததும், சமயோசித புத்தியுள்ள மீன், தானே வலியச் சென்று, அந்தக் கயிற்றை கௌவி, பிடிபட்ட மீனைப்போல் தொங்கிற்று.

குட்டையில் இருக்கும் சகல மீன்களையும் பிடித்துவிட்டதாக எண்ணி, மீன்களைத் தூக்கிக்கொண்டு, செம்படவர்கள் புறப்பட்டார்கள்.

பிறகு, நிறைய நீர் உள்ள ஓர் இடத்துக்குச் சென்று, மீன்களை எல்லாம் அவர்கள் கழுவத் தொடங்கினார்கள்; அப்போது சமயோசித புத்தியுள்ள மீன், கயிற்றிலிருந்து நழுவி, நீரில் புகுந்து, செம்படவர்களுக்குத் தெரியாமல் தப்பித்துக் கொண்டது.

மந்தபுத்தியுள்ள மீன், செம்படவர்களின் கையில் சிக்கி அழிந்து போயிற்று.

"ஏ யுதிட்டிரா! முன்னெச்சரிக்கையுள்ளவனும் சமயோசித புத்தியுள்ளவனும் அழிவிலிருந்து தப்பி, சுகமாக வாழ்வார்கள் என்பதையும், மந்த புத்தியுள்ளவன் நிச்சயம் அழிவான் என்பதையும் இந்தக் கதை மூலம் நன்றாகத் தெரிந்துகொள்" என்று கூறினார் பீஷ்மர்.

## ஆபத்துக் காலத்தில் எலியும் பூனையும்

"பரதகுலத் தோன்றலே! ஆபத்துக் காலத்தில் ஓர் அரசன் தன்னை எப்படிப் பாதுகாத்துக்கொள்ள வேண்டும்; யாரை நண்பனாய்க் கொள்ள வேண்டும்? யாரைப் பகைவனாய்க் கொள்ள வேண்டும்? எப்படி நடந்துகொண்டால் அவன் அபிவிருத்தி அடைந்து மேன்மை அடையலாம்?" என்று யுதிட்டிரர் கேட்டார்.

அதற்கு அடியில் வரும் கதையை, யுதிட்டிரருக்குப் பீஷ்மர் சொன்னார்:

ஒரு பெரிய காட்டில் பெரிய ஆல மரம் ஒன்று இருந்தது. அந்த மரத்தின்மீது பல வகையான கொடிகள் படர்ந்திருந்தன. பறவைகள் கூட்டம் கூட்டமாக வசித்தன. கொடிய விலங்குகளும் அதன் நிழலில் தங்கி இளைப்பாறின.

அந்த ஆலமரத்தின் அடியில், வளை தோண்டிக்கொண்டு, பலிதம் என்று ஓர் எலி வசித்து வந்தது. அதே சமயத்தில் லோமசன் என்னும் பூனை ஒன்று, அந்த ஆல மரத்தின் கிளை ஒன்றில், மேலே வசித்து வந்தது.

காட்டில் வாழும் வேடன் ஒருவன் நாள்தோறும் மாலையில் அந்த ஆலமரத்துக்கு வந்து, விலங்குகளைப் பிடிக்கும் பொருட்டுப் பொறியைப் பொருத்தி வைத்துவிட்டுப் போவான். காலையில் வந்து, பொறியில் சிக்கியுள்ள விலங்குகளைத் தன் வீட்டுக்கு அந்த வேடன் எடுத்துப் போவான்.

ஒரு நாள் வேடன் வைத்திருந்த பொறியில் மாட்டிக்கொண்டு பூனை தவித்தது. இதைக் கண்ட எலி பொந்தைவிட்டு வெளிப்பட்டுப் பூனையிடம் பயமின்றிச் சஞ்சரிக்கத் தொடங்கிற்று. பூனை அருகே சென்று அதற்காகப் பொறியினுள் வைக்கப்பட்டிருந்த இறைச்சியை இழுத்துத் தின்னத் தொடங்கிற்று.

இது சமயம், எலியின் மற்றொரு பகைவனான கீரிப்பிள்ளை, மோப்பத்தால் எலி இருப்பதை அறிந்து, வேகமாக அதை நாடி வந்தது.

எலி அதனிடமிருந்து தப்ப எண்ணி மேலே ஆலமரத்தில் ஏற முயன்றது. ஆனால் அங்கேயுள்ள ஒரு மரப்பொந்தில், வளைந்த மூக்குள்ள ஆந்தை ஒன்று, தன்னைப் பிடிப்பதற்குத் தயாராக இருப்பதை எலி பார்த்துவிட்டது.

இரண்டு பக்கங்களிலும் ஆபத்து இருப்பதை அறிந்த எலி நடுங்கிவிட்டது. "ஆபத்து சமயத்தில் அறிவுள்ளவன் எவ்வாறு நடப்பது நலம்?' என்று எலி யோசிக்கலாயிற்று.

"என் உயிருக்குப் பல வழிகளிலும் இப்பொழுது ஆபத்து நேர்ந்திருக்கிறது. எப்படியாவது வழி துறைகளைக் கண்டு பிடித்து, உயிரைக் காப்பாற்றிக்கொள்ள நான் முயல வேண்டும். அறிவுள்ளவன் ஆபத்தைக் கண்டு கலங்கக் கூடாது. பூமிக்குச் சென்றால் கீரிப்பிள்ளை என்னைப் பிடித்துக்கொள்ளும். மரத்தின்மீது ஏறிச் சென்றால், ஆந்தை என்னைத் தின்று விடும். கயிறுகளை அறுத்துவிட்டால், பொறியிலிருந்து விடுபட்டு, பூனை என்னைப் பிடித்துக்கொள்ளும். இந்த மூன்று ஆபத்துக்களிலிருந்தும் தப்புவதற்கு வழி என்ன?

"ஆபத்திலிருந்து விடுபடுவதற்குப் பூனையைத் தவிர இப்பொழுது எனக்கு வேறு கதி கிடையாது. ஏனெனில், எனக்குப் பகைவனான இந்தப் பூனை என்னைப்போல் இப்பொழுது ஆபத்தில் மாட்டிக் கொண்டிருக்கிறது. இதற்கு உதவி செய்தால், மற்றப் பகைவர்களிடமிருந்து எளிதில் என் உயிரை நான் காப்பாற்றிக்கொள்ள முடியும். ஆகவே, என் பகைவனான இந்தப் பூனையை நான் முதலில் அடுக்கிறேன். அதுவும் என்னைப்போல் ஆபத்தில் சிக்கியிருப்பதால், தன் உயிரைக் காப்பாற்றிக்கொள்ள என் கருத்துக்கு அந்தப் பூனை இணங்கக் கூடும்" என்று நினைத்தது.

ஆகவே, அது பூனையை அணுகிற்று. அதை நோக்கி, இனிய வார்த்தைகளால் எலி பேசத் தொடங்கிற்று. "பூனையே! உன்பால் அன்புபூண்டு நான் பேசுகிறேன். நீ உயிருடன் இருக்கிறாயா? உனது உயிருக்கு ஆபத்து நேரும் என்ற அச்சம் உனக்கு வேண்டாம். என்னால் இயன்றதைச் செய்து, உனது உயிரை நான் காப்பாற்றுகிறேன். அதனால் நீயும் நன்மை அடைவாய்; நானும் நன்மை அடைவேன். நீ

பொறியில் சிக்கி இப்பொழுது தவிக்கிறாய். நான் கோட்டா னுக்கும் கீரிக்கும் பயந்து தவிக்கிறேன். இருவரும் இது சமயம் ஒத்துழைத்தால் ஆபத்திலிருந்து நாம் மீளலாம். நீ எனக்கு ஊறு செய்வதில்லை என்று உறுதி கூறினால், உன்னைப் பிணைத் திருக்கும் கயிறுகளை எனது பற்களால் நான் கடித்து அறுக் கிறேன். நீண்ட நெடும் காலமாக இந்த ஆலமரத்தின் கிளை யில் நீயும் அதன் அடியில் நானும் வசித்து வருகிறோம். பரஸ் பரம் இரு தரப்பிலும் நம்பிக்கை நிலவ வேண்டும். ஒரு தரப்பில் மட்டும் நம்பிக்கை இருக்குமானால் அதை அறிஞர் கள் பாராட்டுவது இல்லை. இனி நம் இருவரிடையிலும் நட்பு ஓங்கி வளரட்டும். காலம் தவறிச் செய்யும் காரியம் பயனற்றுப்போகும். அதை அறிஞர்கள் கொண்டாட மாட் டார்கள். நீயும் உயிர் வாழப் பிரியப்படுகிறாய். நானும் உயிர் வாழ ஆசைப்படுகிறேன். இருவரும் ஒத்துழைத்தால், இப்பொழுது நம் இருவரையும் எதிர்நோக்கி இருக்கும் ஆபத் திலிருந்து நாம் இருவரும் தப்பலாம்'' என்று கூறிற்று.

எலி சொன்ன வார்த்தைகளைச் செவிமடுத்த பூனை அதைப் பெரிதும் பாராட்டிற்று. அது எலியை நோக்கி, ''அழகுள்ள எலியே! உனது சொற்களை நான் பெரிதும் மதிக் கிறேன். என்னைக் காப்பாற்ற விரும்பும் நீ நீடு வாழ்வாய். தாமதியாது காரியத்தைச் செய்; சிந்தித்துக்கொண்டிருப் பதற்கு இது நேரம் அன்று. ஆபத்தில் அகப்பட்டுக் கொண் டுள்ள நாம் ஒருவருடன் ஒருவர் இணங்கிப்போய் ஆபத்தைக் கடக்க முயல்வோம். நீ செய்யும் உதவி வீண் போகாது. விடுதலையடைய உதவி செய். என்னால் இயன்றதை உனக்கு நான் உதவுகிறேன்'' என்று கூறிற்று பூனை.

தன் கருத்துக்குப் பூனை இணங்கிவிட்டதைக் கண்டு எலி ஆறுதல் அடைந்தது. ஆயினும் அது பூனையை நோக்கி, ''நீ சொல்லுவதை நான் ஏற்கிறேன். கீரியிடம் எனக்குப் பயம் அதிகம் இருப்பதால் தைரியமாக நான் உன்பால் வரு கிறேன். நீ என்னைப் பாதுகாப்பதாக உறுதி கூறினால் உன்னை நான் காப்பாற்றுகிறேன்; ஆந்தையிடமிருந்தும் என்னை நீ

காப்பாற்ற வேண்டும். இதற்கு நீ உடன்பட்டால் உன்னைப் பிணித்திருக்கும் கயிறுகளை நான் அறுத்துவிடுகிறேன். இது உறுதி'' என்று கூறிற்று.

அதற்கு அந்த பூனை, எலியிடம் "நண்பனே! பயப்படாமல் என் அருகே வா. நான் உனக்கு எவ்விதத் தீங்கையும் இழைக்க மாட்டேன். உனது கருணையால்தான் பிழைத்து நான் உயிர்வாழப் போகிறேன். என்னை விடுவித்த பின்னர் உனக்கு நான் என்ன செய்ய வேண்டும் என்பதைச் சொல். உடனே நான் செய்கிறேன். இருவரும் அதனால் நலம் பெறுவோம். உதவி செய்தவனுக்குப் மாற்றுதவி செய்வது உதவியாகாது; கைம்மாறு கருதாமல் முதலில் செய்யும் உதவியே சிறந்த உதவியாகும். அதனால் நீதான் என்னிலும் மேலானவன்'' என்று கூறிற்று பூனை.

நம்பிக்கைகொண்டு, பூனையை அணுகிற்று எலி. பயமின்றி அதன் அருகே சென்று அதன் மடியில் எலி படுத்து உறங்கத் தொடங்கிற்று. பூனை அதை ஒன்றும் செய்யவில்லை.

எலியும் பூனையும் அன்புடன் பழகுவதைக் கண்ட ஆந்தையும் கீரியும், ஆச்சரியமும் திகிலும் ஒருங்கே அடைந்தன. சேர்ந்து அவற்றை அணுகுவதற்கு அஞ்சி, தத்தம் இடத்துக்கு அவை திரும்பிவிட்டன.

ஆந்தையும் கீரியும் திரும்பியதைக் கவனித்த எலி எழுந்து, பூனையைப் பிணித்திருந்த கயிறுகளை மெல்ல மெல்ல, அறுக்கத் தொடங்கிற்று.

இதைக் கவனித்த பூனையை எலியைத் துரிதப்படுத்திற்று. "எலியே! நீ ஏன் தாமதமாகக் கயிறுகளை அறுக்கிறாய்? உனக்குப் பயம் நீங்கிவிட்டதனால் நீ என்னை அவமதிக்க எண்ணுகிறாய் போலும். அப்படிச் செய்யாதே; வேடன் வருவதற்கு முன்னர், கயிறுகளை அறுத்து எனக்கு விடுதலை அளி'' என்று பரபரப்புடன் கூறிற்று.

நற்பயிற்சியில்லாத பூனையின் அவசரப்போக்கை அறிந்த எலி நயந்த முறையில், "பூனையே! இப்படி நீ அவசரப்படக் கூடாது. எந்தச் சமயத்தில், எதை, எப்படிச் செய்ய வேண்டும் என்பதை நான் அறிவேன். அகாலத்தில் செய்யும்

காரியமானது எதிர்பார்க்கும் பலனைக் கொடுக்காது. அப்படியின்றி, தக்க சமயத்தில் செய்தால், அந்தக் காரியம் பெரும் பயனைக் கொடுக்கும். அகாலத்தில் உனக்கு நான் விடுதலை அளித்தால், அது எனக்குப் பீதியை உண்டாக்கும். ஆகையால், சமயத்துக்காக நான் காத்திருக்கிறேன். ஆயுத பாணியாக வேடன் வருவதைக் கவனித்ததும் நான் சுறுசுறுப்பாகப் பொறியை அறுப்பேன். நீ விடுதலை பெற்று மரத்தின் கிளைகளில் ஏறிக்கொள்வாய்: ஏனெனில் வேடன் அண்மையில் இருப்பதால், உன் உயிரைக் காப்பாற்றிக்கொள்வதில் நீ முனைப்புடன் இருப்பாய். நானோ வளையில் புகுந்து, எனது உயிரை உன்னிடமிருந்து காத்துக்கொள்வேன்'' என்று சொல்லிற்று.

எலி நயமாகச் சொன்ன வார்த்தைகள் பூனையின் செவியில் ஏறவில்லை. அது தன் உயிரைக் காப்பாற்றிக்கொள்ள மிகுந்த பரபரப்பு அடைந்தது. எலியை நோக்கி, கெஞ்சும் பாவனையில், "சான்றோராய் இருப்பவர்கள் நண்பனின் காரியத்தை இவ்விதம் செய்ய மாட்டார்கள். துன்பத்திலிருந்து துரிதமாக நான் உன்னைக் காப்பாற்றியதைப்போல, நீயும் துரிதமாக என்னைக் காப்பாற்ற முயலவேண்டும். தாமதித்து நீ காரியத்தைச் செய்தால், என் உயிர் போவது நிச்சயம். நான் முன்பு உனக்குச் சிறிது தீங்கு செய்திருந்தால் அதை மறந்து மன்னித்துவிடு. கருணைகூர்ந்து என்னைக் காப்பாற்று'' என்று வேண்டிற்று.

அதற்கு அந்த எலி, "பூனையே! நீ இப்பொழுது உன் காரியத்தில் அதிக நாட்டமுடன் இருக்கிறாய். அதேபோல நானும் என் காரியத்தில் நாட்டமுடன் இருப்பது அவசியமாகும். நண்பனிடத்தில் ஒருவனுக்குப் பயம் இருக்குமாயின், பாம்பின் பிடியில் அகப்படாமல் தப்புவதற்கு முயல்வதைப்போல, தன்னைப் பாதுகாத்துக்கொள்ள ஒருவன் முயல வேண்டும். பலமுள்ளவனிடத்தில் சமாதானம் செய்துகொண்டிருந்தாலும், கவனக் குறைவாய் இருந்தால், அதனால் ஆபத்து நேரலாம். ஒருவனுக்கு ஒருவன் நண்பனும் அல்லன்; ஒருவனுக்கு ஒருவன் பகைவனும் அல்லன். காரிய

நிமித்தமாகத்தான் ஒருவருடன் ஒருவர் பகைப்பதும் நட்புக் கொள்வதும் நேருகின்றன. காரியம் முழுதும் நிறைவேறி விட்டால், பின்னர் ஒருவனுடன் ஒருவன் சந்திப்பது நின்று போகும். தொடர்பு நீடித்து இருக்க வேண்டுமானல், காரியங்களை முழுதும் நிறைவேற்றி முடிக்கக் கூடாது. எல்லாக் கயிறுகளையும் அறுத்துவிட்டேன். ஒரு கயிறு மட்டும்தான் பாக்கி இருக்கிறது. வேடன் வரும் சமயத்தில் அதை அறுத்து முடித்துவிடுகிறேன். வேடனைக் கண்டதும் நீ பயந்து ஓட்டம் எடுப்பாய்; நானும் உன் பிடிப்பில் சிக்காமல் தப்பித்துக் கொள்வேன்'' என்று பதில் சொல்லிற்று எலி.

எலியும் பூனையும் இவ்விதம் உரையாடிக்கொண்டிருந்த சமயம், பொழுது புலர்ந்தது. வேடன் வந்துவிடுவான் என்ற பயம் பூனைக்கு இருந்தது. அது நினைத்தபடி பயங்கரமான அந்த வேடனும் பலவித ஆயுதங்களுடனும் நாயுடனும் அங்கே தென்பட்டான்.

பூனை பயந்து நடுங்கிற்று. அது எலியை நோக்கி, "இப்பொழுது நீ என்ன செய்யப்போகிறுய்?'' என்று கேட்டது.

உடனே எலி பாக்கியிருந்த ஒரு கயிற்றையும் அறுத்தது. விடுதலை அடைந்த பூனை, வேடனிடமிருந்து தப்பும் எண்ணத்துடன் மரத்தின்மீது ஏறிக்கொண்டது. எலியும் தப்பித்துக் கொண்டு, பொந்தில் புகுந்துகொண்டது.

வேடன் ஏமாந்து போனுன்; தான் வைத்திருந்த பொறியை எடுத்துக்கொண்டு வீடு திரும்பினுன்.

ஆபத்திலிருந்து தப்பிய பூனை, ஆல மரத்தின் கிளையில் இருந்தவாறே, தன்னை விடுவித்த எலியைக் கூவி அழைத்தது. "எலியே! என்னிடம் எதுவும் தெரிவியாமல், ஓடிப்போய் நீ பொந்துக்குள் புகுந்துகொண்டாய். என்மீதுள்ள சந்தேகம் உனக்கு இன்னும் அகலவில்லையா? என்னை நீ நம்பினுய்; என் உயிரைக் காப்பாற்றினுய். என்னுடன் சேர்ந்து மகிழ்ச்சியுடன் உணவு அருந்த வேண்டிய நீ என்பால் வராமல்இருப்பதற்குக் காரணம் என்ன? முதலில் நட்போடு என்னுடன் பழகின நீ, அந்த நட்பை வளர்த்துக்கொள்ள நீ ஏன் பிரியப்படாமல் இருக்கிறுய்? இது நல்ல செயல் அன்று. நட்பை,

ஆபத்துக் காலத்தில் அறுத்துக்கொள்பவனுக்கு நண்பர்கள் கிடைக்க மாட்டார்கள். உன் உதவியால் பேராபத்தி லிருந்து நான் உயிர் பிழைத்தேன். அதனால் உன்னை நான் போற்றுகிறேன்; என் சுற்றத்தார் முதலியோரும் உன்னைப் போற்றுகிறார்கள். எனது உடல், பொருள், ஆவி அனைத்துக் கும் நீதான் எஜமானன். உன் கட்டளைப்படி நடக்க நான் சித்தமாய் இருக்கிறேன். என்னைக் கண்டு பயப்படாதே. அருகே வா. உனக்கு என்னால் எவ்வித ஆபத்தும் நேராது" என்று வருந்தி அழைத்தது பூனை.

பூனை இவ்வாறு கூறின நன்மொழிகளை எலி ஏற்கவில்லை. "பூனையே! நீ கூறியவை அனைத்தையும் நான் செவிமடுத் தேன். என் மனத்தில் தோன்றுவதையும் உன்பால் சொல் வது என் கடமை. நண்பர்கள் யார், பகைவர்கள் யார் என் பதை ஒருவன் நன்கு தெரிந்துகொள்ள வேண்டும். நண்பர் கள் பகைவனைப்போல் இருப்பார்கள்; பகைவர்கள் நண்பர் களைப்போல் நடிப்பார்கள். இவர்களை யார் யார் என வேறு படுத்தித் தெரிந்துகொள்வது அவசியம். பிறப்பினால் எவனும் பகைவனும் இல்லை; நண்பனும் இல்லை. காரியமே ஒருவனை நண்பனாகவும் பகைவனாவும் ஆக்குகிறது. நட்பும் பகையும் நீடித்து நிலைத்து இருப்பது இல்லை. ஒரு சமயத்தில் நண்ப னாய் இருப்பவன், மற்றொரு சமயத்தில் காரிய மாறுபாட்டி னால் பகைவன் ஆகிவிடுவான். அதேபோல, பகைவனாய் இருப்பவன், நண்பன் ஆகிவிடுவான். ஆகவே எவனுடைய புத்தியும் போக்கும் ஒரே நிலையில் இருப்பது இல்லை; எவனை யும் அதிகமாக நம்புதல் கூடாது; ஆசையுள்ளவனுக்குத் தன் னைத் தானே காப்பாற்றிக்கொள்ளத் தெரியாது; அப்படி யிருப்பவன் பிறரை எவ்வாறு காப்பாற்றுவான்; ஆசையுள்ள வன் காரியங்களைக் கெடுத்துவிடுவான்; என்பால் உனக்குப் பிரியம் இருப்பதாக நீ இனிமையுடன் பேசுகிறாய். அது பொய்யான பேச்சு என்பதை நான் அறிகிறேன். ஒரு வயிற் றில் பிறந்தவர்களாயினும், காரண காரியம் இல்லாமல் யாருக்கும் பிரியம் ஏற்படுவது இல்லை. கொடுப்பதால் ஒருவன் பிரியன் ஆவான்; இன்சொலால் மற்றொருவன் பிரியன்

ஆவான்; ஜயத்தால் ஒருவன் பிரியன் ஆவான்; தவத்தால் ஒருவன் பிரியன் ஆவான். காரிய நிமித்தமே உலகத்தில் பிரியம் உண்டாகிறது. நம் இருவருக்கும் இடையில் பொதுவாக ஒரு காரியம் இருந்தது. அதனால் நம் இருவரிடையிலும் நட்பு உண்டாயிற்று. இப்பொழுது அந்தக் காரியம் முடிவடைந்துவிட்டதால், நம்மிடையே நிலவிய நட்பும் முடிவடைந்துவிட்டது. இப்பொழுது என்னை நீ விரும்புவது என்னைத் தின்னும் பொருட்டுத்தான் என்பதை நான் நன்கு அறிவேன். மேகத்தின் உருவம் அடிக்கடி மாறுபடுதல் போல, நண்பனாய் இருப்பவன் பகைவனாயும், பகைவனாய் இருப்பவன் நண்பனாகவும் மாறுபடுதல் இயல்பு. நீயும் நானும் இயல்பாகவே பகைவர்கள்; காரிய நிமித்தமாக இருவரும் நட்புக் கொண்டோம்; காரியம் முடிந்ததோடு நமது நட்பும் அகன்று விட்டது. இனி, நான் உன்னுடன் சேர விரும்பவில்லை. என் உயிரைக் காப்பாற்றிக்கொள்ள நான் பிரியப்படுகிறேன். உயிரைக் காப்பாற்றிக்கொள்ள ஒருவன் எதையும் இழக்கலாம்; அது குற்றமாகாது'' என்று பதில் சொல்லிற்று.

மீண்டும் பூனை எவ்வளவோ நயந்த வார்த்தைகள் சொல்லி, எலியை அழைத்தது. அதற்கு இணங்காது எலி அப்பால் போய்விட்டது. ஆலமரத்துப் பொந்தில், இனியும் தங்குவது ஆபத்து என்று கருதி, வேறு ஒரு வளைக்கு எலி சென்றுவிட்டது.

இந்தக் கதையைச் சொல்லி முடிந்த பின், பீஷ்மர் யுதிட்டிரரிடம் ''அரசே! தனக்கு ஆபத்து நேர்ந்த காலத்தில், பல பகைவர்களை வஞ்சித்து எலி உயிர் பிழைத்தது. அதைப் போலவே, அறிவுள்ள அரசன் தன் உயிருக்கு ஆபத்து நேரும் காலத்தில் பகைவர்களுடன் சமாதானம் செய்துகொண்டு, பொதுவாக இருக்கும் பகைவனை அழிக்க வேண்டும். எவனையும் அதிகம் நம்புதல் கூடாது. எப்பொழுதும் விழிப்போடு இருக்க வேண்டும்'' என்று சொன்னார்.

# குற்றம் செய்த இடத்தில் தங்காதே

“பிதாமகரே! நம்பிக்கை யில்லாது இருக்கும் அரசன் எவ்வாறு பகைவர்களை வெல்வான் ? பிறரை நம்பாது இருக்கும் அரசரால் எவ்வாறு இராஜ்யபாரத்தை நடத்த முடியும்? இதுபற்றி எனக்குள்ள ஐயங்களைத் தாங்கள் அகற்ற வேண்டும்” என்று சொன்னார் யுதிட்டிரர்.

“யுதிட்டிரா! இதுபற்றி உனக்கு ஒரு கதை கூறுகிறேன் கேள். காம்பிலிய நாட்டில், பிரம்ம தத்தன் என்று ஓர் அரசன் இருந்தான். அவனுடைய அந்தப்புரத்தில் சிட்டுக்குருவி ஒன்று நெடுங் காலம் வசித்து வந்தது. பறவைப் பிறவியை எடுத்திருந்தாலும் மற்ற உயிரினங்கள் பேசும் வார்த்தைகளைப் புரிந்துகொள்ளும் ஆற்றல், அந்தச் சிட்டுக் குருவிக்கு இருந்தது.

ஒரு நாள், அந்தச் சிட்டுக் குருவி அழகுள்ள குஞ்சு ஒன்றைப் பொறித்தது; அதே நாளில் அரசனுடைய மனைவியும் ஒரு புதல்வனைப் பெற்றாள்.

சிட்டுக் குருவி அரசன்பால் நன்றியறிதலுடன் இருந்ததால், நாள்தோறும் கடற்கரைக்குப் பறந்து சென்று, அங்கிருந்து இரண்டு கனிகளை எடுத்து வரும். ஒன்றைத் தன் குஞ்சினிடம் கொடுக்கும்; மற்றொரு கனியை அரசகுமாரனுக்குக் கொடுக்கும்.

நாள்தோறும் குருவி கொணர்ந்து கொடுத்த அமிர்தத்துக்கு ஒப்பான கனியை உண்டு உண்டு, அரசகுமாரன் கொழுத்துப் பருத்து வளர்ந்தான். ஒரு நாள் அவனைத் தாதி ஒருத்தி, தன் ஒக்கலில் எடுத்துக்கொண்டு, குருவிக் குஞ்சை அரசகுமாரனுக்குக் காட்டினாள். யாரும் இல்லாத சமயத்தில் ஒரு நாள் அந்தக் குஞ்சை எடுத்து, தரையில் மோதிக் கொன்றுவிட்டு, அரசகுமாரன் தன் தாயிடம் போய் விட்டான்.

சிட்டுக் குருவி வழக்கம்போல் கடற்கரையிலிருந்து கனியை எடுத்துக்கொண்டு திரும்பி வந்தது. தன் குஞ்சு

உயிர் துறந்து பூமியில் கிடப்பதைக் கண்டு, சிட்டுக் குருவி பரிதவித்து அழுதது; அதன் முகத்தில் கவலையும் கண்ணீரும் தேங்கி நின்றன. "அரசகுலத்தில் உதித்தவனிடம் நல்ல எண்ணம் இருக்காது. அன்பு இருக்காது; பாசம் கிடையாது; காரியம் முடிய வேண்டியது இருந்தால் நல்ல வார்த்தைகளை உரைப்பார்கள்; முடிந்த பின் அவனைப் புறக்கணித்துத் தள்ளி விடுவார்கள். அபகாரம் செய்யும் இயல்புள்ளவர்களாதலால், அரச குலத்தில் பிறந்தவர்களை நம்பக்கூடாது. அபகாரத்தைச் செய்துகொண்டே, நல்வார்த்தை கூறும் பழக்கம் அரசர்களிடம் உண்டு. இந்த அரசகுமாரன் நன்றிகொன்றவன்; கூடப்பிறந்து வளர்த்த என் புதல்தனை இவன் கொன்றுவிட்டான். அதற்குச் சரியான துன்பத்தை இவனுக்கு நான் செய்யப்போகிறேன்" என்று சொல்லிற்று,

பிறகு அந்தச் சிட்டுக் குருவி அரசகுமாரனின் இரு கண்களையும் தன் காலால் தோண்டிப் பெயர்த்துவிட்டு ஆகாயத்தில் பறந்தது. "வேண்டும் என்றே செய்யும் பாவம் பலன் இல்லாமல் போகாது; செய்ததற்குப் பிரதியாகச் செய்த போதிலும், அதனால் ஏற்படவிருக்கும் நன்மை தீமைகள் அழியா. பாவம் செய்தவன் அதன் பலனை அப்பொழுது அனுபவியாவிடினும், அவனுடைய மனைவி மக்கள் கட்டாயம் அனுபவியாமல் தீராது" என்று சொல்லிற்று.

தன் புதல்வனின் கண்களைப் பெயர்த்தது சிட்டுக்குருவி தான் என்பதை அறிந்த அரசன், "குருவியே! நாங்கள் உனக்குத் தீங்கு இழைத்தோம் ; பதிலுக்கு நீயும் எங்களுக்குத் தீங்கு இழைத்துவிட்டாய், இரண்டும் சமமாய்விட்டன. ஆகவே, நீ இங்கிருந்து போக வேண்டாம்" என்று வேண்டினன்.

அதற்குச் சிட்டுக் குருவி, "அரசே! ஒரு முறை குற்றம் செய்தவன் குற்றம் செய்த இடத்திலேயே நம்பிக்கையுடன் தங்குவது அறிவீனமாகும். வெளிப்படையாக விரோதம் இருக்கும் இடத்தில், நன்மொழியைச் செவிமடுத்து நம்பிக்கை வைத்தல் கூடாது. அப்படி நம்பிய மூடன் மோசம் போவான்; தன் உயிரையும் இழப்பான். பகைமையுணர்ச்சி

எளிதில் நெஞ்சை விட்டு நீங்குவது இல்லை ; அடியோடு பகை வனை அழிக்காதவரை, பகைமை உணர்ச்சி அகலாது. பிற ருக்கு நம்பிக்கை ஏற்படுமாறு ஒருவன் நடந்துகொள்ளவேண் டுமேயன்றி, தான் பிறரை நம்பக் கூடாது. உறவினரில் தாய் தந்தை சிறந்தவர்கள்; மனைவி விதையை பயிர் செய்யும் வயலுக்கு ஒப்பாவாள்; மகன் விதையைப் ஒப்பான்; உடன் பிறந்தவன் பகைவனுவான். மற்றவர்கள் பலன் கிட்டும் வரையில் அன்புடன் பழகுவார்கள். தனக்கு நேரும் நன்மை தீமைகளைத் தான் தான் அனுபவிக்க வேண்டுமே யன்றி மற்ற வர்கள் முன்வர மாட்டார்கள். முதலில் மரியாதையும் பிறகு அவமரியாதையும் ஏற்படும் இடத்தில் ஒருவன் நீடித்து வசிக்கக் கூடாது. ஆகவே, நான் போகிறேன்'' என்று கூறிற்று.

''குருவியே! செய்த குற்றத்துக்கு நீ பதில் குற்றம்தான் செய்தாய். அதனுல் குற்றம் இல்லை. நீ இங்கேயே பயமின் றித் தங்கலாம்'' என்று சொன்னுன் பிரமதத்தன்.

''அரசே! பகைமை என்பது ஐந்து விதங்களால் உண்டா கிறது; பெண், பொருள், வாக்கு, பிறவி, குற்றம் செய்தல் இந்த ஐந்தாலும் பகைமை ஏற்படுவது இயல்பு. அது எளி தில் மறைவது இல்லை. விறகில் தீ ஒளிந்துகொண்டிருப்பது போல, பகைமை உணர்ச்சி ஒருவன் நெஞ்சில் ஒளிந்துகொண் டிருக்கும். அதைப் பொருளாலும் கடுஞ் சொற்களாலும் நன்மொழியாலும் நீதிகளாலும் அவிக்க முடியாது. பகை வனை நாசம் செய்யாதவரை, பகைமைத் தீ ஒருபோதும் அணைவது இல்லை. ஆகையால், உன் சொல்லை நம்பி, உன் ேைடு சேர்ந்து இருக்க நான் பிரியப்படவில்லை'' என்று கூறிற்று சிட்டுக் குருவி.

அதற்குப் பிரமதத்தன் ''குருவியே ! சகல காரியங்களும் காலத்தாலேயே நடக்கின்றன. அதனுல் ஒருவன் மீதும் குற் றம் சொல்வதற்கு இல்லை. காலத்தாலேதான் மனிதன் பிறக் கிறுன்; காலத்தாலேதான் மனிதன் இறக்கிறுன். ஆகை யால் எதற்கும் நீயோ நானோ காரணம் இல்லை. எல்லாம் காலத்தாலே நடைபெறுவதால் உன்மீதும் குற்றம் இல்லை;

என்மீதும் குற்றம் இல்லை. நீ செய்த குற்றத்தை நான் பொறுத்துக்கொண்டேன்; ஆகையால் இங்கேயே இரு'' என்று சொன்னான்.

''அரசே! வேதத்தை அறிந்த பெரியோர்கள் துக்கம் என்பது பிறப்பு இறப்புகளால் உண்டாகிறது என்று கூறுகிறார்கள். எல்லாருக்கும் உயிர்மீது ஆசை இருக்கவே செய்யும். எல்லாரும் மக்களை விரும்புவார்கள்; சுகத்தை விரும்புவார்கள்; துக்கத்தைக் கண்டு பயப்படுவார்கள். முதுமை ஒருவனுக்குத் துக்கத்தைக் கொடுக்கும்; பொருளின் அழிவு துக்கத்தை உண்டாக்கும். வேண்டாத இடத்தில் வசிப்பதும், விரும்பிய பொருளை இழப்பதும் துக்கத்தை உண்டாக்கும். புதல்வனை இழந்ததனால் ஏற்பட்டு இருக்கும் துக்கம் எளிதில் ஒருவனை விட்டு அகலாது; நூறு ஆண்டுகள் கடந்து போயினும் நெஞ்சைவிட்டு அகலாது அது உறுத்திக்கொண்டே இருக்கும். ஆகவே, நம் இருவருக்கும் இனி இணக்கம் ஏற்பட இயலாது'' என்று சொல்லிற்று குருவி.

குருவி இப்படிச் சொன்னதும், பிரமதத்தன் அதை நோக்கி, ''நம்பிக்கை யில்லாமல் எவனும் பொருளைச் சேர்க்க முடியாது. எந்தக் காரியத்தையும் செய்ய முடியாது பயந்து கொண்டே வாழ்க்கை நடத்துபவன் பிணத்துக்கு ஒப்பாவான்'' என்று சொன்னான்.

''அரசே! நீ கூறுவதை நான் ஏற்க முடியாது. அறிவுள்ள மனிதன் எந்த இடத்திலும் மகிழ்ச்சியுடன் இருப்பான்; பிறருக்குப் பயத்தை உண்டுபண்ண மாட்டான்; தானும் பயப்பட மாட்டான். புத்தியுள்ளவனுக்குச் சிறிய பொருளையும் பெரிதாக விருத்தி செய்துகொள்ள வழிவகைகள் தெரியும். சில மனிதர்கள் அறிவுக் குறைவால் வீடு, மனை, நண்பன், சொந்த நாடு என்று உரிமை கொண்டாடுகிறார்கள். கெட்ட வழியிலிருந்தும், அவமானம் உண்டாகும் இடத்திலிருந்தும், வறுமை பீடித்த தன் சொந்த நாட்டிலிருந்தும் ஒருவன் விலகி வாழ வேண்டும்; அங்கும் மரியாதை

யுடன் வாழத் தெரிந்துகொள்ள வேண்டும். ஆகையால், இங்கு வசிக்க நான் பிரியப்படவில்லை; வேறு இடத்தில் வசிப்பதையே விரும்புகிறேன். நிவர்த்திக்க முடியாத ஒரு பெரும் தீங்கை உன் புதல்வனுக்கு நான் செய்துவிட்டேன். கெட்ட மனைவி, கெட்ட மகன், கெட்ட அரசன், கெட்ட நண்பன், கெட்ட சம்பந்தம், கெட்ட தேசம் ஆகியவற்றை ஒருவன் விலக்கி வாழ்தல் நலம் பயக்கும். கெட்ட மனைவியிடம் மகிழ்ச்சி உண்டாகாது; கெட்ட நண்பனிடம் நம்பிக்கை ஏற்படாது; கெட்ட தேசத்தில் சுகமாக வாழ முடியாது; கெட்ட அரசன் ஆளும் நாட்டில் அமைதி இராது; கெட்ட மகனிடம் பிரியம் தோன்றாது; கெட்ட சம்பந்தத்தினால் பொருளுக்கு அழிவும் அவமானமும் உண்டாகும்.

"அரசன் குணமுள்ளவனாயும் அறத்தில் பிடிப்புள்ளவனாயும் இருந்தால், அவன் ஆளும் நாட்டில் மனைவி, தேசம், நண்பன், பிள்ளைகள், சம்பந்திகள், உறவினர்கள் அனைவரும் சுகமாக இருப்பார்கள். தருமம் அறியாத அரசன் ஆளும் நாட்டில் வாழும் மக்கள் அல்லலுற்றுத் தவிப்பார்கள். அரசன் தான் அறம் பொருள் இன்பம் மூன்றுக்கும் மூலமாவான். எந்த அரசன் ஆறில் ஒரு பங்கு வரி வாங்கிக்கொண்டு, குடிமக்களைப் பாதுகாக்கவில்லையோ, அவன் அரசன் என்னும் பெயரில் நாட்டை ஆளும் திருடனாவான். அரசனைத் தந்தை, தாய், குரு, காவலன், அக்கினி, குபேரன், எமன் என்று மனு சொல்லி இருக்கிறார்:

"குடிமக்களிடம் அன்பு பாராட்டுவதால், அரசன் தந்தையாகிறான்.

"நன்மையைச் சிந்தித்துப் பாதுகாப்பதால் தாய் ஆகிறான்.

"விரோதிகளை அழிப்பதால் நெருப்பு ஆகிறான்.

"நன்மை செய்யாதவர்களைக் கட்டுப்படுத்துவதால் யமன் ஆகிறான்.

"வேண்டும் பொருள்கள் கிடைக்க வசதி செய்வதால் குபேரன் ஆகிறான்.

"தருமத்தை உபதேசிப்பதால் குரு ஆகிறான்.

"தருமத்தைப் பாதுகாப்பதால் காவலன் ஆகிறான்.

"இவ்வாறு பதில் உரைத்துவிட்டுச் சிட்டுக்குருவி, பிரம தத்தனிடம் விடைபெற்றுக்கொண்டு, தனக்கு விருப்பமான இடத்துக்குப் பறந்து சென்றுவிட்டது.

"அரசே! நீ விரும்பிக் கேட்டதற்குப் பதில் சொல்லிவிட்டேன். இன்னும் எது பற்றி என்னிடம் நீ கேட்க விரும்புகிறாய்?" என்று கேட்டார் பீஷ்மர்.

அடுத்து வரும் கேள்வியை யுதிட்டிரர் கேட்டார்.

## பாரத்வாஜரின் போதனைகள்

"பிதாமகரே! உலகத்தில் தருமம் குன்றி, திருடர்கள் மலிந்துவிட்டால், அத்தகைய ஆபத்துக் காலத்தில், அரசன் எவ்விதம் நடந்துகொள்ள வேண்டும்?" என்று யுதிட்டிரர் கேட்டார்.

"பரதகுலத் தோன்றலே! இதுபற்றி முன்பு சத்ருந்தபன் என்னும் அரசனும் பாரத்வாஜரும் உரையாடி இருக்கிறார்கள். அதை உனக்குச் சொல்லுகிறேன் கேள்

ஒரு முறை சத்ருந்தபன் என்னும் அரசன் பாரத்வாஜரை அணுகி, "முனிவரே! கிட்டாத ஒன்றைத் தனக்குக் கிட்டும்படி செய்வது எவ்விதம்? கிட்டிவிட்டால் அதை எப்படி விருத்தி செய்வது? விருத்தி செய்யும்போது அதை எப்படிப் பாதுகாப்பது? பாதுகாக்கப்பட்டதை எப்படிப் பயன் படுத்துவது?" என்று கேட்டான்.

அந்த அரசனுக்குப் பாரத்வாஜர் செய்த உபதேசம் வருமாறு:

அரசன் தக்கபடி தண்டிப்பதில் கண்ணும் கருத்துமாய் இருக்கவேண்டும்; தனது ஆற்றலை வெளிப்படுத்திக்கொண்டே இருக்க வேண்டும்.

தனக்குள்ள குறைபாடுகளை வெளியே காட்டிக்கொள்ளக் கூடாது. பிறருடைய குறைபாடுகளைக் கண்டுபிடித்து அதை வெளிப்படுத்த வேண்டும்.

அரசன் தண்டிப்பான் என்ற எண்ணம் இருந்தால், மக்கள் பயந்து நடப்பார்கள். சாம, பேத, தான, தண்டம் இந்த நான்கு உபாயங்களில், தண்ட உபாயத்தைத்தான் கல்விமான்கள் சிறப்பித்துச் சொல்லி இருக்கிறார்கள்.

மூலமாய் இருப்பதை முதலில் அழித்துவிட்டால், அதை அடுத்து இருப்பவர்கள் அனைவரையும் அழித்ததற்குச் சமம் தான். பெரிய மரத்தின் வேர்களை அழித்துவிட்டால், அதன் பின்னர் அதன் கிளைகளுக்கு வாழ்வு ஏது?

எதிரிக்கு ஆதாரமாய் இருப்பதை எல்லாம் அறிவுள்ள அரசன் முதலில் அழிக்க வேண்டும்; அதன் பின்னர் அவனுக்கு உதவியாய் இருப்பவர்களை நசுக்க வேண்டும்.

ஆபத்து நேரும் காலங்களில் அரசன் நன்கு யோசனை செய்ய வேண்டும்; தனது ஆற்றலை நன்கு வெளிப்படுத்த வேண்டும்; திறமையோடு போர்செய்ய வேண்டும். திறமையாகப் பின்வாங்க வேண்டும்; தயங்கக் கூடாது.

வாக்கில் பணிவும் வணக்கமும் இருக்க வேண்டும்; ஆனால் மனத்தைக் கத்திபோல் கூர்மையாக வைத்துக்கொள்ள வேண்டும். கோபத்துக்கும் ஆசைக்கும் வயப்பட்டுவிடாமல் இனிமையாகவும் மென்மையாகவும் பேச வேண்டும்.

தொடர்புகொள்ள வேண்டிய சமயம் நேர்ந்தால், பகைவனோடு அரசன் சமாதானம் செய்துகொள்ள வேண்டும். ஆயினும் முன்னெச்சரிக்கையுள்ள அரசன் அவனை முழுக்க முழுக்க நம்பக் கூடாது. காரியம் கைகூடிய பின், தான் பிணைத்துக்கொண்ட தொடர்பை விரைவில் அரசன் விலக்கிக் கொள்ள வேண்டும்.

நண்பன் போல, இதம் தரும் சொற்களை இனிமையாகக் கூறிப் பகைவனைத் தன் வசப்படுத்திக்கொள்ள வேண்டும்; பாம்போடு பழகுவதுபோல, அவன்பால் பயந்து பழகிவர வேண்டும்.

புத்திக் கூர்மையுள்ள பகைவனைச் சென்ற காலத்தில் நிகழ்ந்தவற்றை எடுத்துச் சொல்லி, அவன் புத்தியை மழுங்கச்செய்ய வேண்டும். வருங்காலக் காலத்தில் நன்மைகள் செய்வதாகக் கூறித் தீயவனைக் கட்டுப்படுத்த வேண்டும்: நிகழ் காலத்திலேயே நன்மைகளைச் செய்து, படித்தவனைக் கட்டுப்படுத்த வேண்டும்.

காரியத்தைச் சாதித்துக்கொள்ளும்வரையில் பகைவனைத் தோளில் தூக்கிவைத்துக்கொண்டு கொண்டாட வேண்டும். தனக்குச் சாதகமான சூழ்நிலைகள் உண்டானதும், மண்குடத்தைக் கல்லில் போட்டு உடைப்பது போல, எதிரியைச் சிதறடித்துவிட வேண்டும்.

ஒருக்ஷணம் நேரம்தான் பிரகாசிக்கும் என்றாலும், கருங்காலி மரத்தின் சங்குபோலப் பளபளக்க வேண்டும்; உமியைப்போல வருடக் கணக்கில் புகைந்துகொண்டே இருத்தல் கூடாது.

அரசன் விடாமுயற்சியுடன் தன் பகைவன் வீட்டுக்குப் போதல் வேண்டும்; நலக்குறைவாய் இருப்பினும் பொருட்படுத்தாது அவனை நலம் விசாரிக்க வேண்டும்.

சோம்பேறிகள், ஊக்கமில்லாதவர்கள், அதிக கௌரவம் கொண்டாடுகிறவர்கள், பெயர் கெட்டு விடுமோ என்று பயப்படுகிறவர்கள், விட்டுவிட்டு முயற்சி செய்பவர்கள் இவர்களால் ஒருபோதும் செல்வத்தைச் சேகரிக்க முடியாது.

ஆமை தன் உறுப்புகளை மறைத்துக்கொள்வது போல, அரசன் தன் குறைபாடுகளைப் பிறருக்குத் தெரியாதபடி மறைத்துக்கொள்ள வேண்டும்.

கொக்கைப் போல, ஒரே நினைப்பாக இருந்து காரியங்களைச் சாதித்துக்கொள்ள வேண்டும்.

தனது ஆற்றலைச் சிம்மத்தைப்போல் வெளியிட வேண்டும்.

• ஓநாயைப்போல் பதுங்கி இருந்து, கூரிய அம்பைப்போல் குத்தி நாசம் செய்ய வேண்டும்.

குடி, சூது, வேட்டை, மாதர், இசை இவற்றை அனுபவிக்கும்பொழுது மிகுந்த கவனத்துடன் இருக்கவேண்டும். மிதமிஞ்சி ஈடுபட்டால் தீமை உண்டாகும்.

குருடனாய் இருக்க வேண்டிய சமயத்தில் குருடனாய் இருக்கத் தெரிந்துகொள்ள வேண்டும்; செவிடனாய் இருக்க வேண்டிய சமயத்தில், செவிடனைப்போலவே இருக்க வேண்டும்.

காலம் இடம் இரண்டையும் அறிந்து தனது ஆற்றலை அரசன் வெளிப்படுத்த வேண்டும்; தேச காலங்களை அறியாது பயன்படுத்தும் ஆற்றல் பயனற்றுப் போகும்.

பயம் வரும்வரையில் பயந்தவனைப்போலக் காரியங்களைச் செய்ய வேண்டும்; பயம் வந்துவிட்டாலோ சிறிதும் பயப்படாது, காரியத்தில் ஈடுபட வேண்டும்.

துணிவு இல்லாதவனுக்குப் பெருத்த நன்மை ஒருபோதும் கிட்டாது.

வரப்போகும் ஆபத்தைத் தெரிந்துகொள்ள வேண்டும்; வந்த ஆபத்தை விலக்க வேண்டும்.

நம்பிக்கையில்லாதவனிடம் நம்பிக்கை கொள்ளக் கூடாது; நம்பிக்கையுள்ளவனிடத்திலும் அதிக நம்பிக்கை வைக்கக் கூடாது; பரீட்சை செய்யாமல் யாரையும் நம்பக் கூடாது.

பிறவியால் நண்பனும் இல்லை; பகைவனும் இல்லை. செயல்களின் தொடர்பால், நண்பர்களும் பகைவர்களும் ஏற்படுகிறார்கள்.

பகைவனாய் இருப்பவன் இனிக்க இனிக்கப் பேசினாலும் அவனை விடக்கூடாது; அவன் நிலையை நினைந்து கவலைப்படவும் கூடாது. தனக்கு முன்பு விரோதம் செய்தவனை அவசியம் அழிக்க வேண்டும்.

அடிக்கப் போகும்போது, இனிய வார்த்தைகளைக் கூறி அடிக்க வேண்டும்; அடித்த பின்னரும் இனிய வார்த்தைகளைக் கூறத் தவறக் கூடாது.

நன்மொழியாலும், வெகுமதியாலும், பொறுமையாலும் மனிதர்களைத் தன் வசப்படுத்திக்கொள்ள வேண்டும்.

பயனற்ற காரியங்களுக்காக யாரையும் பகைத்துக் கொள்ள வேண்டாம்; அது மாட்டுக் கொம்பைத் தின்பது போலாகும்; மாட்டுக் கொம்பைத் தின்பதால், பற்கள் உடைவது மட்டு மின்றி, எவ்விதப் பயனும் ஏற்படாது.

கடனின் மிச்சமும், தீயின் மிச்சமும், பகைமையின் மிச்சமும், திரும்பத் திரும்பத் வளர்ச்சியடைந்துகொண்டே இருக்கும். ஆகையால், இவற்றில் மிச்சம் இருக்கும்படி விட்டு வைக்கக் கூடாது.

கழுகைப்போல் நீண்ட பார்வையும், கொக்கைப்போல் நீடித்த இருப்பும், நாயைப்போல் முன்னெச்சரிக்கையும், சிங்கத்தைப்போல் பயமற்ற ஆற்றலும், காகத்தைப்போல் பிறர் இங்கிதத்தைத் தெரிந்துகொள்ளுதலும், பாம்பைப்போல் பகைவனிடம் துணிச்சலோடு செல்லவும் அரசனுக்குத் தெரிந்து இருக்க வேண்டும்.

சூரனை வணக்கத்தால் அடக்க வேண்டும்; பயமுள்ளவனைப் பேதப்படுத்தி அடக்க வேண்டும். லோபியைப் பொருளைக் கொடுத்துக் கட்டுப்படுத்த வேண்டும். சம பலமுள்ளவனைப் போர் செய்து அடக்க வேண்டும்.

கருணையாக நடந்துகொண்டால் அவமதிக்கத் தலைப்படுங்கள்; கொடுமையாக நடந்துகொண்டால் பயப்படுபவர்கள்; கருணையோடு இருக்க வேண்டிய சமயத்தில் கருணையோடும், கொடுமையாக நடந்துகொள்ள வேண்டிய சமயத்தில் கொடுமையாகவும் அரசன் நடந்துகொள்ள வேண்டும். இந்த இரு பண்புகளும் எவனிடம் இருக்கிறதோ, அவனுக்குத் தான் காரியங்களை வெகு திறமையாகச் சாதித்துக்கொள்ளத் தெரியும்.

பண்டிதனோடு பகைத்துக் கொண்டவன், தூரத்தில் விலகி இருக்கிறேன் என்ற எண்ணத்தில், அசட்டையாக இருத்தல் கூடாது. புத்தியுள்ளவன் கைகளுக்கு நீண்டு வளரும் ஆற்றல் உண்டு; துன்பமடைந்த புத்திசாலி, நீண்டு வளரும் தனது கைகளால் துன்பம் செய்வான்.

• எதன் கரையைக் கடப்பது சாத்தியம் இல்லையோ, அதன் கரையைத் தாண்ட முயலக் கூடாது; எதைப் பிறன் திரும்ப

வும் கவர்ந்து செல்ல முடியுமோ, அதை எடுத்துக்கொள்ள ஆசைப்படக் கூடாது. எதன் வேரைப் பிடுங்க முடியாதோ, அதைக் கல்லக் கூடாது. எவனைக் கீழே தள்ள முடியாதோ அவனை அடிக்கக் கூடாது.

"இவ்விதம் ஆபத்துக் காலங்களில் அரசன் கடைப்பிடிக்க வேண்டிய முறைகளைப் பாரத்வாஜர் எடுத்துக் கூறி இருக்கிறார்" என்று சொல்லி முடித்தார் பீஷ்மர்.

## விருந்தோம்பல்

"பிதாமகரே! சரண் அடைந்தவனைப் பாதுகாப்பவனுக்கு எத்தகைய பலன் கிட்டும் என்பதை எனக்குக் கூற வேண்டுகிறேன்" என்று யுதிட்டிரர் சொன்னார்.

அதற்குப் பீஷ்மர், "அரசனே! முன்பு இதுபற்றி முசுகுந்த மன்னனுக்கு, சுக்கிராச்சாரியர் ஒரு கதை சொல்லி இருக்கிறார். அதை நான் உனக்குக் கூறுகிறேன் கேள்:

காலன் போன்ற கருணையற்ற வேடன் ஒருவன் ஒரு காட்டில் வசித்து வந்தான்; அவன் பறவைகளைப் பிடித்துக் கொன்று வாழ்க்கை நடத்தி வந்தான். அவனுக்கு உற்றார் உறவினர் யாரும் இல்லை. அதருமம் தருமம் என்பதை அறியாமல் அந்த வேடன் பறவைகளைப் பிடித்து விற்றுக் காலத்தையும் பொழுதையும் கழித்து வந்தான். அந்த மூட வேடனுக்கு வேறு தொழிலில் நாட்டம் ஏற்படவில்லை.

ஒரு சமயம் அவன் காட்டில் சஞ்சரித்தபோது கோரமான கடும் புயல் ஒன்று உண்டாயிற்று. காற்றும் புயலும் மழையும் மின்னலும் பார்க்கப் பயங்கரத்தை உண்டு பண்ணின. ஒரு நொடியில் பூமி முழுதும் நீரால் நிறைந்து விட்டது.

அந்த வேடன் குளிரால் நடுங்கி அவதிப்பட்டான்; எங்கே மேடு இருக்கிறது, எங்கே பள்ளம் இருக்கிறது என்பதை அவனால் அறிய முடியவில்லை. தள்ளாடித் தள்ளாடி நடந்து அவன் சென்றுகொண்டிருந்தான்.

பறவைகளோ மழையின் கடுமையைத் தாங்காது மரங்களில் மறைந்து பதுங்கி இருந்தன. சில பறவைகள் காற்றால் அலைப்புண்டு அங்குமிங்கும் பறந்தன: மான்களும் மற்ற விலங்குகளும் மழையாலும் காற்றாலும் நலிந்து சோர்வுற்று அங்குமிங்கும் சுற்றின.

வேடன் நடந்து சென்றுகொண்டிருந்தபோது, குளிரால் நலிவுற்று, பூமிமீது கிடக்கும் பெண் புறு ஒன்றைக் கண்டான். தான் துன்பத்துடன் இருப்பதையும் மறந்து, அந்தப் பாவி வேடன், தரைமீது கிடந்த பெண் புறுவைத் தூக்கி, தன் கூட்டில் போட்டுக்கொண்டான். பாப புத்தியுள்ள அந்த வேடனுக்கு, பாபத்தைத் தவிர, வேறு ஒன்றும் செய்யத் தோன்றவில்லை.

அவன் தொடர்ந்து சென்றபோது, அடர்ந்த நிழலும் நிறையக் கனிகளும் கொண்ட பெரிய மரம் ஒன்று இருப்பதைக் கண்டான். அந்த மரத்தில் கூட்டங் கூட்டமாகப் பறவைகள் வசித்துக்கொண்டிருந்தன. மற்றவர்களுக்கு உபகாரம் செய்யும் பொருட்டே அந்த மரத்தைப் பிரம்மதேவன் படைத்திருந்தார்.

வேடன் அந்த மரத்தை அடைந்தவுடன் மழையும் நின்றுவிட்டது. ஆகாயத்தில் நட்சத்திரங்கள் தோன்றின. வேடன் தன் கிராமத்துக்குத் திரும்ப ஆசைகொண்டான். குளிரால் நலிந்திருந்தாலும் கிராமம் வெகு தொலைவில் இருந்ததாலும் இரவு பொழுதை அந்த மரத்தின் அடியிலே கழிக்க அந்த வேடன் எண்ணினான். ஆகவே, அந்த மரத்தைக் கைகூப்பி வணங்கிவிட்டு. "இந்த மரத்திலுள்ள தெய்வங்களை நான் சரண் அடைகிறேன்" என்று சொல்லிவிட்டுத் தரைமீது இலைகளைப் பரப்பி, ஒரு கல்லைத் தலைக்கு அணையாக வைத்துக்கொண்டு, அந்த வேடன் உறங்கலானான்.

அந்த மரத்தில் நெடுங் காலமாக, புறு ஒன்று தன் மனைவியுடன் வசித்து வந்தது. காலையில் இரைதேடச் சென்ற தன் பேடு திரும்பாததைக் கண்ட ஆண் புறு வருத்தமடைந்தது. "இரவு வந்துவிட்டது. இரை தேடச் சென்ற என் அன்பு

மனைவி இன்னும் திரும்பவில்லை. ஒரே காற்றும் மழையும் இடியும் மின்னலுமாக இருக்கிறது. என்ன காரணத்தால் அவள் இன்னும் திரும்பாமல் இருக்கிறாளோ அதன் காரணம் தெரியவில்லை. காட்டுக்குச் சென்ற என் மனைவி நலத்துடன் திரும்புவாளா? அவள் இல்லாத வீடு எனக்கு வீடாகத் தோன்றவில்லை. வெறும் சூனியமாகத் தோன்றுகிறது. பேரன் பேத்திகள், பிள்ளைகுட்டிகள், பணியாட்கள் முதலிய வர்களால் சூழ்ந்திருந்தாலும் மனைவியில்லாத வீடு கணவ னுக்கு வெறும் சூனியம்தான். வெறும் வீட்டை வீடு எனக் கூடாது; எந்த வீட்டில் மனையாள் இருக்கிறாளோ அதையே வீடு என்பது பொருந்தும். மனையாள் இல்லாத வீடு, காடே ஆகும்; சிவந்த கடைக்கண்ணுள்ள என் அன்பான மனைவி இப்பொழுது திரும்பாவிட்டால், நான் உயிர் வாழ்வ தால் யாது பயன்? நல்ல விரதமும் நியமமுமுள்ள அவள், நான் உண்ணுவிட்டால் தானும் உண்ண மாட்டாள்; நான் நீராடாவிட்டால் அவளும் நீராட மாட்டாள். நான் நிற்கா விட்டால் அவளும் நிற்பது இல்லை. நான் படுத்த பின்னர் தான் அவள் படுப்பாள். நான் மகிழ்ச்சியுடன் இருந்தால் அவளும் மகிழ்ச்சியுடன் இருப்பாள்; துக்கமுற்று வருந்தினால் அவளும் துக்கமுற்று வருந்துவாள், நான் வெளியில் செல் லும் காலத்தில் வாடிய முகத்துடன் இருப்பாள். நான் கோபத்துடன் இருந்தால் அவள் அன்போடு பேசுவாள். பதிவிரதையான என் மனைவியை நான் என் உயிரிலும் மேலாக மதிக்கிறேன். எவனுக்கு மனைவி இருக்கிறாளோ அவன்தான் உலகில் பாக்கியம் பெற்ற மனிதன். பசி, களைப்பு, துன்பம் முதலியவற்றை அறிந்து அதற்கு ஏற்ப மனைவி நடந்துகொள்வாள். மரத்தடியில் வசிக்க நேரினும் மனைவியுடன் இருந்தால், அந்த மரத்தடி அவனுக்குப் பெரிய மாளிகை ஆகும். மாளிகையில் வசித்தபோதிலும், மனைவி இல்லாவிட்டால், அந்த மாளிகை காடே ஆகும். அறம், பொருள், இன்பம் மூன்றுக்கும் மனைவிதான் துணையாய் இருப்பவள். வேறு நாடு செல்லும் காலத்தில் கணவனுக்கு நம்பிக்கை யூட்டுபவள் மனைவிதான். கணவனுக்கு மனைவி தான் உத்தமமான துணை; உதவியில்லாத மனிதனுக்கு

ஊன்றுகோல்போல் உதவுபவள் மனைவிதான். துன்பமுற்ற வனுக்கும் நோயால் வாடுபவனுக்கும் உதவி புரிபவள் மனைவி தான். துன்பமுற்ற மனிதனுக்கு மனைவியைக் காட்டிலும் உற்ற துணை யாரும் இல்லை. மனைவியை நிகர்த்த மருந்து இல்லை; மனைவியை நிகர்த்த உறவினன் இல்லை. கணவ னுக்கு மனைவிதான் கதி. அன்போடு உபசரிக்கும் மனைவி இல்லாத வீட்டில் வாழ்வதைக் காட்டிலும், காட்டில் வாழ் வது மேலானது'' என்று சொல்லி, அந்த ஆண் புறு புலம் பிற்று.

ஆண் புறு இப்படிப் புலம்புவதை, வேடன் கூட்டில் அடைபட்டுக்கிடந்த பெண் புறு செவிமடுத்தது, "அந்தோ அன்புள்ள என் கணவரே என்னைப் பலவாறு பாராட்டிப் பேசுவதால் நான் பாக்கியசாலிதான். எவளுடைய கணவன் மகிழ்ச்சியுடன் இருக்கிறானோ, அவளே பெண் என்ற சொல் லுக்கு அருகதையுள்ளவள்'' என்று நினைத்து வருந்தியது.

பிறகு, தான் கூட்டில் அடைபட்டு இருப்பதையும் பொருட்படுத்தாது, ஆண் புறுவைக் கூவி அழைத்து, "நாதா! தங்களுக்கு நலம் பயக்கும் வழியை நான் சொல்லுகிறேன். அதன்படி தாங்கள் செய்யுங்கள், தங்களை அண்டி அடைக் கலம் புகுந்தவர்களைக் காப்பது தங்கள் கடன். குளிராலும் பசியாலும் நலிந்து பறவை பிடிக்கும் வேடன் இதோ படுத் திருக்கிறான். இவனை உபசரியுங்கள்; விருந்தினனை உபசரிப் பது இல்லறத்தானுடைய கடமை. என்னை நினைத்து நீர் வருந்த வேண்டாம். நான் இறந்துபட்டாலும் வேறு ஒருத் தியை மணந்துகொண்டு, நீர் இல்லற தருமத்தைக் கடைப் பிடிக்கலாம்'' என்று கூறிற்று.

மனைவி அன்புடன் சொன்ன வார்த்தைகளைக் கேட்டு ஆண் புறு ஆனந்தம் அடைந்தது. பிறகு அது, பறவை பிடிக் கும் வேடனைப் பார்த்து, "வேடனே! உனக்கு நல்வரவு; வருத்தப்படாமல் உன் வீட்டில் இருப்பதைப்போல் நீ நினைத் துக்கொள்; உனக்கு வேண்டியதைச் சொல்; செய்கிறேன். வீட்டுக்கு வந்தவன் பகைவனுயினும் அவனை உபசரிக்க

வேண்டுவது கடமை. தன்னை வெட்ட வந்திருப்பவன் என்பது தெரிந்தும், மரம் அவனுக்கு நிழலைக் கொடுக்காமல் இருப்பது இல்லை'' என்று சொல்லிக் கேட்டது.

ஆண் புறு இப்படிச் சொன்னதும், வேடன் அதை நோக்கி, "என்னைக் குளிர் வருத்துகிறது. அதனின்று காப்பாற்றிக்கொள்ள விரும்புகிறேன்'' என்று சொன்னான்.

உடனே, ஆண் புறு காய்ந்த சருகுகளைத் தரைமீது பரப்பி விட்டுத் தீக் கொணரும் பொருட்டு வேகமாகப் புறப்பட்டுச் சென்றது. ஒரு கம்மாளன் வீட்டுக்குச் சென்று, தீயை எடுத்துக்கொண்டு வேகமாகத் திரும்பியது. அந்தத் தீயைப் பெரிதாக வளர்த்த பின், வேடனை நோக்கி, "பயப்படாமல் வந்து, உனது உறுப்புக்களைச் சூடாக்கிக்கொள்'' என்று கூறிற்று.

"ஆகட்டும்'' என்று சொல்லி, வேடன் தன் அங்கங்களைச் சூடாக்கிக்கொண்டான். பிறகு, மகிழ்ச்சியுடன் அந்தப் புறுவை நோக்கி, "எனக்குப் பசிக்கிறது. முறைப்படி ஆகாரம் கொடு'' என்று சொன்னான்.

"உன் பசியை அகற்றுவதற்குரிய ஆகாரம் என்னிடம் கிடையாது. காட்டில் வசிக்கும் நாங்கள் அன்றன்றுடத் தேவையை மட்டும்தான், ரிஷிகளைப்போல் கவனித்துக் கொள்வது உண்டு. சேமித்து வைக்கும் பழக்கம் எங்களிடம் கிடையாது'' என்று கூறிற்று.

இப்படிச் சொன்ன பின், அந்தப் புறுவின் முகத்தில் ஒரு வித மாறுதல் உண்டாயிற்று. விருந்தினனை ஓம்ப வேண்டும் என்ற கவலை அதன் முகத்தில் பிரதிபலித்தது. பின்னர் அது ஒரு முடிவுக்கு வந்து வேடனை நோக்கி, "விருந்தினனை உபசரிப்பது தலையாய கடன் என்பதை அறிவேன்'' என்று சொல்லிவிட்டு, மீண்டும் தீயை வளர்த்து, பிரகாசிக்கச் சொல்லிவிட்டு, மூன்று முறை அதை வலம் வந்தது; பிறகு முகத்தில் புன்சிரிப்புத் தவழ, எரிந்துகொண்டிருக்கும் நெருப்பில் போய் விழுந்தது.

இதைக் கவனித்த வேடன், "புறு என்ன காரியம் செய்துவிட்டது?'' என்று கவலைப்பட்டான். "நான் கொடியவன்; கோரமான பாபம் என்னைப் பீடிக்கும்'' என்று தன்னைத்

தானே அவன் கடிந்துகொண்டான். நெருப்பினிடையே கிடக்கும் ஆண் புறுவைப் பார்த்துப் பார்த்துப் பலவாறு புலம்பினான். "புத்தியில்லாத கொடியவனான நான், பெரும் பாவம் செய்துவிட்டேன். என்னையும் எனது தொழிலையும் நிந்திக்க வேண்டும். விருந்தினனை எவ்வாறு உபசரிக்க வேண் டும் என்பதை இந்த ஆண் புறுவின் செய்கை மூலம், நான் தெரிந்துகொண்டேன். எனது கொடிய தொழிலையும் மற்றத் தீய பழக்க வழக்கங்களையும் துறந்துவிட்டு, ஆகாரத்தைச் சுருக்கி, தவ வாழ்வை நான் மேற்கொள்ளப் போகிறேன்" என்று சொன்னான்.

பிறகு, தான் வைத்திருந்த கம்பு, வலை, கூடு முதலிய வற்றை அப்பால் எறிந்தான்; கூட்டுக்குள் இருந்த பெண் புறு வுக்கு விடுதலை வழங்கினான். பிறகு, வேடன் வடக்கு நோக் கிப் புறப்பட்டுப் போய்விட்டான்.

வேடன் போனவுடன் பெண் புறு தன் கணவனை நினைந்து கதறியது. "நாதா! உமக்குப் பிரியக் குறைவாக இதுவரை நான் நடந்துகொண்டது இல்லை. பல புதல்வர் களைப் பெற்றிருப்பினும், பதியை இழந்த பெண்ணுக்கு வருத்தமே மேலிட்டு நிற்கும்; கணவனை இழந்த காரிகைக்கு உற்றார் உறவினரும் வருந்திப் பரிவு காட்டுவார்கள். நான் உம்முடன் சேர்ந்து சுகபோகமாக வாழ்ந்தேன். உம்மைப் பிரிந்த பின்னர் எனக்கு இன்பம் ஏது? தந்தை அளவுடன் அளிப்பார்; உடன் பிறந்தவர்களும், புதல்வர்களும் அளவுப் படிதான் அளிப்பார்கள். அளவில்லாமல் அளித்து உபசரிப் பவர் கணவர்தான். மனைவிக்குக் கணவன்தான் கதி. நாதா! நீர் இல்லாமல் இவ்வுலகில் வாழ்வதால் எனக்கு யாது பயன்?" என்று பலவாறு புலம்பிற்று.

பிறகு, அந்தப் பெண் புறு, தன் கணவன் விழுந்து கிடக்கும் நெருப்பில் தானும் போய் விழுந்தது.

• விருந்தினனை ஓம்புவதற்காகத் தன் உயிரையும் ஈந்த ஆண் புறு சொர்க்கம் அடைந்தது; கணவன் வழியைப் பின்

பற்றிய பெண் புறாவும், அதன் கணவனுக்குக் கிட்டின மேலான கதியை அடைந்தது.

இந்த இரண்டு புறாக்களும் மேலான கதியை அடைந் திருப்பதை வேடன் அறிந்தான். "எத்தகைய தவத்தை மேற்கொண்டால் எனக்கு மேலான பதவி கிட்டும்?" என்று தன்னைத் தானே அவன் கேட்டுக்கொண்டான்.

பிறகு காட்டில் உண்டான நெருப்பில் வீழ்ந்து தன் உயிரை நீத்தான். தவ வாழ்வை மேற்கொண்டிருந்த அவ னுக்கு, புறாக்களுக்குக் கிட்டிய புண்ணிய லோகம் கிட்டியது.

"யுதிட்டிரா! பசுவைக் கொன்றவனுக்குப் பிராயச்சித் தம் உண்டு; கொடியவனாய் இருப்பினும் சரண் அடைந்த வனை எவன் கொல்லுகிறானோ, அவனுக்குப் பிராயச்சித்தம் இல்லை" என்று கூறினார் பீஷ்மர்.

## இறந்தவர் பிழைப்பது உண்டா?

"பிதாமகரே! இறந்தவன் உயிர்பெற்று வாழ்வது சாத்தியமா? இதைத் தாங்கள் இதுவரை பார்த்திருக்கிறீர் களா? அல்லது கேள்விப்பட்டாவது இருக்கிறீர்களா?" என்று யுதிட்டிரர் கேட்டார்.

"யுதிட்டிரா! இது சம்பந்தமாகப் பழைய கதை ஒன்று வழங்குகிறது. அதை உனக்குச் சொல்லுகிறேன் கேள்," என்று அடியில் வரும் கதையைப் பீஷ்மர் சொன்னார்.

வைதிசம் என்னும் நகரில் வசித்த ஓர் அந்தணனுக்கு நீண்ட காலத் தவத்துக்குப் பின்னர், ஆண் மகவு ஒன்று பிறந்தது. அந்தக் குழந்தை வளர்ந்து, வாலிபப் பருவத்தை அடையு முன்னர் இறந்துவிட்டது.

உற்றார் உறவினர் பலவாறு புலம்பி அழுதார்கள். சோகம் தாங்காது கண்ணீர் உகுத்துச் சிறுவனை தூக்கிக் கொண்டு மயானம் சென்றார்கள். சிறுவனுடைய சொற் களையும் விளையாட்டையும் நினைந்து நினைந்து ஏங்கி, ஒருவரை

ஒருவர் கட்டிக்கொண்டு அழுதார்கள்; பிணத்தை மயா னத்தில் போட்டுவிட்டு, வீடு திரும்ப அவர்களுக்கு மனம் வரவில்லை.

எல்லாரும் கதறி அழுதுகொண்டு, வீடு திரும்பாமல் இருப்பதைக் கண்ட கழுகு ஒன்று, அவர்களை நோக்கிப் "பிண மாகிவிட்ட இந்தக் குழந்தையைக் காலனிடம் ஒப்படைத்து விட்டு, வீடு திரும்புங்கள். தாமதிக்க வேண்டாம். காலனுக்கு வசப்பட்ட பல்லாயிரக் கணக்கான ஆடவர் பெண்டிரை, அவரவர் உறவினர்கள் மயானத்தில் தள்ளிவிட்டுத் திரும்பா மல் தீராது. இன்பமும் துன்பமும் மாறி மாறி வருவது இயல்பு. சேர்க்கையும் பிரிவும் இயல்பாக நடப்பதுதான். செத்தவனை மயானத்துக்குச் சுமந்து வருபவர்களும் இனிச் சாகப் போகிறவர்கள்தான். எலும்புகளும் நரிகளும் கழுகு களும் நிறைந்த இந்த மயானத்தைவிட்டுச் செல்லாது நீங்கள் நிற்பதால் யாது பயன்? இறந்தவர்கள் பிழைப்பது இல்லை என்பதை அறிந்திருந்தும் நீங்கள் இன்னும் ஏன் நிற்கிறீர்கள்? சூரியன் அஸ்தமிக்கப் போகிறான். தாமதியாது வீடு திரும்புங்கள்" என்று சொல்லிற்று.

கழுகு சொன்ன வார்த்தைகளைச் செவிமடுத்த உற்றார் உறவினர்கள், சிறுவனின் பிணத்தை மயானத்தில் போட்டு விட்டு, வீடு திரும்பினார்கள்.

அப்போது கரிய நிறமுள்ள நரி ஒன்று, வளையிலிருந்து வெளியே வந்து, திரும்பிச் செல்பவர்களை நோக்கி, "மூடர் களே! உங்களிடம் கருணை கிடையாதா? பயந்து ஏன் இப் படித் திரும்புகிறீர்கள்? இறந்த இந்தச் சிறுவன் இன்னும் சிறிது நேரத்தில் உயிர் பெற்று எழுந்தாலும் எழலாம். அப் படியிருக்கும்போது குழந்தையை மயானத்தில் போட்டு விட்டு, நீங்கள் ஏன் திரும்புகிறீர்கள்? எவனுடைய சொற் களைச் செவிமடுத்து நீங்கள் ஆனந்தம் அடைந்தீர்களோ, அவனிடம் இப்பொழுது உங்களுக்கு ஏன் அன்பு குன்றி விட்டது? பறவை விலங்குகள்கூட, தத்தம் குஞ்சு குட்டி களிடம் பாசத்துடன் இருப்பதை நீங்கள் பார்க்கவில்லையா? கண்ணீர் உகுப்பதை விட்டுவிட்டு, இறந்த இந்தச் சிறுவனை

நெடு நேரம் அன்போடு நோக்குங்கள்; மணமகன்போல் காட்சி அளிக்கும் இந்தச் சிறுவனை மயானத்தில் போட்டு விட்டுச் செல்லாதீர்கள்'' என்று சொல்லிற்று.

நரி கூறின வார்த்தைகளைச் செவிமடுத்த சிறுவனின் உறவினர்கள், அவனிடம் திரும்பினார்கள். இதைக் கவனித்த கழுகு, "புத்திக் கட்டையான மானிடர்களே! அற்ப புத்தியுள்ள நரியின் சொல்லைக் கேட்டு நீங்கள் ஏன் திரும்புகிறீர்கள்? உயிரை யிழந்து கட்டைபோல விறைத்துக் கிடக்கும் இந்தக் குழந்தைக்காக நீங்கள் ஏன் வருந்துகிறீர்கள்? உங்களைப்பற்றி நீங்கள் ஏன் கவலைப்பட வில்லை? பாவத்திலிருந்து விடுபடுவதற்கான தவத்தைச் செய்யுங்கள்; தவத்தால் அனைத்தும் கைகூடும். ஒவ்வோர் உயிரும் தத்தம் வினைகளுக்கு ஏற்ப இன்ப துன்பங்களை அனுபவிக்கிறது. தந்தையின் கர்ம பலன் புதல்வனையும் புதல்வனின் கர்மபலன் தந்தையையும் பாதிப்பது இல்லை. நல்ல காரியங்களைச் செய்து நற்பேற்றை அடையுங்கள். நல்லாருடன் இணங்கி உறவாடுங்கள். சிறுவனை நினைந்து ஏங்கி அழுவதை விட்டுவிடுங்கள். சிறுவன், வாலிபன், முதியவன் ஆகியவர்களை வேறுபாடு காட்டாமல் பிடித்துச் செல்கிறான் கூற்றுவன். இதற்காக ஏன் கவலைப்படுகிறீர்கள்?'' என்று சொல்லிற்று.

இதைச் செவிமடுத்த நரி, "மானிடர்களே! தன் இயல்புக்கு ஏற்ற புத்திமதிகளைக் கழுகு உங்களுக்குக் கூறிற்று. அது பற்றி நீங்கள் சிந்தித்துப் பாருங்கள். சிறுவனை இங்கே போட்டுவிட்டு, வீட்டிலிருந்து வீணே அழாதீர்கள். முயற்சி செய்யுங்கள். தெய்வம் உங்களுக்கு உதவிபுரியும். சூரியன் அஸ்தமிக்கப் போகிறான். ஆகையால் நீங்கள் இங்கே இருங்கள் அல்லது சிறுவனின் சடலத்தை எடுத்துச் செல்லுங்கள்'' என்று கூறிற்று.

உடனே கழுகு, "மானிடர்களே! நான் பிறந்து ஆயிரம் ஆண்டுகள் ஆகின்றன. ஆணாயினும் சரி, பெண்ணாயினும் சரி, இறந்தவர் பிழைத்ததை இதுவரை கண்டது இல்லை. சிலர் கர்ப்பத்திலே இறந்து பிறந்திருக்கிறார்கள்; மற்றும் சிலர்

தவழும் பருவத்தில் இறந்திருக்கிறார்கள். சிலர் வாலிபத்தில் இறக்கிறார்கள். சிலர் வயது முதிர்த்த பின் இறக்கிறார்கள். விலங்குகளும் பறவைகளும்கூட இந்த விதிக்கு விலக்கு அன்று. சிறுவனின் சடலத்தைவிட்டுச் செல்லுங்கள். அழுவதால் யாது பயன்? கண்களைத் திறந்து சிறுவன் உங்களைப் பார்க்கவும் இல்லை; நீங்கள் அழுவதை அவன் காதால் கேட்கவும் இல்லை. ஆகவே, தாமதியாது குழந்தையைப் போட்டுவிட்டு, வீடு திரும்புங்கள்'' என்று சொல்லிற்று.

உடனே, மனிதர்கள் சிறுவன் சடலத்தைவிட்டுத் திரும்பினார்கள். நரி வந்து பார்த்தபோது கழுகு உறங்கிக்கொண்டிருந்தது. ஆகவே, அது மானிடர்களை நோக்கி, "கழுகின் சொல்லைக் கேட்டு, சிறுவனை மயானத்தில் விட்டுச் செல்ல உங்களுக்கு எப்படி மனம் வந்தது? தெய்வ சகாயம் இருந்தால் இறந்தவர் பிழைக்கக் கூடும் என நாம் கேள்விப்படுகிறோம். ஆகவே, இங்கே தங்கி நீங்கள் அழுதால், அதன் பயனாய்த் தேவர்களோ சித்தர்களோ யாராவது ஒருவர் தோன்றி, சிறுவனைப் பிழைப்பிக்கலாம்'' என்று சொல்லிற்று.

உடனே, சிறுவனின் உற்றார் உறவினர்கள் திரும்பிச் சிறுவனின் தலையைத் தூக்கி மடியில் வைத்துக்கொண்டு, அழத் தொடங்கினார்கள்.

அழுகையைச் செவிமடுத்த கழுகு விழித்தெழுந்து வந்து, "காலன் வசப்பட்டு, சிறுவன் இறந்துவிட்டான். ஆழ்ந்த நித்திரை வசப்பட்டு இருக்கும் அவனை யாவரும் எழுப்ப முடியாது. தவசி, தனவான், அறிஞர் என்று வேறுபடுத்திப் பாராமல் அனைவரையுமே காலன் கவர்ந்து செல்கிறான். பிணங்களுக்கு உரிய இடம் இது. பல்லாயிரக் கணக்கான ஆடவர்களுக்கும் பெண்களுக்கும் பாலர்களுக்கும், மரணத்தின் பின், கிட்டும் புகலிடம் ஆகும் இது. மாண்டுபோன அவர்களின் சடலங்களை இங்கேயே போட்டுவிட்டு, அல்லும் பகலும் அவர்கள் அழுது புலம்புகிறார்கள். நரியின் சொல்லை நம்பி, நீங்கள் ஏன் இன்னும் இங்கே தாமதிக்கிறீர்கள்?

இறந்த உயிர் மீண்டு வந்து இந்த உடலில் தங்காது. பல நூறு நரிகள் கூடினாலும், பல நூறு நரிகள் முயன்றாலும் இறந்த இந்தச் சிறுவன் பிழைக்கப் போவது இல்லை; தெய்வங்களின் அருள் இருந்தால் ஒருவேளை இந்தக் குழந்தை பிழைக்கலாம்; வீணே அழுவதால் பயன் இல்லை'' என்று சொல்லிற்று.

அதற்கு அந்த நரி, "யாவரும் முடிவில் இறக்க நேருவதால் இந்த மானிட லோகத்தின் போக்கு கொடிது. உற்றார் உறவினர்களையும் நண்பர்களையும் விட்டுப் பிரிய நேரும் கொடிய நிலை இங்கு ஏற்படுகிறது. உயிர்வாழும் காலமும் சொற்பம். சூதும் வாதும் பொய்யும் களவும்தான் இங்கே மிகுதி. இவற்றை எல்லாம் சிந்திக்கத் தொடங்கினால் இந்த மானிட உலகமே எனக்குப் பிடிக்கவில்லை. அந்தோ! என்ன கொடுமை. கழுகின் பேச்சை நம்பிச் சிறுவன்மீதுள்ள பாசத்தை நீங்கள் இப்படி உதறித் தள்ளுவது முறையா? இன்பத்துக்குப் பின் துன்பமும், துன்பத்துக்குப் பின் இன்பமும் மாறி மாறி வருதல் இயற்கை. ஆகவே, இந்தச் சிறுவனை இங்கே விட்டுப் போகாதீர்கள்'' என்று கூறிற்று.

பொய்யான வார்த்தைகளால் இனிக்க இனிக்க நரி இப்படிப் பேசிற்று; இரவு வந்தால் தன் பசி தீரும் என்ற கருத்துடன், சிறுவனின் உற்றார் உறவினர்களை அது வஞ்சிக்கும் முறையில் இனிக்கப் பேசிற்று.

கழுகு விடவில்லை. "மயானத்தில் அரக்கர்களும் இயக்கர்களும் இரவில் சஞ்சரிப்பார்கள்; கொடிய கோட்டான்களும் கூவுவதைப் பாருங்கள். இருள் சூழப் போகிறது. பிணத்தை இங்கே போட்டுவிட்டு, செய்ய வேண்டிய காரியங்களைச் செய்யுங்கள். பருந்துகள் கத்துகின்றன. நரிகள் கொடுமையாக ஊளையிடுகின்றன. சூரியன் அஸ்தமிக்கப் போகிறான். சிதையின் புகை எங்கும் சூழ்ந்து இருள் பரவுகிறது இரவில் பிணம் தின்பவர்கள் உங்களை மிரட்டுவார்கள். நரியின் பொய் வார்த்தைக்கு நீங்கள் செவிமடுத்து நடந்தால், அழிந்து போவீர்கள்'' என்று சொல்லிற்று கழுகு.

உடனே, "மாமிசம் தின்னும் கழுகு கூறும் வார்த்தையைக் கேட்டால் சிறுவன் பிழைக்க மாட்டான். நன்ருக இருட்டும் வரை இங்கே இருங்கள்" என்று கூறிற்று நரி.

இரவு நேரத்தில் கழுகு சஞ்சரிக்காது; நரி சஞ்சரிக்கும். இதனுல்தான் ஒன்றுடன் ஒன்று போட்டிபோட்டுக் கொண்டு தத்துவங்கள் பேசின. உண்மையில் இரண்டும் பசியால் வருந்தியதால் தத்தம் பசியைப் போக்கிக்கொள்ள இவ்வாறு பேசின; இவற்றின் இனிய பேச்சுக்கு இணங்கி, ஒன்றும் செய்ய வகையறியாது ஜனங்கள் தவித்தார்கள்; செல்வதும் திரும்புவதுமாய் இருந்தார்கள். தத்தம் சாமர்த்திய வார்த்தைகளினுல் கழுகும் நரியும் அவர்களைப் பிரமிக்கச் செய்துவிட்டன.

இது சமயம், பகவான் அங்கே காட்சி கொடுத்தார். அருள் ஒழுகும் கண்களுடன் காட்சி தந்த அவர், மயானத்தில் நின்ற மானிடர்களை நோக்கி, "உங்களுக்கு வரம் தர வந்திருக்கிறேன்" என்று சொன்னுர்.

துக்கத்துடன் நின்ற மானிடர்கள் பகவான் சங்கரரை வணங்கினுர்கள். "பகவானே! இந்த ஒரே பிள்ளை இறந்துவிட்டான். இவனுக்கும் எங்களுக்கும் வாழ்வளித்து எங்களை உய்விக்க வேண்டும்" என்று அவர்கள் வேண்டினுர்கள்.

அதன்படி நீரை அள்ளித் தெளித்து, மாண்ட சிறுவனுக்கு, பகவான் சங்கரர் உயிர் அளித்தார். "நூறு ஆண்டுகள் வாழ்வாய்!" என்று சிறுவனை வாழ்த்தினுர்.

பசி அடங்கும்படியான வரத்தை நரிக்கும் கழுகுக்கும் நல்கினுர்.

இந்தக் கதையைச் சொல்லிவிட்டு, யுதிட்டிரரை நோக்கி "வேந்தே! நலம் அடையவோம் என்ற நம்பிக்கையும் உறுதிப்பாடும் இருந்தால், ஆண்டவனுடைய உதவி கிட்டி, அவன் அவசியம் மேன்மை அடைவான் என்பதை இந்தக் கதை மூலம் தெரிந்துகொள். நான்கு வருணத்தாரும் தெரிந்துகொள்ள வேண்டிய பொது நியதி இது" என்று கூறி முடித்தார் பீஷ்மர்.

## வலியவனைப் பகைக்காதே

"பிதாமகரே! வலிந்து தானே பகையைத் தேடிக்கொண்ட ஒருவன், தற்புகழ்ச்சியிலே பெருமிதம் கொண்டு திரியும் ஒருவன், வலியவன் தாக்க வந்தால், தன்னை எப்படிப் பாதுகாத்துக்கொள்ள வேண்டும்?" என்று கேட்டார் யுதிட்டிரர்.

அதற்கு அடியில் வரும் கதையைப் பீஷ்மர் சொன்னார்:

இமயமலையை அடுத்து, பல ஆண்டுகளாக ஓங்கி வளர்ந்த பெரிய இலவ மரம் ஒன்று இருந்தது. அதன் சுற்றளவு நானூறு முழம். எனவே, அதன் அடர்ந்த நிழல் வெகு தூரம் வியாபித்துப் பரவி இருந்தது. அதனால் யானைகளும் மற்ற விலங்குகளும் அதன் நிழலில் தங்கி, இளைப்பாறுவது வழக்கம் அந்த மரத்தில் கிளிகளும் நாகணவாய்ப் புட்களும் நிறையத் தஞ்சம் புகுந்து இருந்தன; கனிகளும் மலர்களும் நிறைந்திருந்த அந்த மரத்தின் அடியில் வியாபாரிகளும் வழிப்போக்கர்களும் தவசிகளும் தங்குவார்கள்.

ஒரு முறை நாரதர் அந்த மரத்து அருகே வந்தார். கிளைகளும் காய்களும் அதிகமுள்ள அந்த மரத்தை நோக்கி, "மரங்களில் சிறந்த இலவ மரமே! உன் அழகு, பார்க்கப் பார்க்க அதிசயத்தைப் பெருக்குகிறது. உன்னை அடைந்து நாங்கள் மகிழ்ச்சியுடன் இருக்கிறோம். எங்களைப் போலவே பறவைகளும் விலங்குகளும் பெரிய பெரிய யானைகளும் உன்னை அண்டி மகிழ்ச்சியுடன் வாழ்கின்றன. உனது கிளைகளும் கப்புகளும் கவைகளும் காற்றால் ஊனப்படுத்தப்படாமல் இருப்பதைக் காண்கிறேன். அன்புடன் வாயு உன்பால் இருக்கிறானோ? அவன் உன் நண்பனோ? வாயு உன்னைக் காப்பதற்குக் காரணம் என்ன? வாயு மிகுந்த ஆற்றல் உள்ளவன். பெரிய பெரிய மரங்களையும் மலைகளின் சிகரங்களையும் இருந்த இடத்திலிருந்தே ஆட்டிவைக்கும் ஆற்றல் அவனுக்கு உண்டு. நண்பனாய் இருப்பதால் உன்னை அவன் ஒன்றும் செய்யவில்லை போலும். அதனால்தான் இலைகளுடனும் மலர்களுடனும் கிளை

களுடனும் நீ காணப்படுகிறாய். பறவைகளின் இனிய நாதங்களும் இங்கே செவியில் விழுகின்றன. உனது நிழலில் ஒதுங்கி, யானை முதலிய விலங்குகள் இளைப்பாறுகின்றன. பலவித உயிர்களுக்கு நீ ஆதரவாய் இருப்பதால், நீ மேரு மலை போல் விளங்குகிறாய். துறவிகளும் முனிவர்களும் சித்தர்களும் உன்னை அண்டி வசிக்கிறார்கள். இந்த இடம் தேவலோகம்போல விளங்குகிறது. வாயு உன்னை இப்படி அன்புடன் பேணிப் போற்றுவதற்குக் காரணம் என்ன?'' என்று கேட்டார்.

நாரதர் இப்படிச் சொன்னதும் இலவ மரம் அவரை நோக்கி, "நாரத முனிவரே! வாயு எனக்கு நண்பனும் அல்லன்; உறவினனும் அல்லன். என்னிடம் பிரியம் காட்டுபவனும் அல்லன். இக்காரணங்களுக்காக அவன் என்னைப் பாதுகாக்கவில்லை. எனது ஆற்றலையும் பலத்தையும் கண்டு பயந்தே என்னை அவன் ஒன்றும் செய்யாமல் இருக்கிறான். எனது பலத்தில் பதினெட்டில் ஒரு பங்குகூட வாயுவுக்குக் கிடையாது. மரங்களையும் மலைகளையும் பயமுறுத்திச் சஞ்சரிக்கின்ற கொடிய வாயுவை, எனது பலத்தால் நான் அடக்கி இருக்கிறேன்; பல முறை வாயு என்னால் பங்கம் அடைந்திருக்கிறான். வாயு கோபங்கொண்டபோதிலும்கூட, அதற்காக நான் பயப்பட மாட்டேன்; அவனால் என்னை ஒன்றும் செய்ய முடியாது'' என்று பதில் சொல்லிற்று.

இலவ மரம் சொன்ன இந்த பதிலைக் கேட்ட நாரதர், "இலவ மரமே! இப்படி விபரீதமாகப் பேசாதே. வாயுவை நிகர்த்த பலசாலி உலகில் யாரும் இல்லை. இந்திரன், குபேரன், யமன், வருணன் ஆகிய அனைவருமே பலத்தில் வாயுவுக்கு ஈடாக மாட்டார்கள். அப்படி இருக்கும்போது, நீ எம்மாத்திரம்? உலகிலுள்ள உயிர்கள் அனைத்தும் வாயுவின் கருணையால்தான் நடமாடுகின்றன. வாயு நன்மையாக நடந்தால் யாவும் நன்மையாக நடைபெறும்; அப்படியின்றி, தன் கொடிய பலத்தை அவன் காட்ட முயன்றால், அனைத்தும் அழிந்து போகும். யாவரும் போற்றத் தகுந்த வாயுவை நீ போற்றாமல் இருக்கிறாய். இது புத்திக் குறைவான செயல்

வாயு சொன்ன வார்த்தைகளைக் கேட்ட இலவ மரம் நாணத்தால் குன்றிப்போய்விட்டது. நாரதர் சொன்ன வார்த்தைகளை நினைத்து வருத்தம் அடைந்தது.

* * *

இந்தக் கதையைக் கூறிவிட்டு, பீஷ்மர் யுதிட்டிரரிடம் "அரசே! அறிஞனாய் இருப்பினும், பலவீனமாய் இருப்பவன், பலசாலியைப் பகைத்துக்கொள்ளக் கூடாது. மீறிப் பகைத்துக்கொண்டால் இலவ மரத்துக்கு நேர்ந்த கதிதான் அவனுக்கும் நேரும்" என்று கூறினார்.

## குந்தியின் வரலாறு

ஆபத்துக் கால தருமங்களைப் பீஷ்மர் சொல்லி முடித்தார். அதன் பின்னர் நகுலன் அவரிடம், "பிதாமகரே! எனக்கு ஒரு சந்தேகம். வில் சிறந்த ஆயுதமா? அல்லது கத்தி சிறந்த ஆயுதமா? வில்லிலுள்ள நாண் அறுபட்டுப் போயினும், அல்லது அம்புகள் இல்லாது போயினும், கத்தி இருந்தால் ஒருவன் தன்னைப் பாதுகாத்துக்கொள்ள முடியும்? கத்தியின் பயன் என்ன? அதை உண்டுபண்ணியவர் யார்?" என்று கேட்டான்.

கத்திகொண்டு போர் செய்வதில் நகுலன் மகா சாமர்த்தன்.

நகுலன் வினவிய இந்தக் கேள்விக்குப் பீஷ்மர் பதில் சொன்னார் : "மாத்திரி மைந்தனே ! முன்பு ஒரு காலத்தில் இந்த உலகம் இருள் சூழ்ந்து, ஒரே நீர்மயமாய் இருந்தது. அப்பொழுது பிரம்மா உண்டானார். அவர் காற்று, நெருப்பு, சூரியன் மூன்றையும் படைத்தார். மேலே வானவெளியையும் கீழே பாதாளத்தையும் இடையே பூமியையும் உண்டு பண்ணினார். அதன் பின்னர், சந்திரனையும் விண்மீன்களையும் கோள்களையும் இரவு, பகல், மாதம், வருடம், ருதுக்கள், ஆகியவற்றையும் படைத்தார்.

அதன் பின்னர் பிரம்ம தேவர், ஒரு சரீரத்தை எடுத்துக் கொண்டு, மரீசி, அத்ரி, புலஸ்தியர், புலகர், கிருது, வசிஷ்டர் ஆகியவர்களை உண்டுபண்ணினார்; அங்கீரஸையும் ருத்திரரையும் பிரசேதஸ்ஸையும் தோற்றுவித்தார்.

"பிரசேதஸுக்கு தக்ஷன் என்பார் உண்டானார். அந்தத் தக்ஷர் அறுபது கன்னியர்களை உண்டாக்கினார். இந்தக் கன்னியர்களுடன் கூடிக் கலந்து, பிரம்ம ரிஷிகள், சந்ததிகளை உண்டுபண்ணினார்கள்.

"தேவதைகள், கந்தவர்கள், பித்ருக்கள், அப்ஸரசுகள், அரக்கர்கள், பறவைகள், மீன்கள், விலங்குகள், பாம்புகள் அனைத்தையும் அவர்கள் உண்டாக்கினார்கள். அசையும் பொருள்களும் அசையாப் பொருள்களும் உலகில் உற்பத்தியாயின.

இதன் பின்னர், பிரம்ம தேவர், வேதங்களில் கூறப்பட்டுள்ள அறங்களை அவர்களுக்கு எடுத்து உரைத்தார்.

ஆசாரியார்கள், ஆதித்தியர்கள், வசுக்கள், ருத்திரர்கள், மருத்துக்கள், சாத்தியர்கள் ஆகியோர் பிரம்ம தேவர் உபதேசப்படி நடந்தனர். ஆனால் கோபமும் பேராசையும் கொண்ட அசுரர்கள், பிரம்ம தேவரின் உபதேசங்களை மதிக்காது அவற்றை மீறி நடக்கத் தொடங்கினர். இரண்யகசிபு, இரண்யாட்சன், விரோசனன், சம்பரன், விப்ரசித்தி, நமுசி, பலி முதலிய அசுரர்கள் தருமத்தின் வரம்பை மீறி வாழ்க்கை நடத்தத் தொடங்கினர். தேவர்களுடன் இணங்கிப் போகாமல், அவர்களுக்கு விரோதமாக நடந்து வந்தார்கள்.

அப்போது பிரம்ம தேவர் உலக நலத்தின் பொருட்டு, இமய மலைச்சாரலில் அழகிய இடத்தில் இருந்தார். ஆயிரம் ஆண்டுகள் கழிந்த பின், விதிப்படி ஒரு வேள்வியை இயற்ற முடிவு செய்தார். யாகசாலை வெகு ரம்மியமாக இருந்தது. அதற்குத் தேவையான பாத்திரங்கள் தங்கத்தால் விளங்கின. அப்பொழுது மிகக் கோரமான பூதம் ஒன்று, அக்கினியைப் பிளந்துகொண்டு தோன்றிற்று.

பூதம் தோன்றியதும், பூமி நடுங்கிற்று; பெரிய பெரிய அலைகள் கிளம்பிக் கடல்கள் கலக்கமடைந்தன. தீமையை அறிவிக்கும் எரிகொள்ளிகள் விழுந்தன; மரங்களும் கிளை

களும் கீழே விழுந்தன. பெரும் புயல் கோரமாக வீசிற்று; பிராணிகள் பயத்தால் கதிகலங்கி நடுங்கின; நெருப்பின் நடுவே பூதம் கிளம்பியதைக் கவனித்த பிரம்ம தேவர், தேவர்களையும் மகரிஷிகளையும் நோக்கி, "உலகத்தைக் காக்கும் பொருட்டும், அசுரர்களை அழிக்கும் பொருட்டும் இந்தப் பூதத்தை நான் உண்டுபண்ணி இருக்கிறேன். வீரியமுள்ள இந்தப் பூதம் கத்தி என்னும் பெயரைத் தாங்கி, உலகில் பிரசித்தமாக விளங்கும்" என்று சொன்னார்.

உடனே அந்தப் பூதம், தனது பூதாகார உடலைவிட்டு மாசுமருவற்ற கத்தியாக மாறிற்று.

கூர்மையுள்ள அந்தக் கத்தியை எடுத்து, பிரம்ம தேவர் அதை நீலகண்டரிடம் கொடுத்தார். முனிவர்கள் போற்றும் அந்த நீலகண்டர் அந்தக் கத்தியை வாங்கித் தமது வடிவத்தையும் மாற்றிக்கொண்டார்.

அவர் எடுத்துக்கொண்ட உருவத்துக்கு நான்கு கைகள் இருந்தன; வானளாவ உயர்ந்து, பத்துத் திக்குகளையும் பார்க்கும் ஆற்றல் பெற்றிருந்தது அது; வாயிலிருந்து ஜ்வாலைகள் வெளிப்பட்டன; பொன்னிறமான புள்ளிமான் தோலை அது உடுத்தி இருந்தது; நெற்றியில் சூரியனுக்கு ஒப்பான கண் இருந்தது; அதைத் தவிர்த்து வேறு இரு கண்களும் இருந்தன. சூலத்தைக் கையில் ஏந்தியுள்ள அந்த முக்கண்ணர், மூன்று பக்கங்களும் கூர்மைவாய்ந்த, பிரம்ம தேவர் கொடுத்த கத்தியை எடுத்துக்கொண்டு, அசுரர்களை அழிப்பதற்காகப் புறப்பட்டார். அவருடைய தோற்றமும் நடையுடை பாவனைகளும் வெகு பயங்கரமாய் இருந்தன.

ருத்ரமூர்த்தி தங்களுடன் போர் செய்ய வந்திருப்பதை அறிந்த அசுரர்கள் ஆனந்தம் அடைந்தனர். கற்களையும் எரிகொள்ளிகளையும் இரும்பால் செய்த பொருள்களை எடுத்து எறிந்து, சிவபெருமானை அவர்கள் எதிர்த்தனர்.

"சிவபெருமான் அவர்களைக் கத்தியால் தாக்கினார். தலைவர்களுடன் கூடிய அசுர சேனை, தாக்குப்பிடிக்க] முடியாமல் தவித்தது; பல திக்குகளிலும் சிதறி ஓட்டம் பிடிக்கத் தலைப்

பட்டது. சிவபெருமான் அவர்களைத் துரத்தித் துரத்தி, கத்தியால் வெட்டிச் சாய்த்தார். கை, தொடை, கால், வயிறு, தோள் இவற்றை எல்லாம் சிவபெருமான் வெட்டிச் சாய்த்தார். அசுரர்கள் கத்தியின் வேகம் தாங்காது, கூச்சலிட்டுக் கதறிக்கொண்டு கீழே விழுந்தார்கள்; சிலர் பூமியில் ஒளிந்த இடம் பார்த்துப் பதுங்கினார்கள்; சிலர் மலை உச்சிக்கு ஓடினார்கள்; வேறு சிலர் ஆகாயத்துக்கு ஓடினார்கள்; மற்றும் சிலர் கடலுக்குள் ஓடி ஒளிந்தார்கள். வெட்டுண்ட அசுரர்களின் தசையாலும் நிணத்தாலும் குருதியாலும் நிறைந்து, பார்ப்பதற்கு வெகு பயங்கரமாய் இருந்தது. பூமி அசுரர்களைக் கொன்று உலகில் தருமத்தை நிலைநாட்டிய பின்னர், சிவபெருமான் பயங்கரமான தனது உருவத்தை மாற்றி, மங்களகரமான வடிவத்தை எடுத்துக்கொண்டார். தேவர்களும் ரிஷிகளும் சிவபெருமானைத் துதித்தார்கள்; அசுரர்களை அவர் வெற்றிகொண்டதை அவர்கள் கொண்டாடினார்கள்.

அசுரர்களின் இரத்தம் தோய்ந்திருந்த அந்தக் கத்தியை, மிகுந்த மரியாதையுடன், திருமாலிடம் சிவபெருமான் கொடுத்தார்; திருமால் மரீசியிடம் கொடுத்தார்; மரீசி மகரிஷிகளிடம் கொடுத்தார்; மகரிஷிகள் அதை இந்திரனிடம் கொடுத்தனர்; இந்திரனிடமிருந்த அந்தக் கத்தி, மாறி மாறி பல அரசர்கள் கைக்கு வந்தது. கடைசியாக, அந்தக் கத்தி கிருபரிடம் வந்து, கிருபர் அந்தக் கத்தியை உனக்குத் தந்திருக்கிறார்.

முதன் முதலில் உண்டான ஆயுதம் என்னும் சிறப்பு கத்திக்கு உண்டு.

"பகைவர்களை அடக்கும் பொருட்டு, பிருது சக்ரவர்த்தி வில்லை உண்டுபண்ணினார். போரில் விருப்பமுள்ளவர்கள், கத்தியை அவசியம் பூசைசெய்து போற்றவேண்டும்" என்று, கத்தியின் வரலாற்றையும் அதன் சிறப்பையும் பீஷ்மர் சொல்லி முடித்தார்.

# பிராயச்சித்தம் இல்லை

"பிதாமகரே! நன்றி கொன்றோன் எத்தகையவனாய் இருப்பான்? அவனைப்பற்றி விரிவாகத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்" என்று சொன்னார் யுதிட்டிரர்.

"யுதிட்டிரா! இதுபற்றி ஒரு பழைய கதை நிலவுகிறது. அதை உனக்குக் கூறுகிறேன் கேள். வடக்கே மத்திய நாட்டில் பிறந்த அந்தணன் ஒருவன், மிலேச்சர்கள் வாழும் நாட்டுக்குச் சென்றான். ஒரு கிராமத்தில் திருடர்கள் நிறைய இருந்தார்கள். அவர்களுக்கு மத்தியில் தானம் செய்வதில் பிரியமுள்ள திருடன் ஒருவன் இருந்தான்.

அந்தணன் அந்தத் திருடன் வீட்டுக்குச் சென்று தனக்கு உணவு வேண்டும் என்று கேட்டான்.

உடனே திருடன் அந்தணன் வசிக்க ஓர் இடத்தைக் கொடுத்தான்; வருடத்துக்குப் போதுமான அளவு உணவுப் பதார்த்தங்களைக் கொடுத்தான். தேவையான ஆடைகளைக் கொடுத்தான். யௌவன பருவமுள்ள ஒரு கன்னியையும் தானம் செய்தான்.

கௌதம கோத்திரத்தில் பிறந்த அந்தப் பிராமணன் இவற்றை எல்லாம் பெற்றுக்கொண்டு மகிழ்ச்சியுடன் அந்தக் கிராமத்தில் வசித்தான்; திருடனும், அந்தணன் குடும்பத்துக்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்து கொடுத்து வந்தான். வேடர்கள் வாழும் அந்தக் கிராமத்தில் ஓர் ஆண்டுக் காலம் மகிழ்ச்சியுடன் வசித்தான். பறவைகளை அம்பினால் அடித்துக் கொல்லும் முறையை அவன் கற்றுக்கொண்டான். நாள்தோறும் தவறாமல் அன்னப் பறவைகளை அந்த அந்தணன் அம்பால் கொன்றான். அந்தணனாய் இருந்தும், திருடர்கள் மத்தியில் வாழ்ந்த காரணத்தால், அவனும் திருடர்களைப் போலவே வாழத் தொடங்கினான். இப்படிப் பல மாதங்கள் கழிந்தன.

இதன்பின்னர், ஒரு நாள் மறைகள் ஓதுவதிலும் ஒழுக்கத்திலும் சிறந்த பிராமணன் ஒருவன் அந்தக் கிராமத்துக்கு வந்தான். உணவு அருந்த விரும்பிய அவன் அந்தக் கிராமத்தில்

அந்தணன் வீடு ஏதாவது இருக்கிறதா என்று விசாரித்தான் கௌதமன் வீடு இருப்பது தெரிந்து அவன் வீட்டுக்குப் போனான். அப்போது வேட்டைக்குச் சென்றிருந்த கௌதமனும் வீடு திரும்பினான்.

அவன் கையில் வில் இருந்தது; கொன்ற அன்னப் பறவைகள் அவன் தோளில் ஒரு சுமையாக இருந்தன. கௌதமனின் மேனி உதிரத்தால் நனைந்திருந்தது; அவனுடைய தோற்றமும் சாயலும் அரக்கனைப்போல் இருந்தன.

இந்த அலங்கோலங்களை எல்லாம் பார்த்ததும் விருந்துக்கு வந்திருந்த பிராமணர் வெட்கமடைந்தார். உடனே, கௌதமனை நோக்கி, "நற்குலத்தில் பிறந்த பிராமணனான நீ ஏன் ஆசாரக் குறைவான காரியங்களைச் செய்கிறாய்? திருடர்களின் வாழ்வை மேற்கொண்டிருப்பது உனக்கு நாணயமாகத் தோன்றவில்லையா? வேதத்தில் கரைகண்டு பெருமையுடன் வாழ்ந்த உன் முன்னோர்களை நினைத்துப் பார். பெரியோர் குலத்தில் உதித்த நீ அந்தக் குலத்துக்கு மாசு ஏற்படச் செய்யாதே! தயவோடு நடக்கவும் அடக்கத்துடன் வாழவும் பழகிக்கொள். இந்த இடத்தில் வசிப்பதை விட்டுவிடு" என்று சொன்னார்.

இப்படி அந்த அந்தணன் சொன்னதும் கௌதமன் பெருமூச்சுவிட்டான். "அந்தணரே! பொருள் இன்றி நான் வருந்துபவன்; வேதத்தை நான் கற்றவனும் அல்லன். பொருளை நாடி இந்த இடத்துக்கு வந்தேன். உம்மைக் காண நேர்ந்ததனால் நான் பாக்கியசாலிதான். இரவு என்னுடன் இங்கே தங்கி இரும். நாளை நாம் சேர்ந்து செல்லலாம்" என்று கூறினான்.

கௌதமன் இப்படிச் சொன்னதும், விருந்துக்கு வந்திருந்த அந்தணன் வெட்கமுற்றான். எதையும் தொடாமலும் சாப்பிடாமலும் இரவுப் பொழுதை அங்கே கழித்தான்.

பொழுது புலர்ந்ததும் விருந்துக்கு வந்திருந்த பிராமணர் வெளியே போய்விட்டார். கௌதமன் பொருள் தேடும் பொருட்டு வெளியே கிளம்பினான். வழியில் கடல் பிரயாணம் செய்யப்போகும் பிரயாணிகளைக் கண்டான். அவர்களுடன்

சேர்ந்து கௌதமனும் பிரயாணம் செய்ய விரும்பினான். ஆனால் வழியில் மதம் பிடித்த யானை ஒன்று அவர்களைத் தாக்கிக் கொன்றுவிட்டது. கௌதமன் மட்டும் தப்பித்தோம் பிழைத்தோம் என்று வடதிசையை நோக்கி ஓடினான். நாதியின்றியும் உதவியின்றியும் காட்டில் சுற்றித் திரிந்தான்.

அப்போது நந்தவனம் போன்ற சோலை ஒன்று தென்பட்டது. பனை, அரசு, ஆல், அகில் முதலிய மரங்கள் அங்கே இருந்தன. சந்தன மரங்களும் நிறைந்திருந்தன. மனத்தைக் கவரும் நறுமணம் காற்றில் தவழ்ந்து வந்தது. பறவைகள் அங்கும் இங்கும் சஞ்சரித்து, ஒலி செய்துகொண்டிருந்தன. அங்கே இருந்த மணல்கள் பொன்மயமாய் இருந்தன; சொர்க்க லோகத்துக்குச் சமதையாக இருக்கும் அந்த இடத்தில் பெரிய ஆல மரம் ஒன்று இருப்பதைக் கௌதமன் கண்டான்.

இலக்குமிகரமாக விளங்கிய அந்த ஆல மரத்தை அணுகி கௌதமன் அதன் அடியில் மகிழ்ச்சியுடன் உட்கார்ந்தான். சுகமான காற்று வீசவே, கௌதமன் தூங்கிவிட்டான். பொழுது சாய்ந்துவிட்டது.

அது சமயம் பிரம்ம லோகத்திலிருந்து நாடிசங்கன் என்னும் பிரசித்தி பெற்ற கொக்கு ஒன்று ஆல மரத்தை நாடி வந்தது; அதற்கு ராஜதர்மர் என்று மற்றும் ஒரு பெயரும் உண்டு. இந்தக் கொக்கு, ஆரணியத்தில் இருக்கும் ஆல மரத்தைத்தான் தனது வாச ஸ்தலமாகக் கொண்டிருந்தது.

கொக்கு ஒன்று வருவதைக் கண்டதும் கௌதமன் விழித்துப் பார்த்து ஆச்சரிய முற்றான். பசியாலும் தாகத்தாலும் வருந்திய அவன் அந்தக் கொக்கைக் கொல்லத் தீர்மானித்தான்.

அந்தணன் ஒருவன் தன் வீட்டுக்கு வந்திருப்பதை அறிந்த கொக்கு, "அந்தணரே! உமக்கு நல்வரவு. நீர் எனது இல்லத்திற்கு வந்திருப்பது நான் செய்த பாக்கியம். சூரியன் அஸ்தமித்துவிட்டான். இரவு தங்கி உணவு அருந்திவிட்டு, நாளைக் காலை நீர் செல்லலாம்" என்று கூறிற்று.

கொக்கு தன்னை அன்போடு உபசரிப்பதைக் கண்டு கௌதமன் ஆச்சரியமடைந்தான். அதையே அவன் கூர்ந்து நோக்கினன்.

கொக்கு அவனுக்குச் சிறந்த மீனைத் தயார் செய்து உணவாகக் கொடுத்தது; அவன் சாப்பிடும்போது, தன் சிறகுகளால் வீசி அவனை உபசரித்தது. களைப்பு நீங்கி, களிப்போடு இருக்கும் அந்த அந்தணனை நோக்கி, "ஐயா! தங்கள் கோத்திரம் என்ன? தங்கள் தொழில் என்ன?" என்று வினவிற்று.

"நான் கௌதம கோத்திரத்தில் பிறந்தவன்" என்று பதில் சொன்னன் அந்தணன்.

பிறகு கொக்கு அவனுக்கு மலர்களாலும் இலைகளாலும் தயார் செய்யப்பட்ட படுக்கையை அளித்தது. கௌதமன் அதில் படுப்பதற்காக உட்கார்ந்தான். அப்போது கொக்கு அவனை நோக்கி, "ஐயா! தாங்கள் இங்கு வரக் காரணம் என்ன?" என்று வினவிற்று.

"கொக்கே! நான் ஒரு ஏழை. பொருள் சம்பாதிக்கும் பொருட்டுக் கடலில் பிரயாணம் செய்யப் போகிறேன்" என்று கௌதமன் பதில் சொன்னன்.

"அந்தணரே! நீர் கவலைப்பட வேண்டாம். செல்வத்தோடும் செழிப்போடும் நீர் வீடு திரும்புவீர். 'நண்பன், அறிவு, கல்வி, பொருள் இந்த நான்கின் மூலம் மட்டும்தான் ஒருவன் பொருளை அடைய முடியும்' என்று பிருகஸ்பதி சொல்லி இருக்கிறர். நான் உம் நண்பன். உமக்குப் பொருள் கிடைக்குமாறு நான் செய்கிறேன்" என்று பதில் சொல்லிற்று கொக்கு.

இரவு கௌதமன் தூங்கினன். பொழுது புலர்ந்ததும் கொக்கு, "அந்தணரே! இரவு நன்றாகத் துயின்றீரா? நான் சொல்லும் வழியே செல்லும் உமக்குப் பொருள் கிடைக்கும். இங்கிருந்து மூன்று யோசனை தூரத்தில் அரக்கர்களின் அதிபன் விருபாக்ஷன் என்பவன் இருக்கிறன். அவன் என் நண்பன்; நீர் அவனிடம் நான் அனுப்பியதாகத் தெரிவித்தால் உமக்கு நிறையப் பொருள் தருவான்" என்று கூறிற்று.

அதன் சொற்படி கௌதமன் மகிழ்ச்சியுடன் புறப்பட்டான். அமுதத்துக்கு ஒப்பான கனிகளை அருந்திக்கொண்டே மனுவிரஜ நகரத்தை அடைந்தான்.

அந்த நகரத்தை ஆளும் விருபாக்கன் என்னும் அரக்கன் தன் நண்பன் அனுப்பி இருக்கும் அதிதி என்பதை அறிந்து கொண்டான்.

கௌதமனை எதிர்கொண்டு வரவேற்க ஏற்பாடு செய்தான். "வாருங்கள்! வாருங்கள்! எங்கள் அரசர் விருப்பாக்கர் உம்மை ஆவலுடன் எதிர்பார்க்கிறார்" என்று சொல்லி, விருப்பாக்கனுடைய பரிவாரத்தினர் கௌதமனை அழைத்துப் போனார்கள்.

ஆச்சரியப்பட்டவனாகி, கௌதமன் அவர்களைப் பின் தொடர்ந்து சென்றான். விருபாக்கன் கௌதமனை வரவேற்று உபசரித்தான். ஆசனத்தில் அமரச் சொல்லி, நலம் விசாரித்தான். "அந்தணரே! நீர் எந்த நாட்டைச் சேர்ந்தவர்? உம் மனைவி எந்தக் கோத்திரத்தில் பிறந்தவள்?" என்று வினவினான்.

"நான் மத்திய நாட்டில் பிறந்தவன்: வேடச் சேரியில் வசிக்கிறேன். ஒரு சூத்திரப் பெண்ணை இரண்டாம் தாரமாக மணந்துகொண் டிருக்கிறேன்" என்று பதில் சொன்னான் கௌதமன்.

'என் நண்பன் கொக்கு இந்த அந்தணனை என்பால் அனுப்பி இருக்கிறது. அவனுக்குத் தகுந்த அளவு செல்வம் கொடுத்துக் கண்ணியப்படுத்தி அனுப்புவதுதான் முறை' என்று விருபாக்கன் முடிவு செய்தான்.

பிறகு, கௌதமனுக்குத் தேவையான செல்வத்தைக் கொடுத்தான். கௌதமன் பெற்றுக்கொண்டு கொக்கு வசிக்கும் ஆலமரத்திற்குத் திரும்பினான்; செல்வச் சுமையைத் தூக்கி வந்ததனால் களைப்புற்றும் சோர்ந்தும் போனான்.

கௌதமனைக் கொக்கு வரவேற்று உபசரித்தது. கௌதமன் அதன் அருகே அமர்ந்திருந்தான். அப்போது அவனுடைய உள்ளத்தில் ஒரு தீய எண்ணம் தலைகாட்டத் தொடங்

கிற்று. 'நான் நிறையச் செல்வத்தை எடுத்து வந்து இருக்கிறேன். இந்தச் செல்வத்தைத் தூக்கிச் செல்ல வேண்டிய தூரம் இன்னும் இருக்கிறது. வழியில் உணவு தேவைப்படும். இந்தக் கொக்கைக் கொன்று அதன் மாமிசத்தை எடுத்துச் சென்றால் வழியில் எனக்கு அது உணவாக அமையும்' என்று கருதினான்.

சிறிது நேரம் சென்ற பின், கொக்கு உறங்கிவிட்டது. கொல்ல வேண்டும் என்ற எண்ணத்துடன் இருந்தபடியால் கௌதமன் தூங்கவில்லை.

பிறகு எரிகொள்ளியை எடுத்து, அந்தக் கொக்கை நன்றிகெட்ட கௌதமன் சுட்டுக் கொன்றுவிட்டான்; தான் செய்த காரியம் பாபகரமானது என்ற எண்ணமின்றி, மகிழ்ச்சியுடன் அவன் இருந்தான். கொக்கின் சிறகுகளை அகற்றிவிட்டு, அதன் மாமிசத்தை நெருப்பில் வாட்டினான். அதைப் பக்குவமாக வாட்டிக்கொண்டு, பின்னர் சுமையையும் தூக்கிக்கொண்டு, அங்கிருந்து புறப்பட்டான்.

தனக்கு நண்பனான கொக்கு, திரும்பாமல் இருப்பதை அறிந்த விருபாக்கன் சஞ்சலமுற்றான். அவன் தன் புதல்வனை நோக்கி, "மகனே! உத்தமமான கொக்கு இன்று திரும்பக் காணோம். பொழுது புலர்ந்ததும் நாள்தோறும் அது பிரம்ம தேவரைத் தரிசிக்கப் போவது வழக்கம். அப்போது என்னைப் பாராமல் அது வீடு திரும்பாது. இரண்டு தினங்களாக அது என்னிடம் வரவில்லை. அதற்குரிய காரணமும் தெரியவில்லை. எனது மனம் சஞ்சலப்பட்டுத் தவிக்கிறது. அந்தணர்களுக்கு உரிய ஒழுக்கங்களிலிருந்து விலகிய கௌதமன் அதனிடம் சென்றான். ஒரு வேளை அதை அவன் கொன்றாலும் கொன்றிருக்கக் கூடும். நீ சென்று, கொக்கு சௌகரியமாய் இருக்கிறதா என்பதை அறிந்து வா" என்று சொன்னான்.

உடனே, விருபாக்கன் புதல்வன் அரக்கர்கள் பலரை அழைத்துக்கொண்டு புறப்பட்டான்; ஆல மரத்தை அவன் அடைந்தபோது, கொக்கு கொல்லப்பட்டுக் கிடப்பதை அவன் கண்டான்; வருத்தமுற்று அவன் அழுது புலம்பினன்.

கௌதமனுடைய தீய செயலைநினைக்க நினைக்க, விருபாக்கன் மகனுக்குக் கோபம் அதிகமாக வந்தது. தேடிப் பிடித்துக் கௌதமனைக் கொல்ல வேண்டும் என்று ஆத்திரத்துடன் அரக்கர்கள் மனுவிரஜ நகருக்குள் சென்றனர்கள். அவனைக் கண்டுபிடித்து, கண்ட துண்டங்களாக வெட்டி, அவனுடைய இறைச்சியை விலங்குகளுக்குப் போட்டார்கள்.

நன்றிகெட்ட அதமன் கௌதமனுடைய இறைச்சியை விலங்குகள்கூட முகர்ந்து பார்க்கவில்லை.

அரசன் விருபாக்கன் தன் நண்பன் கொக்கைச் சிறந்த முறையில் அடக்கம் செய்தான். இந்திரனுடைய நண்பனுதலால், உடனே அந்தக் கொக்கு உயிர் பெற்று எழுந்தது.

அதமனை அந்தணன் நரகத்தை அடைந்தான்.

“யுதிட்டிரா! பிராமணனைக் கொன்றவன், கள் குடிப்பவன், திருடன் முதலியவர்களுக்குப் பிராயச்சித்தம் விதிக்கப்பட்டிருக்கிறது. ஆனல், நன்றி கொன்றவனுக்குப் பிராயச் சித்தம் கிடையாது” என்று சொல்லிக் கதையை முடித்தார் பீஷ்மர்.

# வியாசர்

அருளிய

# மகாபாரதம்

## அனுசாசன பருவம்

# வியாசர்

## அருளிய

# மகா பாரதம்

## வினைப்பயன்

ராஜ தருமம், ஆபத்துத் தருமம், மோட்ச தருமம் இம் மூன்றையும் பீஷ்மர் உபதேசித்த பின்னர், யுதிட்டிரர், "பிதா மகரே! தாங்கள் பல விதங்களில் எனக்கு ஆறுதல் உரைத்தும், என் மனத்தில் ஆறுதல் ஏற்படவில்லை. நேர்ந்திருக்கும் அழிவுக்கெல்லாம் காரணம் நானாய் இருக்கும்போது, என் மனத்தில் ஆறுதல் உண்டாகவில்லை. பல காயங்களுடன் அம்புப் படுக்கையில் தாங்கள் படுத்திருப்பதற்குக் காரணம் நானே என்பதை எண்ணும்பொழுது, மழைக் காலத்தில் தத் தளிக்கும் தாமரை மலர்போல் எனது நெஞ்சம் தத்தளிக் கிறது. உமது அங்கங்கள் குருதியால் நனைந்திருப்பதைக் கண்டு என் நெஞ்சம் பதறுகிறது. என் பொருட்டாக அர சர்களும் உற்றார் உறவினரும் உயிரை இழந்தனர். ஆசைக் கும் கோபத்துக்கும் வயப்பட்டு இகழத்தக்க காரியத்தைச் செய்த எங்களுக்கும் திருதராட்டிரன் புதல்வர்களுக்கும் என்ன கதி நேருமோ? உம்மை இந்த நிலையில் பாராமல் உயிர் நீத்த துரியோதனனே பாக்கியசாலி. துரியோதன னைப்போல நாங்களும் போரில் மடிந்திருந்தால், பா

ளால் அடிபட்டு நலிவுறும் உம்மை நாங்கள் பார்த்திருக்க நேராது. பாவ காரியங்களைச் செய்யும் பொருட்டே பிரம்ம தேவர் எங்களைப் படைத்தார் போலும்!" என்று சொல்லி வருந்தினார்.

"யுதிட்டிரா! இவற்றுக்கெல்லாம் காரணம் கர்ம பலனேயன்றி, நீ இல்லை. இதை அறிவது எளிதன்று. வீணே நீ ஏன் துயரப்படுகிறாய்? இதுபற்றி உனக்கு ஒரு கதை சொல்லப் போகிறேன் கேள்.

பொறுமையும் அடக்கமுள்ள கிழவி ஒருத்தி ஆதி காலத்தில் இருந்தாள். அவள் பெயர் கௌதமி. அவள் மகனைப் பாம்பு கடித்துக் கொன்றுவிட்டது. விவரம் தெரிய வந்ததும், ஒன்றும் செய்யாது கிழவி சும்மா இருந்தாள்.

அப்போது, ஒரு வேடன், கௌதமியின் மகனைக் கடித்துக் கொன்றை பாம்பைக் கயிற்றைக் கட்டி யிழுத்துக்கொண்டு, கிழவியிடம் வந்தான். "ஏ மூதாட்டி! உன் மகனைக் கொன்ற நீசப் பாம்பு இதுதான். இதை எப்படிக் கொல்ல வேண்டும் என்பதை நீ சொல். தீயில் போடலாமா? அல்லது துண்டம் துண்டமாக வெட்டி விடலாமா? இனியும் இந்தப் பாம்பை உயிருடன் விட்டுவைத்தல் கூடவே கூடாது" என்று சொல்லிக் கேட்டான்.

உடனே, அந்தக் கிழவி வேடனை நோக்கி, "அர்ச்சுனகா! நீ அறிவில்லாமல் பேசுகிறாய். பாம்பை ஒன்றும் செய்யாமல் விட்டுவிடு. என் மகன் இறந்ததற்குக் காரணம் விதியேயன்றி, இந்தப் பாம்பு அன்று. பாம்பைக் கொல்வதனால் பயன் ஒன்றும் இல்லை; என் புதல்வனும் உயிர் பெற்று எழமாட்டான். உனக்கு ஒரு தீங்கும் செய்யாத இந்தப் பாம்பை நீ ஏன் கொல்ல எண்ணுகிறாய்?" என்று கேட்டாள்.

"மூதாட்டியே! நன்மை தீமை அறிந்த பெரியவர்கள் பிற உயிர்கள் படும் துன்பங்களைக் கண்டு வருந்துவார்கள். நீ சொன்ன உபதேசம் சுய திருப்தியுள்ளவர்களுக்குத்தான் பொருந்தும். ஆகவே, இந்தப் பாம்பை நான் கொல்லத்தான் போகிறேன். இரக்க நெஞ்சுள்ள நீ இதற்காக வருந்தாதே" என்று சொன்னான் வேடன்.

அதற்கு அந்தக் கிழவி, "என்னைப் போன்றவர்கள் வருந்த மாட்டார்கள். நல்லோரின் நாட்டம் எப்பொழுதும் தரு மத்தைச் சார்ந்தே இருக்கும். விதியின் பயனாய் என் புதல்வன் இறந்துபோனான். அதன் பொருட்டாய், இந்தப் பாம்பைக் கொல்ல எனக்கு அதிகாரம் கிடையாது. ஆகவே, கோபத்தை விட்டுவிடு; இந்தப் பாம்பையும் கொல்லாதே'' என்று சொன்னாள் கிழவி.

"அயோக்கியனைக் கொல்வது பாவம் அன்று. அதனால் புண்ணியம்தான் உண்டாகும். ஆகவே, இந்தப் பாம்பைக் கொல்லப்போகிறேன்'' என்று மீண்டும் சொன்னான் வேடன்.

"பகைவனைக் கொல்வதனால் யாது பயன்? அதனால் மகிழ்ச்சியா ஏற்படும்? ஆகவே, ஒன்றும் செய்யாது பாம்பை விட்டுவிடு'' என்றாள் கிழவி.

"கௌதமியே! இந்த ஒரு பாம்பைக் கொல்வதனால் அநேக உயிர்களைக் காப்பாற்ற முடியும். அதனால் இதைக் கொல்வது பலருக்கு நன்மை பயக்கும். ஆகவே பாம்பைக் கொல்ல எனக்கு அனுமதி கொடு'' என்று சொன்னான் வேடன்.

"இந்தப் பாம்பைக் கொல்வதனால் என் புதல்வன் உயிர் மீளாது. ஆகவே, பாம்பைக் கொல்லாமல் விட்டுவிடு'' என்று மீண்டும் வேண்டினாள் கௌதமி.

வேடனோ பாம்பைக் கொல்வதற்கு முனைப்புடன் இருந் தான். இதைக் கவனித்த பாம்பு மெல்லிய குரலில் வேட னிடம், "அர்ச்சுனகா! இந்தக் குழந்தை விஷயத்தில் நான் தவறு செய்யவில்லை. யமனுடைய கட்டளையால் இந்தச் சிறு வனைத் தீண்டி, என்னை யறியாமல் நான் கொன்றேன். உண வின் பொருட்டாக நான் கொல்லவில்லை. குற்றம் இருப் பின், அது யமனைச் சார்ந்ததாகும்'' என்று சொல்லிற்று.

அதற்கு அந்த வேடன், "ஏ பாம்பே! பிறர் ஏவியபடி செய்த நீயும் குற்றவாளிதான். பாபியான உன்னைக் கொல் லத்தான் வேண்டும்'' என்று சொன்னான்.

"நீ சொல்வது தவறு. அது என் குற்றம் இல்லை. இந்தக் குற்றம் ஏவினவனைச் சாரும். இல்லையேல் எங்கள் இருவருக்

கும் பொதுவான குற்றம் ஆகும். குற்றத்துக்குக் காரணமாக இருக்கும் இருவரில் ஒருவரை மட்டும் தண்டிப்பது பிசகு'' என்று பதில் சொல்லிற்று பாம்பு.

"ஏவினவன் ஒருவன் இருப்பினும், கொன்றவன் நீதான். ஆகையால் உன்னைக் கொல்லத்தான் வேண்டும்'' என்று பதில் சொன்னான் வேடன்.

இது சமயம், யமன் அங்கே வந்து பாம்பை நோக்கி, "ஏ பாம்பே! காலத்துக்கு வசப்பட்டு உன்னை நான் ஏவினேன். குழந்தையின் மரணத்துக்கு காரணம் நீயும் அன்று; நானும் அன்று. காலத்துக்குக் கட்டுப்பட்டே யாவும் உலகில் நடக்கின்றன'' என்று சொன்னான்.

குழந்தை இறந்ததற்கு யார் பொறுப்பு என்ற சர்ச்சையில் பாம்பு, வேடன், யமன் மூவரும் உரையாடிக்கொண்டிருக்கும்போது, காலதேவன் அங்கே தோன்றினான். அவன் அர்ச்சுனகன் என்னும் அந்த வேடனை நோக்கி "வேடனே! குழந்தை இல்லை இறந்ததற்கு நானோ, யமனோ, பாம்போ காரணம். குழந்தையின் கர்ம வினையே இதற்கு மூல காரணம் ஆகும். அவனவன் செய்த கர்ம பலனை அவனவன் அனுபவியாமல் தீராது. நிழலும் வெயிலும் போல, கர்மாவும் கர்த்தாவும் ஒன்றை ஒன்று விடாது பற்றித் தொடர்கின்றன. ஆகவே குழந்தை இறந்ததற்கு அவன் காரணமே யன்றி, வேறு யாரும் அல்லர்'' என்று காலதேவன் சொன்னான்.

"யுதிட்டிரா! காலதேவன் சொன்னதால் ஆறுதல் அடைந்து, பாம்பை ஒன்றும் செய்யாது அந்த வேடன் விட்டு விட்டான். போரில் நேர்ந்த அழிவுக்கு நீயே காரணம் என்று கருதி வருந்தாமல் நீயும் ஆறுதல் அடை'' என்று சொன்னார் பீஷ்மர்.

இதன் பின்னர் யுதிட்டிரர் ஆறுதல் அடைந்தார்.

# இல்லற மேன்மை

“பிதாமகரே! தருமத்தைக் கடைப்பிடித்து ஒழுகிய இல்லறத்தான் எவனும் மரணத்தை வென்று இருக்கிருனு? இதைப்பற்றி உம்மிடம் தெரிந்துகொள்ள விரும்புகிறேன்” என்று யுதிட்டிரர் கேட்டார்.

“யுதிட்டிரா! இது சம்பந்தமான ஒரு பழம் கதையை உனக்குக் கூறுகிறேன்” என்று சொல்லி, அடியில் வரும் கதையைப் பீஷ்மர் யுதிட்டிரருக்குச் சொன்ஞர்.

பிரஜாபதி மனுவுக்கு இலட்சவாகு என்ற ஒரு மகன் பிறந்தான். அவனுக்குச் சூரியனைப்போல் பிரகாசமுள்ள நூறு புதல்வர்கள் பிறந்தார்கள். இலட்சவாகுவின் பத்தாவது மைந்தன் தசாஸ்வன். இவன் சத்தியசீலன். பராக்கிரமமுடையவன். மாகிஷ்மதி நகரிலிருந்து தசாஸ்வன் ஆட்சி செய்து வந்தான்.

இவனுக்கு மதிராஸ்வன் என்ற ஒரு மகன் இருந்தான். தன் தந்தை தசாஸ்வனைப்போலவே, தானம், தவம், கல்வி, சத்தியம், விற்பயிற்சி முதலியவற்றில் மதிராஸ்வன் சிறந்து விளங்கிஞன். இவன் மகன் தியூதிமான்; அவன் மகன் சுவீரன்; சுவீரனுக்குத் துர்ஜயன் என்று ஒரு மகன் இருந்தான். இவனுக்குக் கீர்த்திபெற்ற மகன் ஒருவன் இருந்தான். அவன் பெயர் துரியோதனன்.

இந்தத் துரியோதனன் இந்திரனைப்போல் ஆற்றலுள்ளவன்; போரில் பின்னடையாதவன். செல்வமும் செழிப்பும் மிகுந்த காரணத்தால், இவனுடைய நாட்டில் ஏழை, கருமி, நோயாளி, பலம் குன்றியவன் என யாரும் இல்லை.

இந்தத் துரியோதனன் மிக்க அன்புள்ளவனுய் இருந்தான்; யாரிடத்திலும் இன்சொல்லே பேசிஞன். பொருமையில்லாமலும் புலன் அடக்கத்தோடும் வாழ்ந்தான். இந்த அரசன், சொன்ன சொல் தவற மாட்டான்: தற்புகழ்ச்சி

செய்துகொள்ளான்; மதிநுட்பமுடைய இவன், மக்களிடம் தயைகாட்டி நடந்துகொண்டான். வேதங்களையும் அவற்றின் அங்கங்களையும் வழுவாது கற்றிருந்தான்.

சிறந்த சீலமுள்ள இந்த அரசனை நர்மதை நதி காதலித்தாள். இவர்கள் இருவருக்கும், காட்சிக்கினிய பெண் சுதர்சனை பிறந்தாள்.

இவளுக்கு நிகரான அழகியைப் பூமண்டலத்தில் இது வரை யாரும் பார்த்தது இல்லை. ஆகையால் மானுட தேகத்தைத் தாங்கி வந்து, அக்கினி பகவான் இவளை விரும்பினான். அவள் தந்தையிடம் சென்று சுதர்சனையைத் தனக்கு மணம் செய்து தருமாறு வேண்டினான்.

"இவன் ஏழைப் பிராமணன்; நமது சாதியானும் அல்லன்; ஆகவே அவனுக்குச் சுதர்சனையைக் கொடுக்கக் கூடாது" என்று கருதி, துரியோதனன் மறுத்துவிட்டான்.

இதன் பின்னர், துரியோதனன் ஒரு யாகம் செய்தபோது, ஓம வேதிகையில் இருந்த அக்னி மறைந்துவிட்டது.

இதைக் கண்ட துரியோதன மன்னன் துணுக்குற்றான். "வேதிகையில் இருந்த அக்னி பகவான் மறைந்ததற்குக் காரணம் யாதாய் இருக்கும்?" என்று தன் மந்திரிகளையும் அந்தணர்களையும் கேட்டான்.

மந்திரங்களைச் சொல்லி, அந்தணர்கள் அக்னி பகவானை அழைத்தனர். மிக்க சாந்தியுள்ள வடிவத்தைத் தாங்கிக் கொண்டு, அக்னி பகவான் அந்தணர்கள் முன்னர் தோன்றி, "துரியோதனன் புதல்வி சுதர்சனையை நான் விரும்புகிறேன்" என்று சொன்னார்.

பொழுது புலர்ந்ததும், இது விவரத்தை அரசனிடம் அந்தணர்கள் தெரிவித்தனர்.

அரசன் அந்தணர்கள் கருத்துக்கு இணங்கினான். மகிழ்ச்சியுற்று மணம் செய்து கொடுப்பதாக வாக்களித்தான்.

பிறகு அவன் அக்கினியை நோக்கி, "பகவானே! இவ்விடத்திலேயே தாங்கள் எக்காலும் இருக்க வேண்டும். இது தான் என் கன்யா சுல்கம்" என்று வேண்டினான்.

அக்னி பகவானும் அதற்குச் சம்மதித்தார். அதன்படி மாகிஷ்மதி நகரத்தில் தங்கி இருந்தார்.

துரியோதனன் சுதர்சனையை அலங்காரம் செய்து, அக்னி பகவானிடம் கொடுத்தான். அக்னி பகவானும் அவளை விருப்போடு ஏற்றுக்கொண்டார். சுதர்சனைக்கு அக்னி பகவானிடம் சுதர்சனன் என்னும் ஒரு மகன் பிறந்தான்.

கல்வி கற்கும் வயதை அடைந்த பின்னர், ஏகவான் என்னும் அரசனுடைய புதல்வி ஏகவதியை மணம் புரிந்துகொண்டான் அவன். அவளுடன் சுதகசன் இல்லற வாழ்க்கையை நடத்திக்கொண்டு, குருசேத்திரத்தில் வசித்தான். 'நான் இல்லறத்தானாக இருப்பதால் எமனையும் வெல்வேன்' என்று சொல்லிக்கொண்டிருந்தான்.

ஆகவே, மனைவி ஏகவதியை நோக்கி, "விருந்தினரிடம் எவ்வகையிலும் விரோதமாக நீ நடத்தல் கூடாது. விருந்தினன் மனம் கோணாதவாறு நீ நடந்துகொள்ள வேண்டும், உன்னையே கொடுக்க நேர்ந்தாலும் அதற்காக நீ தயங்கக் கூடாது. ஏனெனில் இல்லறத்தானுக்கு விருந்தினனை ஓம்புவதைக் காட்டிலும் மேலான அறம் வேறு இல்லை. நான் சொல்வதில் நம்பிக்கை இருக்குமானால் எனது சொல்லுக்கு மாறாது நீ நடக்கலாகாது. நான் வீட்டில் இருந்தாலும் சரி, வெளியே போயிருந்தாலும் சரி, விருந்தினனை நீ அவமதிக்கலாகாது" என்று சொன்னான் சுதர்சனன்.

சுதர்சனன் இப்படிச் சொன்னதும் ஏகவதி தன் கணவனைக் கைகூப்பி வணங்கினாள். "தங்கள் சித்தம்போல் நடக்க, நான் எப்பொழுதும் தயார்" என்று பதில் சொன்னாள்.

யமன் சுதர்சனத்தை வெல்லும் எண்ணத்துடன் இருந்து வந்தான். ஒரு சமயம் சுதர்சனன் சமித்துக் கொண்டுவர வெளியே சென்றிருந்தபோது, அந்தணன் ஒருவன் ஏகவதியிடம் வந்தான். "பெண்ணே! நான் விருந்தினனாக வந்திருக்கிறேன். இல்லற தருமத்தில் உனக்கு நம்பிக்கை இருக்குமானால் எனக்கு நீ விருந்து செய்யக் கடவாய்" என்று சொன்னான்.

ஏகவதி விருந்தினனை முறைப்படி உபசரித்தாள். ஆசனத்தை எடுத்துப் போட்டாள்; கால்களை அலம்பிக் கொள்ளத் தண்ணீர் கொண்டுவந்து கொடுத்தாள். "அந்தணச் சீலரே! உமக்கு என்ன வேண்டும்? நான் எதைச் செய்ய வேண்டும்? சொல்லும்" என்று கேட்டாள் ஏகவதி.

"பெண்ணே! உன்னையே நான் விரும்புகிறேன். நாணப்படாமல் என் விருப்பத்தை நிறைவேற்று" என்று சொன்னான் அந்தணன்.

வேறு எது வேண்டுமானாலும் தருவதாக ஏகவதி சொல்லியும் அந்தப் பிராமணன் விரும்பவில்லை. அவளையே விரும்பினான்.

தன் கணவன் சொல்லியதை நினைத்து ஏகவதி, "அப்படியே ஆகட்டும்" என்று நாணத்துடன் சொன்னாள்.

அந்தப் பிராமணன் சிரித்துக்கொண்டு உட்கார்ந்தான். ஏகவதியும் அவன் அருகே உட்கார்ந்தாள்.

இது சமயம் சமித்துகளை எடுத்துக்கொண்டு, சுதர்சனன் அங்கே வந்து சேர்ந்தான். வந்ததும் தன் மனைவியை ஆசிரமத்தில் காணவில்லை, ஆகவே, "நீ எங்கே போயிருக்கிறாய்?" என்று சொல்லி, தன் மனைவியைப் பல முறை அவன் கூவி அழைத்தான்.

தன் கணவனுக்கு ஏகவதி மறுமொழி ஒன்றும் சொல்லவில்லை. அந்தணன் கை தன்னைத் தொட்டுவிட்டதனால் தான் எச்சிலாகிவிட்டதாக நினைத்து. நாணமுற்றும் பயந்தும் அவனோடு அவள் பேசவில்லை.

"இது என்ன ஆச்சரியமாய் இருக்கிறதே? என்னை எப்பொழுதும் எதிர்கொண்டு வரவேற்கும் கற்பரசி ஏகவதி எங்கே போனாள்?" என்று சுதர்சனன் சொன்னான்.

உடனே ஆசிரமத்தி லிருந்த அந்தணன், "அக்னிப் புதல்வனே! நான் அந்தணன். விருந்தினனாக வந்திருக்கிறேன். பல விதங்களில் உபசரித்து என்னை உன் மனைவி திருப்தி செய்ய முயன்றாள். அவற்றை எல்லாம் அங்கீகரியாமல் அவளையே நான் விரும்பினேன். அதற்கு இணங்கி அவள் என்னிடம் இருக்கிறாள்" என்று சொன்னான்.

இதைக் கேட்டதும் சுதர்சனன் மயங்கிவிடுவான்; அவனைச் சபிக்கலாம் என்று யமன் தயாராக இருந்தான்.

சுதர்சனனோ அந்தணன் சொன்னதைக் கேட்டு மூர்ச்சை யடையவில்லை. "அந்தணரே! விருந்தினர் மனம் கோணுமல் உபசரிப்பது எனது விரதம். என் உயிரும் மனைவியும் மற்றப் பொருள்களும் உமக்கே அர்ப்பணம்" என்று மகிழ்ச்சியுடன் பதில் சொன்னான் சுதர்சனன்.

சுதர்சனன் இப்படிச் சொன்னதும், அந்தப் பிராமணன் ஆசிரமத்தைவிட்டு வெளியே வந்தான். அவன் தேகம் ஆகாயம் வரை அளாவி இருந்தது. மூன்று உலகங்களிலும் வியாபிக்கும்படியான இனிய குரலில் சுதர்சனனை நோக்கி, "குற்றமற்றவனே! உனக்கு நன்மை உண்டாகட்டும். உனது உறுதியினால் உன்னைத் தொடர்ந்துகொண் டிருக்கும் யமனையும் நீ வென்றுவிட்டாய். உன் மனைவி மாசு மறு அற்றவள். இவளை யாராலும் வெல்ல முடியாது. இவள் சொல் மாருது நடக்கும். உலகத்தில் பாவத்தைப் போக்கு வதற்காக இவள் பாதி உடம்பு ஓகவதி என்னும் பெயரைத் தாங்கி உலகில் நதியாகச் சஞ்சரிக்கும். பாதி உடம்பு உனக்கு வசப்பட்டு இருக்கும். இந்த உடலோடே நீ மேன்மையான உலகத்தை அடைவாய்" என்று சொன்னார்.

தரும தேவதைதான் சுதர்சனனைச் சோதிக்க அந்தண ஞக வந்தவர்.

சுதர்சனன் தனது நடத்தையால் யமனையும் விருப்பு வெறுப்புக்களையும் வென்று, புண்ணிய உலகத்தை அடைந் தான்.

"யுதிட்டிரா! இல்லற தருமத்தைச் சிறப்புற நடத்தி ஞல், யமனையும் வெல்லலாம் என்பதைத் தெரிந்துகொள்" என்று சொல்லிக் கதையை முடித்தார் பீஷ்மர்.

## ஊழ்வினை பெரிதா? முயற்சி பெரிதா?

"பரத குலத் தோன்றலே! ஊழ்வினை அதிக வலிமை யுடையதா? அல்லது முயற்சி அதிக வலிமையுடையதா?

இரண்டில் எதற்கு அதிக வலிமை யுண்டு ?'' என்று பீஷ்மரை யுதிட்டிரர் கேட்டார்.

''யுதிட்டிரா ! இது சம்பந்தமாக முன்பு வசிஷ்டரும் பிரம்மாவும் உரையாடி இருக்கிறார்கள். அதை உனக்குச் சொல்கிறேன் கேள்'' என்று சொல்லி, அடியில் வரும் கதையைப் பீஷ்மர் சொன்னார்.

தேவர்க்குத் தேவரான பிரம்ம தேவர் வசிஷ்ட மக ரிஷியை நோக்கிச் சொல்லுகிறார் :

''முனிவரே ! வித்திலிருந்து முளை உண்டாகிறது: முளையி லிருந்து இலை உண்டாகிறது; இலையிலிருந்து காம்பு உண்டா கிறது; காம்பிலிருந்து கிளை உண்டாகிறது; கிளையிலிருந்து மலர் உண்டாகிறது; மலரிலிருந்து கனி உண்டாகிறது. கனி யிலிருந்து வித்து உண்டாகிறது. வித்திலிருந்து திரும்பவும் உற்பத்தி உண்டாகிறது. வித்தில்லாமல் ஒன்றும் உண்டா வது இல்லை. வித்தின்றி பழமில்லை. முடிவில் பார்த்தால் வித்திலிருந்தே வித்து உண்டாகிறது. விதை நல்லதாய் இருந்தால் பலன் நல்லதாய் இருக்கிறது; விதை கெட்டதாய் இருந்தால் பலனும் கெட்டதாய் இருக்கிறது. அதைப் போலத்தான், நல்வினை நற்பலனையும், தீவினை தீய பலனையும் தருகின்றன. தகுந்த நிலத்தில் பயிரிட்டால்தான் விதை பலனைத் தருகிறது; அதேபோல, தகுந்த முயற்சி இருந்தால் தான், ஊழ்வினையும் பலனைத் தருகிறது. முயற்சியைப் பூமி என்றும், ஊழ்வினையை விதை என்றும் சொல்லுகிறார்கள். நிலமும் வித்தும் சேர்ந்தால் பயிர் உண்டாவதைப்போல, முயற்சியும் ஊழ்வினையும் சேர்ந்தால்தான் பலன் கிடைக் கிறது. முயற்சி செய்யாதவனுக்கு அதிர்ஷ்டத்தினால் எது வுமே கிட்டாது. செல்வம், இன்பம், சொர்க்கம் எல்லாமே முயற்சியினால்தான் கிட்டுகின்றன. இயக்கர்கள், நாகர்கள், தேவர்கள் இவர்கள் எல்லோருமே மனிதர்களாய் இருந்து, முயற்சியினால்தான் தேவத்தன்மையை அடைந்திருக்கிறார் கள். செல்வம், நண்பர்கள், புகழ், ராஜ்யம், பெருமை, காம் பீரியம் இவை அனைத்தும் முயற்சி செய்யாதவர்களுக்குக் கிட்டா.

"முயற்சிக்கு உரிய பலன் அவசியம் உண்டு. இல்லையேல் தெய்வத்தை நம்பிக் காரியத்தில் ஈடுபடாமல் மக்கள் இருந்து விடுவர். சொந்த முயற்சி இல்லாமல் தெய்வத்தை மட்டும் நம்பி இருப்பவன், ஆண்மையற்றவனை அடைந்த பெண் போல, வீணே வருத்தப்பட்டுக்கொண்டுதான் இருப்பான்.

"மிகச் சிறிய நெருப்பாயினும் காற்றின் தூண்டுதலால் அது விருத்தி அடைவதுபோல, முயற்சியுள்ளவனுக்குத் தெய்வமும் முன்வந்து உதவுகிறது. எண்ணெய் இல்லாது போனால், விளக்கு அணைந்துபோவதுபோல, முயற்சி செய்யாதவனுக்குத் தெய்வமும் உதவாமல் இருந்துவிடுகிறது.

"செல்வம், பெண்டிர், இதர போகங்கள் எல்லாம் எளிதாகக் கிடைப்பினும், முயற்சி யில்லாவிட்டால் அனுபவம் என்னும் இன்பம் எந்த மனிதனுக்கும் கிட்டாது. தெய்வமே முன்வந்து உதவிபுரியினும், முயற்சி இல்லாதவனால் தெய்வம் கொடுத்ததை எப்படி அனுபவிக்க முடியும்? செலவு செய்து கொண்டே இருப்பினும் முயற்சியுள்ளவனுக்குச் செல்வம் பெருகிக்கொண்டே இருக்கும்.

"மானிட லோகத்தை விடத் தேவலோகம் சிறந்ததன்று; ஏனெனில் முயற்சியுடன் இருப்பதால் மானிட லோகத்தில் மாட மாளிகைகளும் செல்வங்களும் நிரம்பி இருக்கின்றன. தேவலோகம் அப்படி இல்லை. விடா முயற்சியுள்ள மனிதன் செல்வதையும் அடைவான்; சொர்க்கத்தையும் அடைவான்" என்று பிரம்ம தேவர் சொன்னார்.

## கருணையின் மேன்மை

"பிதாமகரே! கருணையின் சிறப்பையும் மேன்மையையும் பற்றித் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். அதைப் பற்றித் தாங்கள் விளக்க வேண்டும்" என்று சொன்னார் யுதிட்டிரர்.

அடியில் வரும் கதையைச் சொல்லிக் கருணையின் பெருமையை விளக்கினார் பீஷ்மர்.

காசிராஜனுடைய நாட்டில் வசிக்கும் ஒரு வேடன் வேட்டைக்குக் கிளம்பினான். விஷம் தோய்ந்த அம்புகளையும், வில்லையும் எடுத்துக்கொண்டு அவன் புறப்பட்டான். காட்டை அடைந்து மான்களை அம்பு எய்து கொல்லும் எண்ணத்துடன் சுற்றினான்.

ஓர் இடத்தில் மான்கள் நிற்பதைக் கண்டு, நஞ்சு தோய்ந்த அம்பை அவற்றின்மீது குறிவைத்துத் தொடுத்தான்.

குறி தவறிய அந்த அம்பு, அங்கே நின்ற பெரிய ஒரு மரத்தின்மீது போய்த் தைத்தது. கொடிய விஷம் தோய்ந்த அம்பினால் தாக்குண்ட அந்த மரம், காய்களும் இலைகளும் அதிர்ந்து பட்டுப்போயிற்று.

அந்த மரத்தின் பொந்தில் நீண்ட காலமாக ஒரு கிளி வசித்து வந்தது. கிளிக்கு அந்த மரத்தின்மீது அபாரமான பற்று. ஆகவே, மரம் உலர்ந்து பட்டுப்போயும் அந்த மரத்தைவிட்டுப் பிரிய, கிளிக்கு மனம் வரவில்லை. இரை தேட வெளியில் புறப்படாமல் அந்த மரத்தில் தங்கி, மரத்தைப் போலவே தானும் உலரத் தொடங்கிற்று. களைத்தும் சோர்ந்தும் போய் இருந்த காரணத்தால் அதன் குரல் தடுமாறிற்று. மானிடருக்கும் அரிதான மேன்மையுள்ள நடத்தை கிளியிடம் இருப்பதைக் கண்டு தேவேந்திரன் திகைப்படைந்தான். "இருக்கத்தகாத கருணை இந்தக் கிளிக்கு எவ்வாறு வந்தது?" என்று சிந்திக்கலானான்.

பிறகு இந்திரன் மானிட வேடம் தாங்கி, அந்தணனைப் போல, பூமிக்கு வந்தான். அவன் கிளியை அணுகி, "ஏ கிளியே! உன் தாய் சிறந்த சந்ததியை அடையும் பேறு பெற்றிருக்கிறாள். கிளி ஜன்மம் எடுத்துள்ள நீ, உலர்ந்த இந்த மரத்தை விட்டுவிடாமல் இன்னும் ஒட்டிக்கொண்டிருக்கிறாயே, ஏன்?" என்று கேட்டான்.

இந்திரன் இவ்வாறு கேட்டதும் கிளி, மரியாதை செய்து அவனை வணங்கிற்று. "தேவர்களுக்கு அரசே! உமக்கு நல்வரவு! தவத்தினால் உம்மை அறிந்துகொள்ளும் பேறு பெற்றேன்" என்று சொல்லிற்று.

கிளி இப்படிச் சொன்னதும் "என்ன அறிவு! என்ன அறிவு!" என்று சொல்லிப் பெரிதும் அதைத் தன் மனத் துள்ளே கொண்டாடினான் இந்திரன். பிறகு அதை நோக்கி, "ஏ கிளியே! இந்த மரம் கனிகளும் இலைகளும் இன்றி உலர்ந்து போய் இருக்கிறது. எந்தப் பறவையும் இனி இதில் வசிக்க முடியாது. அப்படி இருந்தும், இந்த மரத்தில் நீ நீடித்து வசித்து வருகிறாயே! ஏன்?" என்று கேட்டான்.

தான் கேட்பது நியாயமாகாது என்பதை அறிந்திருந் தும், தேவேந்திரன் கிளியை இவ்வாறு கேட்டான்.

கிளி, தேவேந்திரன் சொன்னதைக் கேட்டுப் பெருமூச்சு விட்டு வருந்திற்று. துயரம் மேலிட, அது தேவேந்திரனை நோக்கி, "இந்திராணியின் நாயகரே! தேவர்கள் அனைவருக் கும் அரசே! நற்குணங்கள் வாய்ந்த இந்த மரத்தில் நான் பிறந்தேன்; இளமைப் பருவத்தில் ஆதரவு தந்து இந்த மரம் என்னைக் காப்பாற்றிற்று; பகைவர்கள் என்னைப் பிடிக்க முடி யாமல் பாதுகாப்புடன் நான் இங்கு வசித்தேன். இந்த மரத் தின்பால் அன்பு செலுத்தி நீடித்து இங்கே இருக்க விரும்பும் என்னிடம் பரிவு காட்டாமல் என்னை வேறு இடத்துக்குப் போகுமாறு என்னை நீர் தூண்டுவது உம் தகுதிக்கு அடுக் குமா? என் ஜென்மம் கடைத்தேறாமல் போகும் வழியை எனக்கு நீர் கூறலாமா? உபகாரம் செய்தவர்களிடம் பரிவோடு நடப்பது தானே நியாயம்? பிறரிடம் பரிவோடு நடப்பதுதான் நல்லோருக்கு மனத் திருப்தியை உண்டாக்கும். நல்ல நிலையில் இந்த மரம் இருந்தபோது இதை நான் அடுத்திருந்தேன். இப்போது அவல நிலையில் இருக்கும் அதை விட்டு நான் பிரிந்து செல்வது நியாயமா?" என்று கிளி பதில் சொல் லிற்று.

கிளி சொன்ன பதிலைக் கேட்டு, தேவேந்திரன் அகமகிழ்ந் தான். மற்ற உயிர்கள்பால் அது காட்டும் பரிவைப் பெரிதும் பாராட்டினான்; தருமம் தெரிந்த அந்தக் கிளியின் போக்கைப் புகழ்ந்தான். "கிளியே! உனது நடத்தை எனக்கு

மிகுந்த திருப்தியைச் செய்கிறது. உனக்குப் பிரியமான வரத்தைக் கேள் தருகிறேன்'' என்று சொன்னான்.

பிறர் துயரப்படுவதைப் பொறுக்காத அந்தக் கிளி உடனே, "இந்த மரம் மீண்டும் செழித்து வளர வேண்டும்'' என்று வேண்டிற்று.

கிளியின் சீலத்தையும் அன்பையும் வியந்தவாறே, அந்த மரத்தின்மீது அமிர்தத்தைப் பொழிந்தான் இந்திரன்.

உடனே அந்த மரம் இலையும் கனியும் கிளைகளும் நிரம்பியதாயிற்று; கிளியும் நீண்ட காலம் அந்த மரத்தில் வசித்து பின்னர், தேவலோகம் போய்ச் சேர்ந்தது.

"யுதிட்டிரா! பிறர் துயருற்று வாடுகையில் எவன் இந்த கிளியைப்போல் பரிவு காட்டுவானோ, அவன் மேன்மை அடைவான்'' என்று கூறினார் பீஷ்மர்.

## இலக்குமி தங்குமிடம்

"பிதாமகரே, எத்தகைய ஆடவர் பெண்டிரிடத்தில் இலக்குமி நிலைத்து வாசம் செய்வாள்?'' என்று கேட்டார் யுதிட்டிரர்.

"இது சம்பந்தமாக முன்பு நடந்த ஓர் உரையாடலை உனக்கு நான் கூறுகிறேன் கேள்'' என்று சொல்லி அடியில் வரும் கதையை, பீஷ்மர் யுதிட்டிரருக்குச் சொன்னார்.

ஒரு முறை ருக்மணியும் கிருஷ்ணனும் இருக்கும் சமயம் இலக்குமி அவர்களிடம் வந்தாள். அப்போது ருக்மணி, இலக்குமியை நோக்கி மலர்ந்த முகத்துடன், "மூன்று உலகங்களுக்கும் நாதராய் இருப்பவரின் காதலியே! பிருகு மகரிஷியின் பெண்ணே! எத்தகைய ஆடவர் பெண்டிரிடத்தில் நீ நிலைத்து இருப்பாய்?'' என்று கேட்டாள்.

கிருஷ்ணன் முன்னிலையில் ருக்மணி இப்படிக் கேட்டதும் இலக்குமி அகமகிழ்ந்தாள். பிரியத்தோடு அவளை நோக்கி இனிமையாகப் பேசினாள். "பெண்ணே! அழகுள்ளவள்,

தைரியமுள்ளவன், திறமைசாலி, வேலையில் ஈடுபட்டு இருப்பவன், கோபமில்லாதவன், தெய்வபக்தியுள்ளவன், நன்றி மறவாதவன், புலனடக்கமுடையவன், எப்பொழுதும் நற்குணங்களால் விளங்குபவன் இவர்களை அடுத்து, நீடித்து நான் இருப்பேன்.

"தொழில்கள் செய்யாதவன், நாத்திகன், ஒழுக்கம் தவறினவன், கொடுஞ் செய்கையுடையவன், அடக்கமில்லாதவன், பெரியோரிடத்தில் பொறாமைப்படுபவன், பராக்கிரமம் குறைந்தவன், தேகவன்மை யில்லாதவன். உற்சாகம் குறைந்தவன், கௌரவம் குறைந்தவன், யாவற்றுக்கும் துயரப்படுபவன், கோபமுள்ளவன், நினைத்த காரியத்தைச் செய்து முடிக்காதவன் இவர்களிடம் நான் தங்குவது இல்லை.

"மேன்மேலும் விருத்தியடைய விருப்பமில்லாதவன், எளிதில் மனச்சோர்வு அடைபவன், அற்பத்தில் திருப்தி அடைபவன் இவர்களை நான் அண்டுவதே இல்லை.

"தருமம் தெரிந்தவர், தருமத்தைக் கடைப்பிடிப்பவர், பெரியோரை அடுப்பவர், அடக்கமுள்ளவர், பிறர் மனத்தை அறிபவர், காலத்தை வீணாக்காதவர், தானம் செய்பவர், சுத்தமாய் இருப்பவர் இத்தகைய பெரியோர்களிடம் நான் நித்தியம் வசிப்பேன்.

"அழகுள்ளவள், அடக்கமுள்ளவள், தெய்வபத்தியுள்ளவள், வீட்டையும் பாத்திரங்களையும் சுத்தமாக வைத்திருப்பவள், அரிசி பருப்பு முதலிய சமையல் பொருள்களைப் பேணி வைத்திருப்பவள், தருமத்தை அறிந்தவள், தருமத்தைக் கடைப்பிடித்து ஒழுகுபவள், பெரியோருக்குப் பணிவிடை செய்பவள், கணவனிடம் அன்போடு நடப்பவள், மனம், வாக்கு, காயம் மூன்றிலும் பரிசுத்தமாய் இருப்பவள் இத்தகைய மாதரிடத்தில் நான் தவறாது வசிக்கிறேன்.

"பண்டங்களைப் பேணி வைத்துக்கொள்ளாதவள், ஆராய்ந்து செய்யாதவள்: கணவனுக்கு விரோதமாக எப்போதும் பேசுபவள், நாணயமற்றவள், பிறர் வீட்டை விரும்புபவள் இத்தகைய பெண்களிடம் நான் அண்டுவதே இல்லை.

"அதிக ஆசையுள்ளவள், திறமையில்லாதவள், கர்வமுள்ளவள், சுத்தமில்லாதவள், கலக மனப்பான்மை கொண்டவள், சதா தூங்குபவள், எப்பொழுதும் படுத்திருப்பவள் இத்தகைய மாதரிடமும் நான் வசிப்பது இல்லை.

"வாகனங்கள், கன்னியர்கள், ஆபரணங்கள், வேள்வி, மழை பொழியும் மேகம், மலர்ந்த தாமரைக் கொடி, யானைகள், பசுக்கள், சிம்மாதனங்கள், தாமரை மலர்கள் நிறையவுள்ள தடாகங்கள்; நதிகள் இவற்றிலும் நான் எப்பொழுதும் வசிக்கிறேன்.

வேதம் ஓதும் அந்தணர்கள், தம் கடமையில் ஊக்கமுள்ள அரசர்கள். பயிர்த்தொழில் செய்வதில் ஊக்கமுள்ள வைசியர்கள், பணிவிடை செய்வதில் ஊக்கமுள்ள சூத்திரர்கள் இவர்களிடம் நான் வசிக்கிறேன்" என்று இலக்குமி சொன்னாள் என்று கூறினார் பீஷ்மர்.

## யாருக்கு அதிக இன்பம்?

"பிதாமகரே, ஆண் பெண் சேர்க்கையில் யாருக்கு இன்பம் அதிகம்? இதுபற்றி எனக்கு இருக்கும் ஐயத்தைத் தாங்கள் அகற்ற வேண்டும். யாருக்கு அதிக இன்பம் என்பதை என்னால் நிச்சயிக்க முடியவில்லை" என்று யுதிட்டிரர் கேட்டார்.

"யுதிட்டிரா! இது சம்பந்தமாக ஒரு பழங் கதையை உனக்கு நான் கூறுகிறேன்:

"முன்பு பங்காஸ்வனன் என்னும் பெயருள்ள ராஜரிஷி ஒருவன் இருந்தான். தரும சிந்தையுள்ள அவனுக்குக் குழந்தைகள் இல்லை. ஆகவே, குழந்தைமீது விருப்பமுள்ள அவன் இந்திரனுக்கு விரோதமான அக்னிஷ்டுதம் என்னும் ஒரு வேள்வியை இயற்றத் தொடங்கினான்.

"இந்த வேள்வியை இயற்றினால் பிராயச்சித்தம் ஏற்படுவதுடன் குழந்தைச் செல்வமும் கிடைக்கும். ஆகவே, இந்த

யாகம் நடத்தும் பங்காஸ்வனனிடம் குற்றத்தைக் காண தேவர்க்கு அதிபதியான இந்திரன் முயன்றுகொண்டு இருந் தான். அரசனிடம் எந்தக் குற்றத்தையும் இந்திரனால் கண்டு பிடிக்க முடியவில்லை.

"சில தினங்களுக்குப் பின்னர், ஒரு நாள் பங்காஸ்வனன் வேட்டையாடக் காட்டுக்குச் சென்றான். இதுதான் சமயம் என்று கருதிய இந்திரன் அந்த அரசனுக்குப் புத்திமயக்கம் ஏற்படச் செய்தான்.

"குதிரைமீது சென்ற அரசன் திசை தெரியாமல் காட் டில் அங்கும் இங்கும் அலைந்தான். பசியும் தாகமும் அவனைப் பெரிதும் வருத்தின. இங்கும் அங்கும் அலைந்ததனால் களைத் தும் சோர்ந்தும் போயிருந்த அந்த அரசன், படிகம்போல் தூய நீர் நிறைந்த அழகிய தடாகம் ஒன்று இருப்பதைக் கண்டான்.

'உடனே குதிரையைவிட்டு இறங்கி, அதற்குத் தண்ணீர் காட்டினான். பிறகு குதிரையை ஒரு மரத்தில் கட்டிப் போட்டுவிட்டு, குளத்தில் இறங்கி நீராடினான். என்ன ஆச் சரியம்! உடனே அந்த அரசன் ஒரு பெண்ணாக மாறிப் போனான். இதை அறிந்ததும் அந்த அரசன் துணுக்குற்றான். நாணமுற்று வருந்தினான். பொறிகளும் புத்தியும் கலங்கித் தவித்தான். 'குதிரைமீது நான் எவ்வாறு ஏறுவேன்? எப்படி ஊருக்குத் திரும்புவேன்? அக்னிஷ்டுதம் என்னும் வேள்வியை இயற்றியதனால் என் மனைவிக்குப் பலசாலிகளான நூறு புதல்வர்கள் பிறந்திருக்கின்றனர். அவர்களுக்கும் என் மனை விக்கும் நகர மாந்தருக்கும் நான் என்ன செய்வேன்? மென்மை, சாந்தம், பிறருக்கு உட்படுதல் முதலியன பெண் களுக்கு இயல்பான குணங்கள் என்றும், வன்மை, சூரத்தனம், சுறுசுறுப்பு முதலின ஆடவர்க்குரிய இயல்பான குணங்கள் என்றும் ரிஷிகள் கூறியிருக்கின்றனர். எப்படியோ ஆண்மை மறைந்து, நான் பெண்மையை அடைந்துவிட்டேன். இனி எப்படி நான் குதிரைமீது ஏறுவேன்?" என்று நினைத்தான்.

பிறகு மிகுந்த வருத்தத்துடன் குதிரைமீது ஏறிக் கொண்டு ஊர் திரும்பினான். அவனைக் கண்டு அவனுடைய மனைவி மக்களும் மற்றவர்களும் 'இது என்ன?' என்று கூறி வியப்புற்றனர்.

திறமையாகப் பேசத் தெரிந்த அந்த அரசன், "சேனைகள் சூழ்ந்து வர நான் வேட்டைக்குப் போனேன். தெய்வ வசத்தில் மயக்கமுற்று, பயங்கரமான ஒரு காட்டுக்குள் நுழைந்தேன். தாகத்தால் தவித்த நான் அங்கே தென்பட்ட, அழகிய குளத்தில் இறங்கி நீராடினேன். உடனே, என் உருவம் பெண் உருவத்தை அடைந்துவிட்டது" என்று சொல்லி வருந்தினான்.

தான் அவர்களின் தந்தைதான் என்பதை நிரூபிக்கும் முறையில் தன் மைந்தர்கள் ஒவ்வொருவரின் பெயரையும் சொல்லி அழைத்தான். "மைந்தர்களே! நான் வனம் செல்கிறேன். நீங்கள் அன்புடன் இராஜ்யத்தை ஆண்டு அனுபவியுங்கள்" என்று சொன்னான்.

பிறகு பெண் உருவில் இருந்த அந்த அரசன், காட்டுக்குத் திரும்பிவிட்டான். ஓர் ஆசிரமத்தை அடைந்து அங்குள்ள ரிஷியுடன் தங்கினான்.

அந்த ரிஷிமூலம் பெண்ணுக்கு நூறு புதல்வர்கள் பிறந்தனர். அந்த நூறு பேரையும் அழைத்துக்கொண்டு தன் மூத்திய புதல்வர்களிடம் சென்று, "நீங்கள் நான் ஆணாக இருந்தபோது எனக்குப் பிறந்தவர்கள்; இந்த நூறு பிள்ளைகளும் நான் பெண்ணான பிறகு பிறந்தவர்கள். நீங்கள் எல்லாரும் ஒன்று சேர்ந்து சகோதர பாசத்துடன் இந்த நாட்டை ஆளுங்கள்" என்று சொன்னான்.

அதன்படி அவர்கள் ஒற்றுமையாக நாட்டை ஆண்டு வந்தனர். இந்திரனுக்கு இது பிடிக்கவில்லை. "இந்த நாட்டு அரசனுக்கு நான் செய்த தீமை நன்மையாக முடிந்துவிட்டதே" என்று வருந்தினான்.

உடனே இந்திரன் ஒரு பிராமண வடிவை எடுத்துக் கொண்டு, அரசனுடைய முந்தின புதல்வர்களிடம் சென்றான். அரசனின் முந்தின குமாரர்களை நோக்கி, "ஒரே தந்தைக்குப் பிறந்த சகோதரர்களிடையே பாசம் நீடித்து இருப்பது இல்லை. தேவர்களும் அசுரர்களும் கசியபரின் புதல்வர்கள்தாம். அவர்களுக்கு இடையே அரசாங்கம் பற்றித் தான் கலவரம் ஏற்பட்டது. நீங்கள் பங்காஸ்வனனுக்குப் பிறந்தவர்கள்; மற்றவர்கள் ரிஷிக்குப் பிறந்தவர்கள்; அவர்களும் உங்கள் தந்தையின் இராஜ்யத்தை ஆண்டு அனுபவிக்கிறார்கள்" என்று சொல்லி அவர்களிடையே பகைமை உணர்ச்சியைத் தூண்டிவிட்டான்.

இதனால் ஒருவருடன் ஒருவர் சண்டையிட்டுக்கொண்டு அவர்கள் இறந்து போயினர். விவரம் தெரிய வந்து, ரிஷியின் மனைவி மனம் கொதித்து அழுதாள்.

அப்போது இந்திரன் பிராமண வடிவத்துடன் அவள் அருகே வந்தான். "அழகிய பெண்ணே! எதற்காக நீ அழுகிறாய்?" என்று கேட்டான்.

அதற்கு அந்தப் பெண் அழுதுகொண்டே, "அந்தணரே! என் இரு நூறு பிள்ளைகளும் ஒருவருடன் ஒருவர் அடித்துக் கொண்டு இறந்து போயினர். முன்பு நான் அரசனாய் இருந்தேன். அப்போது எனக்கு அழகிய நூறு பிள்ளைகள் பிறந்தனர். அதன் பின்னர் ஒரு முறை நான் காட்டுக்கு வேட்டையாடச் சென்றிருந்தபோது, ஒரு தடாகத்தில் நீராடியதன் பயனாய், பெண் வடிவத்தை அடைந்தேன். அதனால் என் புதல்வர்களை அரசாளச் செய்துவிட்டு நான் காடு திரும்பினேன். பெண்ணான எனக்கு ஒரு ரிஷிமூலம் நூறு புதல்வர்கள் பிறந்தனர். அவர்களையும் நகருக்கு அழைத்து வந்து இருக்கச் செய்தேன். கால வசத்தால் அவர்களிடையே பகைமை மூண்டு, ஒருவருடன் ஒருவர் அடித்துக்கொண்டு அவர்கள் இறந்து போயினர். அதன் துயரம் தாங்காது இப்பொழுது நான் அழுகிறேன்" என்று அந்தப் பெண் சொன்னாள்.

அதற்கு, பிராமண வடிவில் வந்த இந்திரன், "பெண்ணே இந்திரத் துவேஷமுள்ள வேள்வியை இயற்றி, என்னை நீ துயரப்படுத்தினாய். மதி கெட்டவளே! நான் இந்திரன். நீ புரிந்த துயரத்துக்குத் தகுந்த வஞ்சத்தை நான் தீர்த்துக் கொண்டேன்" என்று கோபத்தோடு சொன்னான்.

விவரம் தெரிந்ததும் பங்காஸ்வனன் என்னும் அந்த அரசன் இந்திரன் காலடிகளில் வீழ்ந்து வணங்கினான். "தேவ ராஜனே! புதல்வர்களை விரும்பி அந்த யாகத்தை நான் செய் தேன். அதற்காக என்னை மன்னியுங்கள்" என்று வேண்டினான்.

அரசன் தன் காலடியில் வீழ்ந்து வணங்கியதனால் இந்திரன் மகிழ்ச்சி அடைந்தான். அவனுக்கு வரம் கொடுக்க விரும்பி, அரசனே! உனக்கு எந்தப் பிள்ளைகள் பிழைக்க வேண்டும்? நீ ஆணாய் இருக்கும்போது பிறந்த பிள்ளைகள் பிழைக்க வேண்டுமா? அல்லது பெண்ணாய் இருக்கும்போது பிறந்த பிள்ளைகள் பிழைக்க வேண்டுமா? எது வேண்டுமோ? சொல் என்று கேட்டான். இதைக் கேட்ட அந்தப் பெண். இந்திரனைக் கை கூப்பி வணங்கினான். "இந்திரனே! நான் பெண்ணாய் இருக்கும்போது பிறந்த பிள்ளைகள் தான் பிழைக்க வேண்டும்" என்று வரம் கேட்டான்.

இந்திரன் ஆச்சரியம் அடைந்தான். "ஆணாய் இருக்கும் போது உனக்குப் பிறந்த பிள்ளைகள்மீது பிரியக் குறைவாய் இருப்பதற்குக் காரணம் என்ன? பெண்ணாய் இருக்கும்போது பிறந்த குழந்தைகளிடம் நீ அதிகம் நேசம் காட்டுவதற்குக் காரணம் என்ன?" என்று கேட்டான்.

"இந்திரனே! பெண்ணுக்குப் பிள்ளைகளிடம் பாசம் அதிகம். ஆடவர்களுக்கு அப்படி இல்லை. அதனால்தான் நான் பெண்ணாய் இருக்கும்போது பிறந்த குழந்தைகள் உயிர் பெற்று எழுவதை விரும்புகிறேன்" என்று சொன்னாள் அந்தப் பெண்.

இந்திரன் அவளுடைய நிலைக்கு இரங்கினான். "பெண்ணே! உன் புதல்வர்கள் அனைவருமே உயிர்பெற்று எழட்டும். அரசனே! உனக்கு ஆண் தன்மை வேண்டுமா அல்லது பெண்மை வேண்டுமா? அதையும் நீ வரமாகக் கேட்கலாம்" என்று சொன்னான்.

"இந்திரனே! பெண்மையைத்தான் நான் விரும்புகிறேன்; ஆண் தன்மையை நான் விரும்பவில்லை" என்று பதில் சொன்னாள் அந்தப் பெண்.

"எதற்காக ஆண்தன்மையைப் புறக்கணித்துவிட்டு நீ பெண்தன்மையைப் பெரிதும் விரும்புகிறாய்?" என்று கேட்டான் இந்திரன்.

"இந்திரனே! ஆணும் பெண்ணும் கூடி மகிழும் காலத்தில், பெண்ணுக்குத்தான் இன்பம் அதிகம். இது காரணமாகவே பெண்தன்மையை நான் விரும்புகிறேன். பெண்ணாய் இருப்பதில்தான் மகிழ்ச்சியும் திருப்தியும் அதிகம் இருக்கின்றன" என்று பதில் சொன்னாள் அந்தப் பெண்.

"அப்படியே ஆகட்டும்" என்று சொல்லிவிட்டு, இந்திரன் தேவலோகம் திரும்பினான். பெண்ணுக்குத்தான் சேர்க்கையின்போது இன்பம் அதிகம் என்பதைத் தெரிந்துக்கொள்' என்று சொன்னார் பீஷ்மர்.

## பூதானம்

"இதைக் கொடுங்கள். அதைக் கொடுங்கள் என்று சுமிருதிகள் முழங்குகின்றன. அரசர்கள் கொடுக்கத்தக்க தானங்களில் மிகச் சிறந்த தானம் எது? பிதாமகரே! அதை எனக்குத் தாங்கள் தெரிவிக்க வேண்டும்" என்று பீஷ்மரை யுதிட்டிரர் கேட்டார்.

"மற்ற எல்லாத் தானங்களையும்விட, பூதானமே மேம்பட்ட தானம் பூமியானது அசைவற்றது; அழிவற்றது;

உயர்ந்த போகங்களை நல்குவது, ஆடைகள், அணிகலன்கள், இரத்தினங்கள், விலங்குகள், தானியங்கள் முதலியவற்றைத் தருவது. பூதானம் செய்பவன் எப்பொழுதும் மேன்மையுடன் இருப்பான். பூமி நிலைத்திருக்கும் அளவுக்கு அவனும் செல்வத்தோடு இருப்பான்.

"பூதானம் செய்தால் கொடிய செய்கையுள்ளவனும் பொய் சொல்பவனும் திருந்திவிடுவார்கள். தானம் பெறுபவனைத் திருத்தி நல்வழிப்படுத்தும் ஆற்றல் பூமிக்கு உண்டு. பிரியத்தைக் கொடுப்பவன் என்ற பெயர் பூமிக்கு உண்டு. பூதானம் செய்வதனுல் தானம் செய்பவனும் தானம் பெறுபவனும் மேன்மை அடைகிருர்கள்.

"யோக்கியனுக்குப் பூமி தானம் செய்யும் அரசன், அஸ்வமேத யாகம் செய்த பலனை அடைவான்.

"பூமியைத் தானம் கொடுப்பவன், பொன், வெள்ளி, துணிமணிகள், தானியம் இவற்றை எல்லாம் வழங்கியவன் ஆகிருன்.

"தவம், ஒழுக்கம், ஆசையின்மை, சொல் தவருமை பெரியோரையும் தேவர்களையும் பூசிப்பது முதலிய குணங்கள் பூமி தானம் செய்பவனிடம் இருக்கும்.

"பாலைச் சுரந்துகொண்டு, தன் கன்றைத் தேடிப் பசு ஓடுவதைப்போல, பூமி தானம் செய்தவனைப் பூமி தேடிக் காப்பாற்றுகிறது.

"அரசனே! மனிதர்கள் பூமியில் பிறக்கின்றனர்; பூமியில் இறக்கின்றனர். பூமிதான் உலகத்துக்குத் தாயும் தந்தையும். பூமிக்கு நிகரான பொருள் இந்த உலகத்தில் எதுவும் இல்லை.

"பூமிதானம் சம்பந்தமாக முன்பு இந்திரனும் பிருகஸ்பதியும் உரையாடி இருக்கின்றனர். அதை உனக்குச் சொல்லுகிறேன், கேள்:

"ஒரு முறை இந்திரன் பிருகஸ்பதியை நோக்கி, 'பகவானே எந்தத் தானம் செய்தால், சொர்க்கத்தை அடைந்து மனி

தன் சுகமாக வசிப்பான்? அழிவில்லாததும் பிறரால் அப கரிக்க இயலாததுமான தானம் எது?'' என்று கேட்டான்.

''புரந்தரனே! பூமி தானத்தைக் காட்டிலும் சிறந்த தானம் வேறு இல்லை. பூமியைக் கொடுப்பவன், குளம், ஏரி, கிணறு இவற்றை எல்லாம் கொடுத்தவன் ஆகிறான். பூமியைக் கொடுப்பவன், மருந்துகள், மலர்கள், கனிகள், மரங்கள், காடுகள், கற்கள், மலைகள் இவைகள் அனைத்தையும் கொடுத்தவனாகிறான்.

''தண்ணீர் மீது விட்ட எண்ணெய்த் துளி, வியாபித்துப் பரவுவதை ஒப்ப, பூமிதானத்தின் பலன் பயிருக்குப் பயிர் அபிவிருத்தியாகிறது.

''பூமிதானத்துக்கு ஒப்பான தானம் இல்லை; தாய்க்கு ஒப்பான ஆசான் இல்லை; சத்தியத்தைப் போன்ற தருமம் இல்லை; தானத்துக்கு நிகரான புதையல் இல்லை'' என்று சொன்னார் பிருகஸ்பதி.

பூமிதானத்தின் சிறப்பை இவ்வாறு எடுத்து விளக்கி விட்டு, ''யுதிட்டிரா! இன்னும் நீ கேட்க விரும்புவதைக் கேள்'' என்று சொன்னார் பீஷ்மர்.

## அன்னதானம்

''அண்ணலே! கொடுத்தவுடனேயே பெறுபவர் முழுதும் திருப்தி அடைகிற தானம் எது? இம்மை மறுமை இரண்டிலும் பயன்படும் தானம் எது?'' என்று கேட்டார் யுதிட்டிரர்.

''யுதிட்டிரா! இதுபற்றி முன்பு நானும் நாரதரும் உரையாடி இருக்கிறோம். அதை உனக்குக் கூறுகிறேன் கேள்:

''உலக வாழ்வு, அன்னம் கிடைப்பதைப் பொறுத்தே இருக்கிறது. அன்ன தானத்தைக் காட்டிலும் சிறந்த தானம் வேறு இல்லை. அன்னம் உயிரைப் போஷிக்கும்; பலத்தைக்

கொடுக்கும். துறவி, இல்லறத்தான், பிரம்மச்சாரி அனைவருக்கும் அன்னம் தேவைப்படுகிறது. ஆகையால் களைத்துப் போய்த் தன் வீட்டை நாடி வந்தவனுக்கு இல்லறத்தான் அவசியம் அன்னம் இட வேண்டும். உண்டி கொடுத்தவனை உயிர் கொடுத்தவன் என்று சொல்லலாம். மற்ற தானங்களின் பலன் கண்ணுக்குத் தெரியாது. அன்னதானத்தின் பலனைக் கண்கூடாகக் காணலாம். அறம் பொருள் இரண்டும் அன்ன தானத்தினால் உண்டாகின்றன. அன்னம் அருந்துவதனால் இன்பம் உண்டாகிறது; சந்ததி உண்டாகிறது. ஆகாரம் சாப்பிட்டால்தான் நோய்கள் அகலும். மிக்க பலசாலியாய் இருப்பினும் அன்னம் அருந்தாவிட்டால் நாளடைவில் அவனுடைய பலமும் அழிந்து போகிறது

"அன்னம் இல்லாவிட்டால் ஒருவரை ஒருவர் கொண்டாட மாட்டார்கள்; திருமணம் முதலிய மங்கள காரியங்கள் நடைபெற மாட்டா. மூன்று உலகங்களுக்கும், அன்னம்தான் பிரதானம்.

"அன்ன தானம் செய்யும் மனிதன் பலத்தை அடைவான். ஜயத்தை அடைவான்; உற்சாகம் அடைவான்; புகழை அடைவான்.

"மேகம் பொழிவதனால் பூமியில் பயிர்கள் உண்டாகின்றன: அதனால் உலகம் வாழ்கிறது. உணவு அருந்துவதனால் இறைச்சி, கொழுப்பு, எலும்பு, ரத்தம், விந்து முதலியன உண்டாகின்றன; விந்திலிருந்து உயிர்கள் உற்பத்தியாகின்றன. ஆகவே அன்ன தானம் செய்பவன், உயிரையும் கொடுக்கிறான்; ஆற்றலையும் கொடுக்கிறான்; அதனால் உலகம் நிலைபெற்று இருக்கிறது."

"யுதிட்டிரா! நாரதர் எனக்கு இவ்வாறு சொன்னார். ஆகையால் அரசனே! அன்ன தானம் செய்வது மிகமிக நன்மையானது என்பதைத் தெரிந்துகொள்; அதனால் நீ மேன்மையான உலகங்களை அடைவாய்" என்று சொன்னார் பீஷ்மர்.

# சப்த ரிஷிகள் செய்த சபதங்கள்

"பிதாமகரே! தானம் செய்பவனுக்கும் தானம் வாங்குபவனுக்கும் இருக்க வேண்டிய குணங்கள் யாவை?" என்று கேட்டார் யுதிட்டிரர்.

"யுதிட்டிரா! இது சம்பந்தமாக விருஷாதர்ப்பி என்னும் அரசனுக்கும் சப்த ரிஷிகளுக்கும் நடந்த சம்பாஷணையைச் சொல்லுகிறேன் கேள் :

"கசியபர், அத்ரி, வசிஷ்டர், பரத்வாஜர், கௌதமர், விசுவாமித்திரர், ஜமதக்னி இந்த ஏழு ரிஷிகளும் பதிவிரதை அருந்ததியும் இருந்தனர்.

"கண்டை என்பவள் இவர்களுக்கு வேலைக்காரியாய் இருந்து, பணிவிடை புரிந்துவந்தாள். பசுசகன் என்பவன் அந்த வேலைக்காரியின் கணவன்.

"இவர்கள் எல்லோரும் பிரம்ம லோகத்தை அடைய விரும்பி, யாகம் செய்துகொண்டு இந்தப் பூமியில் சஞ்சரித்தனர்.

"அப்பொழுது மழையின்மை காரணமாகப் பஞ்சம் அதிகரித்துவிட்டது. உணவு கிடைப்பது அரிதாய்ப் போய்விட்டது. அப்பொழுது யாகம் செய்த சிபி புதல்வன் விருஷாதர்ப்பி என்னும் அரசன் தன் புதல்வனை, ரித்விக்குகளுக்குத் தட்சிணையாகக் கொடுத்தான். அவன் பசியின் காரணமாக இறந்துபோனான்.

"பசியின் கொடுமையால் வருந்திய ரிஷிகள், இறந்து போன அரசகுமாரனை ஒரு பாத்திரத்தில் சமைத்தனர்.

"இது சமயம் அரசகுமாரனின் தந்தை விருஷாதர்ப்பி அங்கு வந்தான். முனிவர்களை நோக்கி, "தபோதனர்களே! தானம் வாங்குவது கஷ்டத்தைப் போக்கும். அந்தணர்களே

யாசிப்பது குற்றமன்று. வேண்டியதைக் கேளுங்கள்; தரு கிறேன். பசி தீருவதற்குத் தேவையான பொருள்களைத் தரு கிறேன்'' என்று சொன்னான்.

''அதற்கு அந்த ரிஷிகள், ''அரசனே! அரசர்களிடத்தில் வாங்குவது முதலில் தேன்போல் இனிக்கும். முடிவில் நஞ்சுக்கு ஒப்பாகும். வீணே எங்களுக்கு ஆசை காட்டாதே. ஒரு செக்கான் பத்துக் கசாப்புக் கடைக்காரர்களுக்குச் சம மானவன்; ஒரு கள்ளுக்கடைக்காரன் பத்து செக்கான்களுக் குச் சமம்; ஒரு வேசி பத்து கள்ளுக்கடைக்காரர்களுக்கு சமம்; ஒரு அரசன் பத்து வேசிகளுக்குச் சமம். ஆகவே, ஒரு அரசன் பதினாயிரம் கசாப்புக் கடைக்காரர்களுக்கு நிகர். அரசர்களிடத்தில் வாங்குவது கொடிது. அது தவத்தை அழித்துவிடும்'' என்று சொன்னார்கள்.

பிறகு அவர்கள் மாமிசத்தைச் சமையாமல் வேறு இடம் சென்றுவிட்டார்கள்.

அரசன் அத்திப் பழங்கள் கொணரச் செய்து, மந்திரிகள் மூலம் ரிஷிகளுக்கு அனுப்பினான்; உள்ளே பொன் திணித்த அத்திப் பழங்களை ரிஷிகளுக்கு வேலைக்காரர்கள் கொடுத் தனர். பழங்கள் பளுவாய் இருப்பதை அறிந்த அத்ரி முனி வர் ''அவை வாங்கத்தகாதவை'' என்று கருதினார். ''நாங் கள் அறியாதவர்கள் அல்லோம். மானுட புத்தியுள்ளவரும் அல்லோம். பழங்களுக்குள் பொன் இருப்பதை நாங்கள் அறிவோம். இம்மையிலும் மறுமையிலும் நலம் அடைய விரும்புபவன் இந்தப் பழங்களை வாங்க மாட்டான்'' என்று சொன்னார்.

''நூற்றுக்கணக்கிலும் ஆயிரக்கணக்கிலும் தானம் வாங்குபவன் தாழ்வான கதியை அடைவான்'' என்று சொன்னார் வசிஷ்டர்.

''பூமியிலுள்ள செல்வங்கள் அனைத்தும் திரண்டு கிடைத் தாலும் ஒருவனுக்குத் திருப்தி ஏற்படாது. ஆகவே ஒருவன் ஆசையைக் கட்டுப்படுத்த வேண்டும்'' என்று கசியபர் சொன் னார்.

"மான்குட்டி வளரும்போதே கொம்பும் வளருகிறது. மனிதனுடைய ஆசையும் அப்படித்தான். அதற்கு ஓர் அளவில்லை" என்று சொன்னார் பரத்வாஜர்.

"சமுத்திரம் நிரம்பாததுபோல, மனிதனுடைய ஆசையும் நிரம்பாது" என்று சொன்னார் கௌதமர்.

"ஒரு விருப்பம் நிறைவேறினவுடனே, மற்றொரு விருப்பம் அம்புபோல வந்து மனிதனைத் தாக்குகிறது" என்று சொன்னார் விசுவாமித்திரர்.

"விரும்பினவற்றை அனுபவிப்பதனால் விருப்பம் ஒரு காலும் தணிவது இல்லை; நெய் ஊற்ற ஊற்ற நெருப்பு வளர்வதுபோல, விருப்பத்தை அடைய அடைய, மனிதனுக்கு ஆசை மென்மேலும் அதிகரிக்கிறது" என்று கூறினார் அத்ரி.

"வாங்குவதில் கட்டுப்பாடு இருந்தாலன்றி, தவம் ஒரு நிலைப்படாது; ஆசை அதிகரிக்குமானால், தவம் கெட்டுப் போய்விடும்" என்று சொன்னார் ஜமதக்னி.

"தருமத்துக்காகப் பொருள் சம்பாதிக்கலாம் என்பதைச் சிலர் ஒப்புகிறார்கள். பொருள் ஈட்டுவதில் நாட்டம் செலுத்துவதைக் காட்டிலும் தவத்தை ஈட்டுவதில் நாட்டம் செலுத்துவதே மேலானது" என்று சொன்னாள் அருந்ததி.

"தனத்தைக் கண்டு என் தலைவர்களான ரிஷிகள் பயப்படுவதால் நானும் பயப்படுகிறேன்" என்று சொன்னாள் வேலைக்காரி கண்டை.

"தருமத்துக்கு மேற்பட்டது எதுவும் இல்லை என்று அந்தணர்கள் கூறுகின்றனர். அவர்கள் சொற்படி நடப்பதே நலம் பயக்கும்" என்று சொன்னான் பசுசகன்.

"மோசமான இந்தக் கனிகளை நமக்கு அனுப்பிய அரசனும் அவனுடைய தானமும் சுகமடையட்டும்" என்று சொல்லிவிட்டு ரிஷிகள் அப்பால் சென்றுவிட்டனர். அந்தக் கனிகளையும் எறிந்தனர்.

வேலைக்காரர்கள் அரசனிடம் திரும்பி, ரிஷிகளின் செயலை அவனிடம் தெரிவித்தார்கள்.

விருஷாதர்ப்பி என்னும் அரசன் இதனால் கோபம் கொண்டான். தன் அரண்மனை திரும்பி, கடுமையான தவத்தை மேற்கொண்டான். ஆகவனீயம் என்னும் ஒரு வேள்வியை இயற்றி, ஆகுதியைப் பெய்தான்.

உடனே நெருப்பிலிருந்து பயங்கரமான பேய் ஒன்று எழும்பியது. அந்தப் பேய்க்கு விருஷாதர்ப்பி யாதுதானி என்று பெயரிட்டான்.

அவன் யாதுதானியை நோக்கி, "நான் சொல்லும் ஏழு ரிஷிகளையும், அருந்ததி, வேலைக்காரி, அவள் கணவன் இவர்கள் எல்லாரையும் கொன்றுவிட்டு, நீ விரும்பும் இடத்துக்குச் செல்" என்று கட்டளையிட்டான்.

"ஆகட்டும்" என்று ஒப்புக்கொண்டு, அரக்கி வடிவம் தாங்கி, அந்தப் பேய் முனிவர்கள் இருக்கும் இடத்தை நாடிச் சென்றது.

அது காட்டில் புகுந்த சமயம் அத்ரி முனிவர், கிழங்குகளையும் கனிகளையும் உண்டு, வனத்தில் சஞ்சரித்தார். மற்ற ரிஷிகளும் அவ்வாறே அவருடன் சஞ்சரித்தனர்.

அது சமயம் சுனஸ்சகன் என்னும் துறவியை அவர்கள் சந்தித்தனர். பற்றறுத்து வாழும் அந்தத் துறவிக்கு, கால், கை, தோள், முகம், வயிறு அனைத்தும் பருத்து இருந்தன.

இதைக் கவனித்த அருந்ததி ரிஷிகளை நோக்கி, "இந்தத் துறவியைப்போல், உங்கள் உடம்பு செழிப்புடன் பருத்து இராததற்குக் காரணம் என்ன?" என்று கேட்டாள்.

"நம்மைப்போல் அழல் ஓம்பும் கிரியையை இவன் செய்வது இல்லை. அதனால் இந்தத் துறவி பருத்திருக்கிறான்" என்று வசிஷ்டர் சொன்னார்.

"இவன் வேதம் ஓதிச் சிரமப்படுவது இல்லை; பசியினால் மெலிந்து நலிவது இல்லை. அதனால் பருத்து இருக்கிறான்" என்று அத்ரி கூறினார்.

"இவனுக்குச் சாத்திரப் பயிற்சி கிடையாது. மகா சோம்பேறி; மடையன். பசியைத் தீர்த்துக்கொள்வதையே முக்கிய நோக்கமாகக் கொண்டவன். அதனால்தான் இந்தத் துறவி பருத்திருக்கிறான்" என்று விசுவாமித்திரர் சொன்னார்.

"வருடத்துக்கு வேண்டிய அரிசி, பருப்பு, விறகு ஆகிய வற்றைப்பற்றி நம்மைப்போல் இவன் கவலைப்படுவது இல்லை. அதனால்தான் சுனஸ்சகன் பருத்திருக்கிறான்" என்று ஜம தக்னி கூறினார்.

" 'கொடு, கொடு' என்று இவனை உடன்பிறந்தவர்கள் நச்சரிப்பது கிடையாது. அதனால்தான் சுனஸ்சகன் பருத் திருக்கிறான்" என்று கசியபர் சொன்னார்.

"இந்த ஈனப் பிராமணனுக்கு நமக்கு இருப்பது போன்ற துயரம் இல்லை. மனைவியை உலகம் பழிப்பதனால் ஏற்படும் துயரம் இவனுக்கு இல்லாதபடியால், இவன் பருத்து இருக் கிறான்" என்று சொன்னார் பரத்வாஜர்.

"மூன்று வருடங்கள்வரை வைத்துக்கொள்ள வேண்டிய மான்தோல் உடை இவனுக்கு இல்லை; இதனால் சுனஸ்சகன் பருத்திருக்கிறான்" என்றார் கௌதம மகரிஷி.

சுனஸ்சகன் அவர்களைக் கண்டதும் முறைப்படி பேசி, ரிஷிகளின் பாதங்களைத் தொட்டு மரியாதை செய்தான்.

பசியைத் தணித்துக்கொள்ள விரும்பிய ரிஷிகள், அவன் செய்த பணிவிடையை அங்கீகரித்து, அவன் கூடவே வனத் துக்குச் சென்றனர்.

மனத்தில் ஒரு காரியத்தை நிச்சயித்துக்கொண்டு, கனி களையும் கிழங்குகளையும் தேடி, காடுகளில் அவர்கள் திரிந் தனர்.

அவர்கள் இப்படித் திரிந்தபோது, ஒரு சோலையின் அருகே தூய நீர் நிறைந்த தாமரைக் குளம் ஒன்று இருப் பதைக் கண்டனர். உதய கால சூரியனைப்போல் அந்தக் குளத்தில் இருக்கும் தாமரை மலர்கள் பிரகாசித்தன. பல்

வகையான பறவைகள் அந்தக் குளத்தில் சஞ்சரித்தன. படித்துறை வெகு சுத்தமாய் இருந்தது. சேறு சகதி எதுவும் இல்லை; அதன் தோற்றம் இதுவரை யாரும் அதைப் பயன் படுத்தியது இல்லை என்பதை அறிவித்தது.

விருஷாதர்ப்பி அனுப்பின யாதுதானி என்னும் பேய் அந்தக் குளத்தைக் காவல் காத்து வந்தது.

ரிஷிகள் சுனஸ்சகனையும் அழைத்துக்கொண்டு, அந்தக் குளத்தில் தாமரைக் கிழங்குகளைப் பறிக்கச் சென்றனர். குளக்கரையில் விகாரமான யாதுதானி இருப்பதைச் கண்டு, "இந்தக் குளக்கரையில் தனித்து நிற்கும் நீ யார்? எதற்காக இங்கு நிற்கிறாய்?" என்று கேட்டனர்.

அதற்கு அந்தப் பேய், "தவசீலர்களே! நான் யாராய் இருந்தால் உங்களுக்கு என்ன? இந்தக் குளத்தைக் காவல் புரிபவன் நான்" என்று பதில் சொல்லிற்று.

"ரிஷிகள், "நாங்கள் பசியினால் அவதிப்படுகிறோம். நாங் கள் குளத்தில் இறங்கி, கொஞ்சம் தாமரைக் கிழங்குகளை எடுத்துக்கொள்ள அனுமதிப்பாயா?" என்று கேட்டனர்.

"ஒரு நிபந்தனைக்குச் சம்மதித்தால், தாமரைக் கிழங்கு களை எடுக்க நான் அனுமதிப்பேன். ஒவ்வொருவரும் உங்கள் பெயரைச் சொல்லிவிட்டு, குளத்தில் இறங்கி, கிழங்கை எடுத்துக்கொள்ளுங்கள்" என்று கூறிற்று பேய்.

பேய் இப்படிக் கூறியதும், இது ரிஷிகளைக் கொல்ல வந்த பேய் என்பதை அத்ரி முனிவர் தெரிந்துகொண்டார். எனவே, அந்தப் பேயை நோக்கி, 'சிறந்தவனே! என் பெயர் அத்ரி. மூன்று முறை வேத அத்தியயனம் செய்யாமல் நான் இரவைக் கழித்தது இல்லை. அதனால் எனக்கு அத்ரி என்ற பெயர் உண்டாயிற்று" என்று பதில் சொன்னார்.

அதற்கு அந்தப் பேய், "மகிமையுள்ளவரே! உமது பெயரை நீர் சரியாகச் சொன்னீர்; ஆயினும் அதை என்னால் நினைவில் பதிய வைத்துக்கொள்ள முடியவில்லை. தாமரைகள் நிறைந்திருக்கும் இந்தக் குளத்தில் இனி நீர் இறங்கலாம்" என்று சொல்லிற்று.

இப்படி மற்ற ரிஷிகளும் வரிசையாகத் தத்தம் பெயரைச் சொன்னதும், பேய் குளத்தில் இறங்க ஒவ்வொரு வருக்கும் அனுமதி கொடுத்தது. வசிஷ்டர், கசியபர், பாரத்வாஜர், கௌதமர், விசுவாமித்திரர், ஜமதக்னி, அருந்ததி முதலியோர் பேயின் அனுமதி பெற்று, குளத்தில் இறங்கினர்.

கடைசியாக, சுனஸ்சகன் அந்தப் பேயை நோக்கி, "ஏ யாதுதானி! மற்றவர்கள் சொன்னதுபோல் என் பெயரை உனக்கு நான் பகுத்துச் சொல்ல முடியாது. என் பெயர் சுனஸ்சகன். இதை நீ தெரிந்துகொள்" என்று கூறினான்.

"அந்தணரே! உமது உச்சரிப்பு சரியாக இல்லாதபடியால், நீர் சொன்ன பெயர் எனக்கு நன்ருகப் புரியவில்லை. அதை மீண்டும் ஒரு முறை சொல்லும்" என்று கூறிற்று பேய்.

"நான் ஒருமுறை சொன்ன பெயர் உனக்குப் புரியாதபடியால், எனது திரிதண்டத்தினுல் உன்னை நான் அடிக்கப் போகிறேன். நீ எரிந்து சாம்பலாவாய்" என்று சொல்லி, திரிதண்டத்தினுல் அந்தப் பேயை, சுனஸ்சகன் ஓங்கி அடித்தான்.

அந்தப் பேய் நிலத்தில் விழுந்து நீருய்ப் போயிற்று.

அதன் பின்னர், திரிதண்டத்தைப் பூமியில் ஊன்றி வைத்துவிட்டு, புல்தரைமீது சுனஸ்சகன் உட்கார்ந்தான்.

குளத்தில் இறங்கிய ரிஷிகள் தங்களுக்குத் தேவையான அளவு தாமரை மலர்களையும் கிழங்குகளையும் எடுத்துக் கொண்டு கரைக்குத் திரும்பினர். சிரமப்பட்டு, தாங்கள் பறித்து வந்த மலர்களையும் கிழங்குகளையும் கரையில் ஒரு குவியலாக வைத்துவிட்டு, மீண்டும் குளத்துக்குத் திரும்பி ஜலதர்ப்பணம் செய்தனர். பின்னர் அவர்கள் கரைக்கு வந்து பார்த்தபோது அவர்கள் வைத்துச் சென்ற மலர்களும் கிழங்குகளும் கரையில் இல்லை. பசியினுல் வாட்டமுற்று இருந்த அவர்கள், "பசியால் வாடும் எங்கள் ஆகாரத்தை எந்தப் பாவி கொண்டுபோனுனே!" என்று ஏங்கினர். எனவே அவர்கள் ஒருவரை ஒருவர் சந்தேகிக்கத் தலைப்பட்டனர்.

ஆகவே அவர்கள் ஒவ்வொருவரும் சந்தேகத்தை நிவர்த்தித்துக் கொள்ளும் பொருட்டு, அடியில் வரும் சபதத்தைச் செய்தனர்.

“பசுவைக் காலால் உதைத்தவன், சூரியனை நோக்கி மூத்திரம் பெய்தவன், ஓதக் கூடாத தினங்களில் மறைகளை ஓதியவன், எந்தக் கதியை அடைவானோ, அதே,கதி தாமரைக் கிழங்குகளைத் திருடியவனுக்கு ஏற்படட்டும்” என்று சபதம் செய்தார் அத்ரி முனிவர்.

“ஓதத்தகாத நாட்களில் மறைகளை ஓதுபவன், துறவியாய் இருந்தும் பெண்ணுறை கொண்டவன், அடைக்கலம் புகுந்த நண்பனைக் கொன்றவன், பெற்ற பெண்ணை அண்டிப் பிழைப்பவன், லோபியிடம் பணத்தை விரும்புபவன், எந்தக் கதியை அடைவானோ, அதே கதி தாமரைக் கிழங்குகளைத் திருடியவனுக்கு நேரட்டும்” என்று சபதம் செய்தார் வசிஷ்டர்.

“திருமாலை வணங்காமல் மற்றொரு தெய்வத்தை வணங்குபவனும், எல்லாரிடமும் எல்லாவற்றையும் பற்றிப் பேசுபவனும், அடைக்கலம் வைத்த பொருளை அபகரிக்கிறவனும், பொய்சாட்சி சொல்பவனும், வீணுகப் புலால் தின்பவனும், பயனற்ற தானம் செய்பவனும், பகலில் மாதரைப் புணர்பவனும் எந்தக் கதியை அடைவானோ அந்தக் கதி தாமரைக் கிழங்குகளை அபகரித்தவன் அடையட்டும்” என்று கூறினுர் கசியபர்.

“கொடியவன், அறத்தினின்று நழுவியவன், மாதருக்கும், தன் குலத்தோருக்கும், பசுக்களுக்கும் தீங்கு செய்பவன், ஆசிரியரைக் கீழே உட்காரச் செய்து ரிக், யசுர் வேதங்களை ஓதுபவன், அவிந்த நெருப்பில் ஓமம் செய்பவன், எந்தக் கதியை அடைவானோ, அந்தக் கதி தாமரைக் கிழங்குகளை எடுத்தவன் அடையட்டும்” என்று சபதம் செய்தார் பாரத்வாஜர்.

“நீர்நிலைகளில் மலம் கழிப்பவன், பசுவை அடித்துக் கொன்றவன், துரோகம் செய்பவன், ருதுகால மில்லாத போது மாதரைப் புணர்பவன், யாவரையும் பகைத்துக்

கொள்பவன், மனைவியைக் கொண்டு வாழ்பவன், நண்பர்கள் அற்றவன், பகைவர்களை விருத்தி செய்துகொண்டவன், தான் ஒருவனுக்குச் செய்த விருந்துக்காக, மற்றொருவன் வீட்டில் விருந்து உண்பவன் முதலியோர் எக்கதி அடைவரோ அந்தக் கதி, தாமரைக் கிழங்குகளைத் திருடியவன் அடையட்டும்'' என்று சபதம் செய்தார் ஜமதக்னி.

''ஓதின வேதங்களை விட்டுவிட்டவன், மூன்று அக்னிகளை விட்டுவிட்டவன், சோமத்தை விற்றவன், சகல சாதியர்களும் உபயோகிக்கும் ஒரே கிணற்றிலிருந்து தண்ணீர் எடுத்து, சூத்திர சாதிப் பெண்ணை மணந்து, கிராமத்தில் வாழும் அந்தணனுக்கு எந்தக் கதி நேருமோ, அதே கதி தாமரைக் கிழங்குகளைத் திருடியவனுக்கு நேரட்டும்'' என்று கூறினார் கௌதமர்.

''தான் உயிரோடுயிருந்தும். பெற்றோரையும் தன் வேலைக்காரர்களையும் பிறர் பாதுகாப்பில் விட்டவன், அதிகப் பிள்ளைகளைப் பெற்று ஏழையாய் வருந்துபவன், அசுத்தன், மறைகளை வஞ்சக நோக்கோடு படிப்பவன், அகந்தையுள்ளவன், சம்பளம் வாங்கிக்கொண்டு அரசனிடம் புரோகிதராய் இருப்பவன், செய்யத்தகாதவனுக்கு யாகம் செய்பவன் எக் கதியை அடைவானோ அதே கதியை, தாமரைக் கிழங்குகளைத் திருடியவன் அடையட்டும்'' என்று சொன்னார் விசுவாமித்திரர்.

''தன் மாமியாரை எப்பொழுதும் அவமதிப்பவள், கணவனை வெறுப்பவள், இனியவற்றைத் தனித்து உண்பவள், சக்தியற்ற பிள்ளைகளைப் பெற்றவள், எக்கதி அடைவாளோ அந்தக் கதி, தாமரைக் கிழங்கை எடுத்தவர் அடையட்டும்'' என்று கூறினாள் அருந்ததி.

எல்லாரும் இவ்வாறு கூறி முடித்த பின், சுனஸ்சகன் ''எவன் தாமரைக் கிழங்கைத் திருடினானோ, அவன் பிரம்மச்சாரி விரதத்தை நன்றாக நிறைவேற்றிய, சாமவேதம் நன்றாக ஓதிய, ஓர் அந்தணனுக்கு, தன் பெண்ணைக் கொடுத்தவன் அடையும் கதியை அடையட்டும்'' என்று சொன்னான்.

இதைக் கேட்டதும் ரிஷிகள், "ஏ சுனஸ்சகனே! நீ சொன்ன சபதம் பிராமணர்களுக்குப் பிரியமானது: ஆத லால் தாமரைக் கிழங்குகளைத் திருடியவன் நீ தான்" என்று கூறினர்.

அதற்குச் சுனஸ்சகன், "நீங்கள் சொன்னது உண்மை; தாமரைக் கிழங்குகளைத் திருடியவன் நான்தான்" என்று ஒப்புக்கொண்டான். "உங்களைச் சோதிக்க எண்ணிய நான் தாமரைக் கிழங்குகள் மறையும்படி செய்தேன். தவசீலர் களே! உங்களைக் காப்பாற்றும் பொருட்டு வந்தவன் நான்; விருஷாதர்ப்பி அனுப்பின யாதுதானி என்னும் இந்தப் பேயை நான் கொன்றேன். நான் இந்திரன். நீங்கள் அழி யாத உலகங்களை அடைவீர்கள்" என்று சொன்னான்.

அதன்படி இந்திரனுடன் ரிஷிகள் தேவலோகம் சென் றனர்.

"யுதிட்டிரா! பசியாய் இருந்தும் ஆசையை விட்டதனால் ரிஷிகள் நற்கதியை அடைந்தனர். அதேபோல ஆசையை விட்ட எவனும் நற்கதி அடைவான்" என்று சொல்லி முடித் தார் பீஷ்மர்.

## ஒழுக்கத்தின் மேன்மை

"பிதாமகரே! மனிதனுக்கு வயது நூறு என்று வேதம் கூறுகிறது. ஆயினும் சிறு வயதிலேயே மனிதர்கள் இறந்து போவதை நாம் பார்க்கிறோம். எதனால் மனிதன் நீடித்த ஆயுளுடன் வாழ்கிறான்? எதனால் மனிதன் சிறு பிராயத்திலே இறக்கிறான்? எதனால் மனிதனுக்குப் புகழ் கிட்டுகிறது? செல்வத்தோடும் செழிப்போடும் வாழ்வதற்கு மனிதன் என்ன செய்ய வேண்டும்? தவத்தினலா? பிரம்மச் சரிய விரதத்தினலா? ஒழுக்கத்தினலா? எதனால் முடியும் என்பதை எனக்கு விளக்கமாகக் கூறுங்கள்" என்று கேட்டார்

"நீ கேட்ட கேள்விகளுக்கு எல்லாம் நான் பதில் கூறு கிறேன். ஒழுக்கத்தினுலேதான் மனிதனுக்கு ஆயுளும் புகழும் செல்வமும் ஏற்படுகின்றன.

"ஒழுக்கம் தவறிய மனிதனுக்கு ஆயுள் குறைவு. அவனுக்குப் புகழும் கிட்டாது; பொருளும் கிட்டாது. ஜனங்கள் அவனைக் கண்டு பயப்படுவார்கள்.

"மேன்மையையும் முன்னேற்றத்தையும் அடைய விரும்புவோர் நேர்மையாக நடக்க வேண்டும். நேர்மையாக நடப்பவனிடம். அவனைப் பார்க்காவிட்டாலும், மக்கள் அன்பு பாராட்டுவார்கள்.

"அசுத்தனுய் இருப்பவன் நீடித்த ஆயுளுடன் வாழமாட்டான்.

"அதிகாலையில் படுக்கையைவிட்டு எழ வேண்டும். அறத்தையும் பொருளையும்பற்றிச் சிந்திக்க வேண்டும். வாயையும் முகத்தையும் கழுவிக்கொண்டு, கைகூப்பி, காலை வணக்கம் செய்ய வேண்டும்.

"உதய நேரம், அஸ்தமன நேரம், நண்பகல் நேரம், கிரகணம் பிடித்திருக்கும் சமயம் நீரில் தெரிகிற பிரதிபிம்பம் இந்தச் சமயங்களில் சூரியனை ஒருவன் பார்க்கக் கூடாது.

"பிறன் மனைவியைச் சேர்தல் கூடாது. அதனுல் ஒருவனுக்கு ஆயுள் குறைவு.

"அதிகாலையிலும் நன்ருக அஸ்மித்த பின்னும் நடுப்பகலிலும் அறியாதவர்களுடன் சேர்ந்து போதல் கூடாது. தனித்துப் போகவும் கூடாது.

"பிராமணன், பசு, கிழவன், கருப்பிணி, அரசன், சுமை தூக்கி வருபவன், மெலிந்தவன் இவர்களுக்கு வழிவிட வேண்டும்.

"அமாவாசை, பௌர்ணமி, சதுர்த்தசி, தான் பிறந்த தினம், அஷ்டமி, துவாதசி இந்தத் தினங்களில் பிரம்மச்சாரியாய் இருக்க வேண்டும்.

"புண்ணில் கோலிடுவதுபோல் ஒருவர் நோகும்படி பேசலாகாது. எந்தச் சொல்லினுல் அயலான் வருத்தப்படு

வானே அந்தச் சொல்லைச் சொல்லலாகாது. சொல்லம்புகளால் அடிபட்டவன் அல்லும் பகலும் அழுவான். வில்லினால் ஏவப்பட்ட அம்பு உடலில் தைத்தால் அதை எடுத்துவிடலாம்; சொல் அம்பை எடுக்க முடியாது. ஏனெனில், மனத்தினுள் தைத்திருப்பதை எடுப்பது சாத்தியம் அல்லவே!

"அங்கங்கள் ஏற்றக் குறைவாய் இருப்பவர்கள், கல்வி இல்லாதவர்கள், பிராயம் முதிர்ந்தவர்கள், அழகில்லாதவர்கள், பணமில்லாதவர்கள், சத்தியம் தவறியவர்கள் இவர்களை இகழ்தல் கூடாது.

"அறிமுகமில்லாத பெண்ணையும் கருப்பிணியையும் சேரலாகாது; தனக்கு மனைவியாக வரப்போகிறவளை, மணமாவதற்கு முன்னர் சேர்தல் கூடாது.

"ஈரக் காலுடன் சாப்பிட வேண்டும்; ஆனால் ஈரக் காலுடன் படுப்பது கூடாது.

"படுக்கும்போதும், வெளியில் செல்லும்போதும், பூசை செய்யும்போதும் வெவ்வேறு ஆடைகளை அணிந்துகொள்ள வேண்டும்.

"பந்தியில் உண்ணும்போது, பிறரைப்போல் தானும் உண்ண வேண்டும்.

"வயது முதிர்ந்தவன், உறவினன், நண்பன், கணவனில்லாத சகோதரி, ஆசிரியன், உயர்குலத்தோன், பண்டிதன் இவர்களை ஏழையாய் இருப்பின் தன்னால் கூடிய வரை காப்பாற்ற வேண்டும்.

"இரவில் அதிகம் சாப்பிடக் கூடாது. சஞ்சரிக்கலாகாது; சாப்பிட்டவுடன் புணர்ச்சி செய்தல் கூடாது. ஓடலாகாது, சாப்பிட்டவுடனேயே வேலைகளைச் செய்தல் கூடாது.

"பிறந்த தினம், அஷ்டமி, சதுர்தசி, அமாவாசை, பிறந்த நட்சத்திரம், பூரட்டாதி, கார்த்திகை, பிறந்த நட்சத்திரத்துக்கு ஐந்தாவது நட்சத்திரம் இவைகளில் எண்ணெய் தேய்த்துக் குளிக்கலாகாது.

"வீட்டுக்கு விலக்காய் இருக்கும் மனைவியைப் பார்க்கவும் கூடாது; பேசவும் கூடாது; நெருங்கவும் கூடாது.

நான்காம் நாள் அவள் நீராடிய பிறகு அவளுடன் சேரலாம். ஐந்தாவது நாள் சேர்ந்தால் பெண் குழந்தை பிறக்கும்' ஆறும் நாள் சேர்ந்தால் ஆண் குழந்தை பிறக்கும். பதினேரு தினங்கள்வரை சேர்ந்தால் குழந்தை பிறக்க வழியுண்டு என்று சொல்லி இருக்கிருர்கள்.

"ஒழுக்கத்திஞல்தான் ஒருவன் மேன்மையை அடைகிருன்; புகழை அடைகிருன்; செல்வத்தை அடைகிருன். தீர்க்காயுளே அடைகிருன். ஒழுக்கத்திஞல் அறம் வளருகிறது; அறத்திஞல் ஆயுள் வளருகிறது.

"நான் மேலே சொன்ன விஷயங்கள் அனைத்தும் பிரம்ம தேவர் சொன்னவை; இவற்றை நினைவிலிருத்திக்கொண்டு, கடைப்பிடித்து ஒழுகுபவன் மேலான நிலையை அடைவான்.';

## எது சிறந்தது?

"பிதாமகரே! ஞானம், தவம், தானம் இவற்றுள் எது சிறந்தது?" என்று பீஷ்மரிடம் யுதிட்டிரர் கேட்டார்.

அதற்குப் பீஷ்மர் அடியில் வரும் கதையைச் சொன்ஞர்:

"அரசே! இது சம்பந்தமாக வியாசரும் மைத்ரேயரும் முன்பு உரையாடி இருக்கிருர்கள். அதை உனக்குக் கூறுகிறேன், கேள்;

யாருக்கும் தெரியாமல் தான் காசியில் வசித்த சமயம், வியாச மகரிஷி ஒரு முறை மைத்ரேயரின் இல்லத்துக்குப் போஞர்.

வியாசர் மாறு வேடத்துடன் வந்திருப்பதை அறிந்த மைத்ரேயர், அவரை முறைப்படி வரவேற்று உபசரித்தார்; உயர்ந்த உணவைக் கொடுத்து உண்ணச் சொன்ஞர்.

வியாசர் திருப்தியாக அந்த உணவைச் சாப்பிட்டுவிட்டு எழுந்தார்; எழும்பொழுது நகைத்துக்கொண்டே எழுந்தார்.

அவர் நகைப்பதைக் கவனித்த மைத்ரேயர், "அறம் தெரிந்த அண்ணலே! நீர் நகைத்தற்குரிய காரணத்தைச் சொல்லும். நீர் மகிழ்ச்சியுடன் சிரிப்பதற்குக் காரணம்

என்ன? உணர்ச்சிகள் வெளிப்படாது தடுக்கும் ஆற்றலைப் பெற்றிருக்கும் நீர் மிகுந்த மகிழ்ச்சியுடன் சிரிப்பதற்குக் காரணம் என்ன? உம்மை நான் வணங்கிக் கேட்கிறேன். நீர் தவச் செல்வத்தைப் பெற்று இருக்கிறீர். என்னிடம் சுகவாழ்வுக்குப் போதிய வசதிகள் இருக்கின்றன. இந்த இரண்டும் சிறப்புடையதாயினும், இவற்றினிடையே நிலவும் வேறுபாடு என்ன?'' என்று கேட்டார்.

அதற்கு வியாசர், ''நீர் பொருளை மிகுதியாகச் செலவிட்டு, மிகுதியான இன்சொல்லைச் சொன்னீர். வேத வாக்கியம் பொய்ப்பதுபோலத் தோன்றியதால் நான் நகைத்தேன். வேதம் ஒருபோதும் பொய்ப்பது இல்லை. பிறருக்குத் துன்பம் செய்யாமை, சத்தியம் பேசுதல், கொடை இந்த மூன்றுமே மனிதனை மேன்மைப்படுத்தும் என்று வேதங்கள் கூறுகின்றன. இவற்றையே ரிஷிகள் முன்பு கடைப்பிடித்து ஒழுகி இருக்கின்றனர். அதன்படிதான் நான் இப்பொழுது நடக்கிறேன். தாகத்தால் வருந்துபவனுக்கு வெறுப்பில்லாமல் பருகத் தண்ணீர் கொடுத்தால், அது சிறிய கொடையேயாயினும், பெரும் பலனைத் தருகிறது. உமது செய்கையால் தேவர்கள் மகிழ்கின்றனர். எல்லாப் புண்ணியங்களிலும் கொடை மேலான புண்ணியம். ரிஷிகள் மறைகளில் உயர்த்திப் பேசி இருக்கும் கருமங்களில், கொடையே சிறந்த தானம். தானம் செய்பவர்கள் செல்லும் வழியில்தான் புத்திசாலிகள் செல்கின்றனர். உயிரைக் கொடுப்பவர்கள் என்றே கொடை வள்ளல்களைக் கூறலாம். அறம் என்பது அவர்களிடம்தான் வேரூன்றி இருக்கிறது. நன்றாக மறைகளை ஓதுவது, புலன் பொறிகளை அடக்கித் தவம் செய்வது, பற்றுகளை எல்லாம் அறுத்துத் துறவியாவது இம் மூன்றையும் போலவே தானம் செய்வதும் சிறந்தது. புத்திசாலியான மனிதன் சௌகரியத்திலிருந்தே மேலும் சௌகரியத்தை அடையலாம். கண்கூடாக நாம் பார்க்கும் உண்மை இது. பாக்கியசாலிகளுக்குப் பொருள் கிட்டுகிறது. அதனால் தானம் செய்து, வேள்வி செய்து, பிறகு அவர்கள் சுகத்தை அடைகின்றனர்.

"சுகத்திற்குப் பின் துக்கமும் துக்கத்துக்குப் பின் சுகமும் மாறி மாறி வருதல் இயல்பு. புண்ணியம், பாவம் இரண்டும் இல்லாத சமநிலை என மூன்று வகையாக, மாறுதலுக்கு விதித்த ஒழுக்கத்தைப் பெரியோர்கள் பிரித்து இருக்கின்றனர்.

"பிறருடைய நல்லொழுக்கத்தை யாரும் நினைப்பது இல்லை. அவன் செய்த பாபத்தை மட்டுமே நினைக்கின்றனர். யாகத்தையும் தானத்தையும் தவத்தையும் செய்யும் மனிதர்கள் புண்ணியம் செய்தோர் ஆவர். உயிர் இனங்களுக்குத் தீங்கு செய்யும் மனிதர் பாவம் செய்தோர் ஆவர். இந்த இரண்டுக்கும் உட்படாத செயல்கள் புண்ணியமு மன்று; பாவமும் அன்று. கருமித்தனம் இல்லாதவன் எப்பொழுதும் தன் இனத்தாருடன் கலந்து புசிப்பான். ஐயா! அந்தணரே! யாசிப்பவருக்குத் தாராளமாகக் கொடும்; அதிர்ஷ்டம் கெட்டால் செல்வம் அழியுமே யன்றி, அனுபவிப்பதனால் செல்வம் ஒருபோதும் அழிவது இல்லை. விளையாடும், விருத்தியடையும்; கொடும், கொடுப்பதில் ஆசையோடு இரும். இப்படி நீர் நடந்து வந்தால், ஞானிகளும் யோகிகளும் உமக்கு மேலாகார்" என்று சொன்னார் வியாசர்.

## மாதரின் நல்லொழுக்கம்

"பிதாமகரே! மாதரின் நல்லொழுக்கம் எத்தகையதாய் இருக்கும் என்பதைத் தெரிந்துகொள்ள ஆசைப்படுகிறேன். அதைப்பற்றி எனக்குக் கூற வேண்டும்" என்று கேட்டார் யுதிட்டிரர்.

"யுதிட்டிரா! கேகய நாட்டு அரசன் புதல்வி சுமனை என்பவள், ஒரு முறை தேவலோகத்தில் சாண்டிலி என்பவளைச் சந்தித்து, இதுபற்றி உரையாடி இருக்கிறாள். அதை உனக்குக் கூறுகிறேன் கேள்:

சுமனை, சாண்டிலியை நோக்கி, "சிறந்த பெண்மணே! எத் தகைய ஒழுக்கத்தினாலும் சீலத்தினாலும் பாவங்களை எல்லாம் போக்கி நீ தேவலோகத்துக்கு வந்தாய்? உன் மேனி தீப் பிழம்புபோல் பிரகாசிக்கிறது; ஆனால் சந்திரன் பெற்ற பெண்போல, இளமையோடு தேவலோகத்துக்கு நீ வந்திருக் கிறாய். எளிய தவம், தானம், நோன்பு இவற்றால் இந்தப் பேற்றை நீ அடைந்திருக்க முடியாது என்பது திண்ணம். எப்படி நீ வந்தாய்? உண்மையை நீ உரைக்க வேண்டும்" என்று கேட்டாள்.

சாண்டிலி பதில் சொன்னாள்· "காவி உடை உடுத்த தனாலும், மரவுரிகளைத் தரித்ததனாலும், மொட்டை யடித்துக் கொண்டதனாலும், சடை வளர்த்துக்கொண்டதனாலும் நான் தேவத்தன்மையை அடையவில்லை.

"என் கணவருக்கு வேண்டாத கடுஞ் சொற்களைக் கவனக்குறைவாக நான் ஒருபோதும் கூறியது இல்லை.

"என் மாமனார் மாமியார் முதலியோருக்கு நான் அடங்கி நடந்தேன்.

"கோட் சொல்லிக்கொண்டு நான் திரிவது இல்லை நிற்கத் தகாத இடங்களில் நான் நிற்பது இல்லை. யாரோடும் நெடு நேரம் நான் பேசிக்கொண்டு இருந்தது இல்லை.

"கணவருக்கு ஊறு நேரும் காரியங்களை நான் செய்தது இல்லை; அவர் சொன்ன இரகசியங்களை யாரிடமும் நான் வெளிட்டது இல்லை.

"வேலையாக வெளியில் போன கணவர் வீட்டுக்குத் திரும்பியதும், அவருக்கு ஆசனம் எடுத்துப் போட்டு உப சரிப்பேன்; மிகுந்த மரியாதை செய்து போற்றுவேன்.

"என் கணவர் விரும்பாத உணவு வகைகளை, அவர் ருசி பார்க்காத உணவு வகைகளை, நான் ஒருபோதும் உண் டது இல்லை.

"அதிகாலையில் எழுந்து, குடும்ப வேலைகள் அனைத்தையும் பொறுப்போடு கவனிப்பேன்.

"என் கணவர் ஒரு காரியத்தை முன்னிட்டு ஊரை விட்டுப் போவாராயின், அவர் வெற்றியோடு திரும்ப வேண்டும் என்று தேவதைகளை வழிபட்டு ஆராதிப்பேன்.

"என் கணவர் அயலூர் சென்றிருக்கும் காலத்தில் ஆபரணங்களை அணிந்துகொள்ளேன்; கண்களுக்கு மையிட்டுக் கொள்ளேன்; நறுமணப் பொருள்களை உபயோகியேன்; பூச் சூடிக்கொள்ளேன்.

"முக்கியமான காரியமாய் இருப்பினும் அயர்ந்து தூங்கும் கணவரை ஒருபோதும் நான் எழுப்பியது இல்லை.

"உற்றார் உறவினரையும் குடும்பத்தையும காப்பாற்றுவதற்காகப் பொருளைத் தேடுங்கள் என்று என் கணவருக்கு நான் ஒருபோதும் தொந்திரவு கொடுத்தது கிடையாது.

"வீடுவாசல்களைச் செத்தை குப்பையின்றிச் சுத்தமாக வைத்திருப்பேன்.

"இத்தகைய சீலங்களைக் கடைப்பிடித்து ஒழுகும் பெண், இரண்டாவது அருந்ததிபோல, சொர்க்கலோகத்தில் சிறப்புற்று விளங்குவாள். இதில் சந்தேகம் இல்லை" என்று கூறி முடித்தாள் சாண்டிலி.

## இன்சொல்

"பிதாமகரே! இன்சொல், கொடை இந்த இரண்டில் எது சிறந்தது? அதைப்பற்றி எனக்குக் கூற வேண்டும்" என்று கேட்டார் யுதிட்டிரர்.

"யுதிட்டிரா! சிலர் இன்சொலால் மகிழ்ச்சி அடைகின்றனர். சிலர் கொடையால் மகிழ்ச்சி அடைகின்றனர். மனிதனின் இயற்கைப் போக்கை அறிந்து, இவற்றில் எதையாவது ஒன்றைக் கடைப்பிடிக்க வேண்டும்.

"முதலில் இன்சொல்லைப்பற்றிக் கூறுகிறேன். இன் சொல்லால் கொடிய பிராணிகளையும் வசப்படுத்திவிடலாம். இதைப் பற்றிய பழங் கதை ஒன்றை உனக்குக் கூறுகிறேன் கேள்.

"கல்வி கேள்விகளில் சிறந்த புத்திசாலியான பிராமணன் ஒருவன் இருந்தான். வாக்குவன்மையும் புத்திசாதுரியமும் உள்ள இவனைத் தனித்துச் செல்லும்போது காட்டில் இருந்த அரக்கன் ஒருவன் பிடித்துக்கொண்டான். தன்னை அந்த அரக்கன் தின்னப் போகிறான் என்பதை அறிந்தும் அந்தப் பிராமணன் பதறவும் இல்லை; பயப்படவும் இல்லை. இன் சொல்லால் அரக்கனுடன் பேசினான்.

அதனால் மகிழ்ச்சி அடைந்த அரக்கன், அந்தணனை நோக்கி, "நான் இளைத்தும் வெளுத்தும் இருப்பதற்குரிய காரணம் உனக்குத் தெரியுமா? தெரிந்தால் சொல்! உனக்கு விடுதலை அளிக்கிறேன்" என்று கூறினான்.

அந்தணன் சிறிது நேரம் யோசித்தான். அவசரப்படாமலும் பயப்படாமலும் அரக்கனுக்கு மறுமொழி கூறினான்.

"உன் அன்பர்களை விட்டுப் பிரிந்து, வேறு நாட்டிலும் வேறு ஜனங்களுடனும் நீ வசிக்கிறாய்; அதனால் ஒப்பற்ற சுக போகங்களை அனுபவிக்க வாய்ப்பு இருந்தும், அனுபவித்தும் கூட, நீ இளைத்துப்போய் இருக்கிறாய்.

"நீ நன்றாக ஆதரித்துக் காப்பாற்றிய நண்பர்கள் நீ செய்த பிழையினால் உன்னை விட்டு விட்டார்களோ என்னவோ?

"பிழைக்க வழிகள் இருந்தும், பெரிய இலாபத்துக்கு ஆசைப்பட்டு, நீ இளைத்து போய்விட்டாய் போலும்."

"செல்வமும் அதிகாரமும் மிகுந்தவர்கள் ஆனால் குணத்தினால் உன்னைவிடத் தாழ்ந்தவர்கள் உன்னை அவமதித்து இருக்க வேண்டும். அதனால்தான் நீ வெளுத்தும் இளைத்தும் இருக்கிறாய்.

"புத்தியும் குணமும் நிறைந்த உன்னை ஆதரிக்காமல், அவற்றில் தாழ்ந்திருப்பவர்களைப் பிறர் ஆதரிப்பதைக் கண்டு நீ மனம்புழுங்கி இருக்க வேண்டும். அதனுல் இளைத்தும் வெளுத்தும் இருக்கிருய்.

"நண்பனைப்போல நடிக்கும் பகைவன் ஒருவன் யோக்கியன்போல நடத்து, உன்னை ஏமாற்றி இருக்க வேண்டும். அதனுல்தான் நீ இளைத்தும் வெளுத்தும் காணப்படுகிருய்.

"சபையிலே நீ சொன்ன உயர்ந்த சொல், ஒரு காலத்தில் எடுபடாமல் இருந்திருக்க வேண்டும். அதனுல்தான் நீ இளைத்தும் வெளுத்தும் இருக்கிருய்.

"உன் மனத்துக்கு இனிய நண்பர்கள் கோபத்துடன் இருப்பதை உன்னுல் சமாதானம் செய்ய முடியாமல் இருந்திருக்கும். அது காரணமாகத்தான் நீ இளைத்தும் வெளுத்தும் இருக்கிருய்.

"காணுவிடத்து உன்மீது யாரும் பொய்ப் பழியைச் சுமத்தி இருக்கக் கூடும். அதன் காரணமாக, உனக்குள்ள மதிப்புக் குறைந்துபோய் இருக்கலாம். நீ இளைத்தும் வெளுத்தும் இருப்பதற்கு இது காரணமாய் இருக்கலாம்.

"நல்ல குணத்துடன் பிறரை ஆதரிக்கும் உன்னை வஞ்சகன் என்று மற்றவர்கள் நினைத்து இருக்க வேண்டும். அதனுல் தான் நீ வெளுத்தும் இளைத்தும் இருக்கிருய்.

"உன் அண்டைவீட்டுக்காரன் உன்னைக் காட்டிலும் நல்ல நிலையில் இருந்திருக்க வேண்டும். நீ வெளுத்தும் இளைத்தும் இருப்பதற்கு அது ஒரு காரணமாய் இருக்கலாம்.

"உன் பிள்ளை அடங்காமல் கெட்டவனுய் இருக்க வேண்டும். உன் மாப்பிள்ளை வீட்டிலே சாப்பிட்டுக் கொண்டு இருப்பான்; உன் மனைவி கட்டுப்பட்டு நடவாதவளாய் இருப்பாள்; இவற்றினுல் மனம் நொந்து நீ இளைத்தும் வெளுத்தும் போய் இருக்க வேண்டும்.

"வெகு நாட்களாக எதிர்பார்த்த பலன் உனக்குக் கிட்டாமல் இருந்திருக்க வேண்டும். அதைப் பிறர் அபகரித்துப் பயனை அனுபவித்து இருக்க வேண்டும். அதனால் நீ இளைத்தும் வெளுத்தும் இருக்கிறாய்.

"மனமார ஒரு குற்றத்தையும் செய்யாதவனாய் இருந்தும், பிறர் வீணே உன்மீது பழியைச் சுமத்தி இருக்க வேண்டும். அதன் காரணமாக, நீ இளைத்துப் போய் இருக்கலாம்

"புத்திசாலியான நீ மூடர்களை அடுத்து வாழ வேண்டியது நேர்ந்திருக்கும். அதனால் நீ வெளுத்தும் இளைத்தும் போய் இருக்கிறாய்.

"பாவிகள் கை ஓங்குவதையும் நல்லவர்கள் நலிந்து வாடுவதையும் நீர் பார்த்திருக்க வேண்டும். அதனால்தான் நீ இளைத்தும் வெளுத்தும் இருக்கிறாய்."

"இவ்வாறு அந்த அரக்கனைப் பாராட்டி அந்தணன் சொன்னபடியால், அரக்கன் அக மகிழ்ந்தான். அந்தணனை ஒன்றும் செய்யாது, விட்டுவிட்டான். அவனைக் கௌரவித்து வீட்டுக்கு அனுப்பினான்.

## எது சிறந்த பிரமாணம்?

யுதிட்டிரர் பீஷ்மரை நோக்கி, "பிதாமகரே! தருமத்தை நிச்சயிப்பதற்குப் பிரத்தியட்சத்தைப் பிரமாணமாகக் கொள்வது சிறந்ததா? அல்லது சாஸ்திரங்களைப் பிரமாணமாகக் கொள்வது சிறந்ததா? இரண்டில் எது சிறந்தது?" என்று கேட்டார்.

"புத்திமானே! நீ கேட்டது சரியான கேள்விதான். இது பற்றி யாருக்கும் எளிதில் சந்தேகம் உண்டாகலாம்; ஆயினும் இதுபற்றி ஒரு முடிவுக்கு வருவது கடினம். பார்ப்பதும் கேட்பதும் முடிவு இல்லாமல் இருக்கிறது. ஐயம் ஏற்படக் காரணம் அதுதான். தங்களைப் பண்டிதர்களாகக் கருதிக்

கொண்டிருப்பவர் சிலர், பிரத்தியட்சமாகக் காண்பதை மட்டும் உண்மை என்று கருதுகின்றனர். மற்றதை அவர்கள் உண்மை என்று நம்புவது இல்லை. இது அறிவீனம்.

"ஆயினும் இது பிரமாணமாகுமா என்று ஆராய்ந்து பார்ப்பது அவசியம்தான். உலக வாழ்க்கை நடத்தும் மனி தன் நீண்ட கால அனுபவத்தை, யுக்திகளாலும் சாத்திர விசாரணையாலும் பிரமாணமாக நிச்சயிக்க வேண்டும். தொடர்ந்து முயன்றாலன்றி, ஒரு பிரமாணத்தை உறுதியாக நிச்சயிக்க முடியாது. யுக்தி வாதங்களை நிறுத்திய பிறகு தான், உலகத்தின் ஒளியாய் இருக்கும் சிறந்த அறிவை, ஒரு வன் தங்கு தடையின்றிக் காணலாம். யுக்திகளைக் கொண்டு அறிவது, சரியான அறிவன்று" என்று கூறினார் பீஷ்மர்.

"பிதாமகரே! பிரத்தியட்சம், அநுமானம், வேதங்கள், அனுபவம் இந்த நான்கில் எதைக்கொண்டு ஒன்றை நிர்ண யிப்பது பொருந்தும்?" என்று கேட்டார் யுதிட்டிரர்.

"யுதிட்டிரா! தீயவர்கள் வலியவர்களாய் இருந்து தரு மத்தைக் கெடுக்கும்போது, நல்லோரால் சிறிது காலம் மட்டுமே தருமத்தைக் காப்பாற்ற முடியும். நீடித்த காலம் காப்பாற்றுவது எளிதன்று; வலிமை சாடித் தாக்கி, நாளடை வில் தருமத்தைக் கெடுத்துவிடும். கிணற்றைப் புல் மூடி இருப் பதுபோல, தருமத்தை அதருமம் மூடி மறைக்கிறது. அதனால் தான் சிலருடைய ஆசாரங்கள் வேறுபட்டுப் போகின்றன. அறிவீனர் சிலர் பிழைப்பில்லாமையால், தர்மத்தையே வெறுக்கின்றனர். இகழ்ந்து பேசவும் துணிகின்றனர். அத் தகையோருக்குத்தான் ஐயங்கள் ஏற்படுவது உண்டு. சாத் திரப் பிரமாணத்தை நம்புகிற, அது சிறந்தது என்று மதித்து ஒழுகுகிற சான்றோரை அடுத்து, உனது ஐயங்களைப் போக்கிக் கொள். விருப்பு வெறுப்பு இன்றி, தருமம் ஒன்றிலேயே நாட்ட முடைய சான்றோரை அடுத்துக் கேள். அவர்கள் ஆசாரம் தப்பி ஒழுக மாட்டார்கள். யாகம், வேதம் ஓதல், ஆசாரம் மூன்றும் ஒரே தருமம்தான்" என்று சொன்னார் பீஷ்மர்.

அதற்கு யுதிட்டிரர், "பிதாமகரே! கரைகாண முடியாத ஐயத்தில் சிக்கி என் மனம் தத்தளிக்கிறது. வேதம், பிரத்தியட்சம், ஆசாரம் ஆகிய மூன்றையும் பிரமாணமாய் எடுத்துக்கொண்டால், மூன்றும் வெவ்வேறாய் இருக்கக் காரணம் என்ன? மூன்றும் தருமங்கள் ஆவது எப்படி?" என்று கேட்டார்.

"அரசே! தீயோர், தருமத்தை வலிந்து கெடுப்பதனால், மூன்றையும் பிரமாணங்களாகக் கொள்ள முடியாத சந்தேக நிலை ஏற்படுகிறது. தருமம் ஒன்றுதான்; அதை அறியும் வகைதான் மூன்று. அந்த மூன்றுக்குமிடையில் முரண்பாடு இருப்பதாக நான் கருதவில்லை. தர்க்கங்களின் மூலம் தருமத்தை நிச்சயிக்க முடியாது. கொல்லாமை, சத்தியம், பொறுமை, கொடை இந்த நான்கையும் கண்களை மூடிக் கொண்டு நீ கடைப்பிடிப்பாயாக! இவை நான்கும் அழியாத தருமங்கள் ஆம். உனது மூதாதையர் சென்ற வழியில நீயும் செல். தருமத்தின் வழியைக் காட்டுகிறவர்கள அவர்கள் தான். அறிவில்லாத ஒருவன் பிரமாணம் அல்லாத ஒன்றைப் பிரமாணமாகக் காட்டுவானாயின், அவனை நம்பாதே. அவனால் துயரம்தான் ஏற்படும்" என்று சொன்னார் பீஷ்மர்.

## நல்லோர்—தீயோர் நடத்தைகள்

"பிதாமகரே! தீயவன் போக்கு எப்படி இருக்கும்? நல்லோரின் நடத்தை எப்படி இருக்கும்? இதைத் தாங்கள் விளக்கிச் சொல்ல வேண்டும்" என்று கேட்டார் யுதிட்டிரர்.

"அரசனே! தீயோராய் இருப்போரின் சொல்லும் செயலும் கொடியனவாய் இருக்கும். அவர்களிடம் கட்டுப்பாடு என்பதே இருக்க மாட்டாது; அவர்களை அடக்கி ஒடுக்கிக் கட்டுப்படுத்துவதும் கடினமாய் இருக்கும்.

"நல்லவர்களின் நடத்தை எப்படி இருக்கும் என்பதைக் கூறுகிறேன் கேள்:

"முக்கிய சாலைகளிலும், பசுக்களுக்கு நடுவிலும், நெல் வயல்களுக்கு மத்தியிலும் நல்லவர்கள் மலஜலம் கழியார்.

"சாப்பிடும்போது பேச மாட்டார்கள்; ஈரக் கையோடு தூங்க மாட்டார்கள்.

"முதியோர், சுமைதூக்கி வருவோர், பெண்கள், பிணியாளர், சிறுவர், அந்தணர், பசுக்கள், அரசர் ஆகியோருக்கு வழிவிடுவர்.

"விருந்தினர், வேலைக்காரர், சுற்றத்தார் எல்லோருக்கும் ஒரே உணவை அளிக்க வேண்டும். தான் மட்டும் தனித்து, சிறந்த உணவை உண்ணலாகாது.

"சொற் சுத்தம், மனச் சுத்தம் இரண்டுக்கும் நிகரான நல்லொழுக்கம் வேறு இல்லை.

"அண்டி, அடைக்கலம் வேண்டுவோருக்கு அபயம் அளித்து அவர்களைக் காப்பாற்ற வேண்டும்.

"காலை, மாலை இரு வேளைகள் மட்டும் மனிதன் உணவு உண்ண வேண்டும்; இடையில் உணவு அருந்தக் கூடாது. இப்படி உணவு உட்கொள்வது உபவாசம் இருப்பதற்குச் சமம்.

"குழந்தையை உத்தேசித்து, மாதருடன் ருதுக் காலத்தில் சேர வேண்டும்; ருதுக் கால மல்லாத சமயத்தில் பெண்களைச் சேர்தல் கூடாது.

"அந்நிய நாட்டில் வசித்தாலும் சரி, சொந்த நாட்டில் வசித்தாலும் சரி, விருந்தினரை உபசரியாமல் இருத்தல் கூடாது.

"வயது முதிர்ந்தவர்களை அவமதிக்கக் கூடாது; வேலைகளில் ஏவுதலும் கூடாது; வயது முதிர்ந்தவர்கள் நிற்கும் போது, தான் உட்கார்ந்திருத்தல் கூடாது.

• "ஆடையில்லாத ஆடவர் பெண்டிரைப் பார்த்தல் கூடாது.

"கல்வி செய்வதை இரகசியமாகச் செய்ய வேண்டும்.

"மனச்சுத்தமே சுத்தங்கள் அனைத்திலும் சிறந்தது; ஞானக் கண்ணே, கண் எனத் தகும்; திருப்தியே பெரிய சுகம்.

"காலை மாலை இரு வேளைகளிலும் சான்றோரை அடுத்து அவர்கள் செய்யும் உபதேசத்தைக் கேட்க வேண்டும். பெரியோரை அடுத்துப் பழகுவது, கல்வி கற்பதற்கு ஒப்பாகும்.

"புலன்கள் அடக்கம், மன அடக்கம் இரண்டையும் எப்பொழுதும் பயின்று வர வேண்டும்.

"ஆபத்து நேர்ந்தபோதிலும் பெரியோரை மரியாதைக் குறைவாக நீ ஒன்றும் சொல்லக் கூடாது,

"பண்டிதர்களை மரியாதைக் குறைவாகப் பேசினால், தம்மைக் கொலை செய்வதற்கு ஒப்பாக அவர்கள் நினைத்து வருந்துவார்கள்.

"பாவியின் உள்ளம் எப்பொழுதும் பாபநாட்ட முடையதாய் இருக்கும். தெரிந்து செய்த காரியத்தையும் தீயோர் மறைத்துவிடுவர். 'நான் செய்த பாவத்தை யாரும் பார்க்கவில்லை' என்ற ஒரு முரட்டுத் துணிச்சல் அவர்களுக்கு இருக்கும். அதனால் பெரிய சபைகளிலும் தாங்கள் செய்த பாவத்தை மறைத்துச் சொல்லி அவர்கள் கெட்டுப் போகின்றனர்.

"பாவ எண்ணத்தினால் மறைக்கப்பட்ட பாவம், மேலும் பாவங்கள் வளர வழிகோலும்.

"பாவத்தைச் செய்த பின், அதைச் சான்றோரிடம் சொன்னால் அதற்கு நிவர்த்தி உண்டு.

"ஆசையினால் ஈட்டப்பட்ட பொருளை, தான் அனுபவியாவிட்டாலும், அதை மற்றவர்கள் அவசியம் அவன் இறந்த பின் அனுபவிப்பார்; ஆகையால், பொருள் தருமத்துக்குச் சாதனம் என்று கருதி அதை எப்போதும் முயற்சியுடன் தேட வேண்டும்.

"தருமமே மேன்மைக்குக் காரணம் என்பதைச் சகல ஜீவன்களும் அறிந்திருக்கின்றன.

"தருமத்தைத் தானே செய்ய வேண்டும். அதைப்பற்றிப் பகட்டும் படாடோபமும் செய்யக்கூடாது. அப்படிச் செய்தால் அது தரும வியாபாரம் ஆகிவிடும்."

## விடை கொடுத்தல்

பீஷ்மர் சொல்லி ஓய்ந்த பிறகு, அங்கே கூடியிருந்த அரசர்களும் மற்றவர்களும், சித்திரப் பாவைபோலச் சிறிது நேரம் அசைவற்று இருந்தனர்.

பிறகு வியாசர், சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்தார்; பின்னர் அம்புப் படுக்கையில் படுத்திருக்கும் பீஷ்மரை நோக்கி, "அண்ணலே! கௌரவர்களுக்கு அரசனான யுதிட்டிரன் தைரியம் பெற்றான். அரசர்களோடும் தம்பியரோடும் சிறந்த ஞானமுள்ள கிருஷ்ணரோடும் அவர்கள் உம்மைச் சுற்றி உட்கார்ந்து இருக்கின்றனர். நகரம் திரும்ப இவர்களுக்கு நீர் விடை கொடுக்க வேண்டும்" என்று சொன்னார்.

வியாசர் இப்படிச் சொன்னதும், பீஷ்மர் யுதிட்டிரனை நோக்கி, "அரசே! நீ நகரம் திரும்பு. மனத்தில் எப்பொழுதும் தரும நாட்டம் இருக்கட்டும். பல வகையான வேள்விகளைச் செய்; யயாதி மன்னரைப்போல, அரசரின் கடமைகளை ஊக்கம் குன்றாது செய்து வா. மனக்கவலையை விட்டொழி; மகிழ்ச்சியுடன் குடிமக்கள் வாழ வசதி செய்து கொடு அமைச்சர் முதலான அரச அங்கங்களைச் சீர்செய்து வைத்துக் கொள். அவரவர் தகுதிக்கு ஏற்ப உதவி செய்து நண்பர்களைக் காப்பாற்று. பழங்கள் கொடுக்கும் மரத்தை அடுத்துப் பறவைகள் மகிழ்ச்சியுடன் வாழ்வதைப் போல், நண்பர்கள் உன்னை அடுத்து வாழட்டும். சூரியன் உத்தராயணத்துக்கு வந்ததும், நான் குறிப்பிடும்போது நீ வந்து மீண்டும் என்னைச் சந்திக்கலாம்" என்று இனிமை ததும்பச் சொன்னார்.

"அவ்வாறே செய்கிறேன்" என்று சொல்லி, பீஷ்மரை யுதிட்டிரர் வணங்கினார். பிறகு அவரிடம் விடைபெற்றுக் கொண்டு, அத்தினாபுரம் போய்ச் சேர்ந்தார்.

திருதராட்டிரன், காந்தாரி, ரிஷிகள், தம்பியர், கண்ணன் முதலியவர்களும் தருமருடன் சேர்ந்து, அத்தினாபுரியை அடைந்தார்கள்.

# பீஷ்மரின் பிரிவு

அத்தினபுரத்தை அடைந்த பின், அவரவர் தகுதிக்கு ஏற்ப மரியாதை செய்து, அவரவர் இல்லத்துக்குத் திரும்பும் படி யுதிட்டிரர் விடை கொடுத்தார். போரில், கணவனையும் புதல்வரையும் இழந்தோருக்கு நிறையப் பணம் கொடுத்து, தக்க ஆறுதல் சொன்னார்.

ஐம்பது தினங்கள் அத்தினபுரத்தில் தங்கி இருந்தார். பிறகு பீஷ்மர் குறிப்பிட்ட உத்தராயணம் வந்தது. எனவே புரோகிதர்களை அழைத்துக்கொண்டு அத்தினபுரத்திலிருந்து புறப்பட்டார்.

பீஷ்மரைச் சிறந்த முறையில் அடக்கம் செய்வதற்கான பொருள்கள், நெய், பூமாலை, நறுமணப் பொருள்கள், பட்டு, சந்தனக் கட்டைகள், கறுப்பு அகில் கட்டை, வெள்ளை அகில் கட்டை இவற்றை எல்லாம் முன்னதாக அனுப்பினார். பூமாலைகள், விலையுயர்ந்த இரத்தினங்கள், ஆகியவற்றை உடன் எடுத்துக்கொண்டு, திருதராட்டிரன், காந்தாரி, குந்தி, தம்பியர் முதலியோர் முன்னே செல்ல, கிருஷ்ணன், விதுரர், யுயுத்சு, யுயுதானன் முதலியோர் பின்னே வர, யுதிட்டிரர் குருசேட்திரத்தை நாடிப் புறப்பட்டார்.

வியாசர், நாரதர், தேவலர், அசிதர், காயம்படாத அரசர்கள் முதலியோர் புடை சூழ்ந்திருக்க, பீஷ்மர் அம்புப் படுக்கையில் படுத்திருந்தார்.

சிறிது தூரத்திலேயே தருமபுத்திரர் தேரிலிருந்து இறங்கிக்கொண்டார்: மற்றவர்களும் இறங்கிக்கொண்டார்கள்.

பிறகு அருகே சென்று ரிஷிகளையும் பீஷ்மரையும் யுதிட்டிரர் முறைப்படி வணங்கினார். "கங்கையின் புதல்வரே! நான் யுதிட்டிரன். உம்மை வணங்குகிறேன். நான் சொல்வது உமது செவியில் விழுகிறதா? நான் செய்ய வேண்டுவதைக் கட்டளையிடுங்கள். தாங்கள் குறிப்பிட்ட காலம் வந்ததும் நெருப்பை எடுத்துக்கொண்டு வந்திருக்கிறேன்.

ஆசாரியர்கள். அந்தணர்கள், ரித்விக்குகள், என் சகோதரர்கள் முதலியோர் வந்திருக்கிறார்கள். உம் புதல்வர் திருதராட்டிர மன்னர், தம் புதல்வர்களுடன் வந்திருக்கிறார். சிறந்த மகிமையுள்ள கண்ணபிரானும் வந்திருக்கிறார். போரில் அடிபடாமல் மிகுந்துள்ள அரசர்களும் குருஜாங்க நாட்டினரும் உம்மைத் தரிசிக்க வந்திருக்கிறார்கள். கண்களைத் திறந்து, அவர்களைப் பாரும். நான் செய்ய வேண்டிய காரியத்துக்குத் தேவையான பொருள்களை எல்லாம் இங்கே கொணர்ந்திருக்கிறேன். நீர் குறிப்பிட்ட காலத்திலேயே அனைத்தையும் செய்திருக்கிறோம்'' என்று சொன்னார்.

இப்படி யுதிட்டிரர் சொன்னதும், தம்மைச் சுற்றி நிற்கும் பரத வம்சத்தார் அனைவரையும் பீஷ்மர் பார்த்தார். வாக்குவன்மையுள்ள பீஷ்மர் திரும்பிப் படுத்து, தமது பெரிய கைகளைத் தூக்கி, நீருண்ட மேகம்போல் உரத்த தொனியில் பேசத் தொடங்கினார்.

"குந்தி மைந்தனே! மந்திரி முதலானவர்களோடு நீ வந்து சேர்ந்தது குறித்து மிக்க மகிழ்ச்சி. ஆயிரம் கிரணங்களைக்கொண்ட சூரிய பகவான் உத்தராயணத்துக்கு வந்துவிட்டார். நான் அம்புப் படுக்கையில் படுத்து, இன்றோடு ஐம்பத்தெட்டு நாட்கள் ஆகின்றன. ஆயினும் கூரிய அம்பு முனைகள்மீது படுத்திருப்பதால், இவை எனக்கு நூறு வருடங்கள் போல் தோன்றுகின்றன. புண்ணியமான மாக மாசம் இப்பொழுது வந்திருக்கிறது'' என்று சொன்னார்.

இதன் பின்னர், திருதராட்டிரனோடு பீஷ்மர் பேசினார். "அரசே! நீ தருமங்கள் தெரிந்தவன். அரசியல் அலுவல்களை ஐயமின்றித் தெரிந்தவன்; மறைகளையும் அவற்றின் அங்கங்களையும் நன்கு கற்றவன்; நடக்க வேண்டியது நடந்திருக்கிறது. அதற்காக நீ கவலைப்படாதே. பாண்டுவுக்கு பாண்டவர்கள் எப்படிப் புதல்வர்களோ அப்படியே உனக்கும் புதல்வர்கள். பெரியோருக்குப் பணிவிடை செய்வதில் விருப்பமுள்ள அவர்களை, அறநீதி வழுவாமல் அன்போடு காப்பாற்று. யுதிட்டிரன் தருமசீலன்; நீ இடும் கட்டளைப்படி தவறாது நடப்பான். அவன் பிறருக்குத் தீங்கு செய்யா

மையை முதன்மையாகக் கொண்டவன்; பெரியோர்பால் பக்தியும் விசுவாசமும் உள்ளவன் என்பதை நான் அறிவேன். உன் பிள்ளைகள் கெட்ட மனமுள்ளவர்கள்; கோபமும் பொருளாசையும் உள்ளவர்கள்; பொறாமையில் சிக்குண்டு தவித்தவர்கள். ஒழுக்கம் கெட்டவர்கள். அவர்களை நினைந்து நீ வருந்தக் கூடாது'' என்று சொன்னார்.

அதன் பின்னர், கிருஷ்ணனை நோக்கி அவரோடு பேசினார். ''பகவானே! தேவர்களாலும் அசுரர்களாலும் வணங்கப் படுபவரே! உம்மை நான் வணங்குகிறேன். திருமாலான நீர் மானிடராக அவதரித்திருக்கிறீர். நீரே கதி என்று கருதி உம்பால் பக்திபூண்டுள்ள என்னை நீர் காப்பாற்றும். எனக்கு இப்பொழுது விடைகொடும். உம்மையே தஞ்சம் என்று நம்பியிருக்கும் பாண்டவர்களைக் காப்பாற்றுவது உம் கடமை. 'வாசுதேவர் எங்கு இருக்கிறாரோ, அங்குத்தான் தருமமும் வெற்றியும் ஏற்படும்' என்று பல முறை நான் துரியோதனனிடம் சொன்னேன். புத்தியில்லாத அந்த மூடன் நான் சொன்னதைச் செய்யவில்லை. பூமியை இழந்து, தானும் அழிந்தான். நீர் திருமால் என்பதை நான் நன்கு அறிவேன். அடியேனுக்கு விடைகொடும், உம் அருளால் நான் நற்கதியை அடைய வேண்டும்'' என்று சொன்னார்.

அதற்கு அவர், ''பீஷ்மரே! உமக்கு நான் அனுமதி தந்தேன். நீர் வசுக்களுடன் சேர்ந்துகொள்ளும். இரண்டாவது மார்க்கண்டர் போல நீர் தந்தையிடம் பக்தி வைத்திருந்தபடியால் யமன் உம் ஊழியன் ஆகிவிட்டான்'' என்று சொன்னார்.

கிருஷ்ணன் இவ்வாறு அனுமதி கொடுத்ததும், பீஷ்மர் பாண்டவர்களையும் திருதராட்டிரன் முதலானவர்களையும் நோக்கினார். ''நான் உயிரைவிடப் போகிறேன்: அதற்கு நீங்கள் அனுமதி கொடுங்கள். நீங்கள் சத்தியத்தையே நாடுங்கள்; சத்தியம்தான் சிறந்த பலம். எப்பொழுதும் மனத்தை அடக்கிக் கட்டுப்படுத்த வேண்டும். பிறர்பால்

கருணை காட்ட வேண்டும். தருமத்தையும் தவத்தையும் ஒரு போதும் விடலாகாது. சான்றோரை நேசிக்க வேண்டும்'' என்று சொன்னார்.

செய்ய வேண்டிய தான தருமங்களைப் பீஷ்மர் செய்தார்.

பிறகு பீஷ்மர் சிறிது நேரம் பேசாமல் இருந்தார். மனத்தை ஒருநிலைப்படுத்தித் தியானம் செய்தார். மேல் நோக்கி மூச்சு செல்லத் தொடங்கிற்று. எந்த எந்த உறுப்பை பீஷ்மர் விட்டாரோ, அந்த உறுப்பில் இருந்த பாணங்கள் மறைந்தன. அனைவரும் பார்த்திருக்க ஒரே நொடியில், அவர் உடம்பில் பாணங்களே இல்லாது போயின.

வியாசர் முதலிய ரிஷிகளும் வாசுதேவர் முதலானவர்களும் இதைக் கண்டு ஆச்சரியம் அடைந்தனர்.

அடக்கப்பட்ட பீஷ்மருடைய ஆத்மா, தலையைப் பிளந்து கொண்டு ஆகாயத்தை நோக்கிச் சென்றது. தேவ துந்துபிகள் முழங்கின. பூமாரி பெய்தது. பீஷ்மர் தலையிலிருந்து புறப்பட்ட ஒளி, ஆகாயத்தை நோக்கிச் சென்று ஒரு நொடியில் மறைந்தது.

சந்துனுவின் புத்திரரான பீஷ்மர் இப்படி வசுக்களின் உலகத்தை அடைந்தார்.

* * *

இதன் பின்னர் பாண்டவர்களும் விதுரரும் யுயுத்சுவும் சந்தனக் கட்டைகளையும் நறுமணப் பொருள்களையும் கொண்டு சிதை அடுக்கினார்கள்.

பிறகு யுதிட்டிரரும் திருதராட்டிரனும் அழுது கொண்டே, கௌரவம் மிக்க பீஷ்மரின் சடலத்தை, பட்டுக்களாலும் பூமாலைகளாலும் மூடினர். யுயுத்சு உயரமான குடையைப் பிடித்தான்; பீமனும் அர்ச்சுனனும் வெண் சாமரம் வீசினர். நகுலனும் சகதேவனும் முடியை எடுத்து அவருக்குச் சூட்டினர்.

திருதராட்டிரனும் யுதிட்டிரனும் பீஷ்மருடைய கால் மாட்டில் இருந்தனர். கௌரவ குலப் பெண்டிர் அனைவரும் பீஷ்மருக்கு விசிறினர்.

செய்ய வேண்டிய சடங்குகளையெல்லாம் செய்து முடித்த பின்னர், சிதையில் பீஷ்மரின் சடலத்தைத் தூக்கி, சந்தனக் கட்டைகளாலும் இதர நறுமணப் பொருள்களாலும் மூடி, தீ வைத்துவிட்டு, சிதையை இடம் வலமாகச் சுற்றினர்.

இதன் பின்னர், செய்ய வேண்டிய அனைத்தையும் செய்து முடித்து, நாரதர் முதலான ரிஷிகளுடன் அனைவரும் கங்கைக் கரையை அடைந்தனர். அங்கு முறைப்படி அனைவரும் நீர்க் கடன் முதலியவற்றைச் செய்து முடித்தனர்,

நீர்க்கடன் செய்யும்போது, அழுதுகொண்டே கங்கை நீரிலிருந்து கங்கை தோன்றினாள். அவள் கௌரவர்களை நோக்கி, "அரசர்களே! நடப்பைச் சொல்லுகிறேன் கேளுங்கள். இவன் அரச ஒழுக்கத்திலும் அறிவிலும் குணத்திலும் சிறந்தவன்; கௌரவ வமிசத்துப் பெரியோர்களைப் போற்றுபவன்; தாய் தந்தையரிடம் பாசம் உள்ளவன். எடுத்த விரதத்தைச் செய்து முடிப்பவன்; பரசுராமர் முதலியவர்களாலும் வெல்ல முடியாத வீரன். அத்தகைய மகாவீரனை சிகண்டி வதம் செய்துவிட்டான். இதைக் கேட்டு என் மனம் இன்னும் வெடிக்காமல் இருக்கிறது" என்று புலம்பினாள்.

தன் புதல்வனை இழந்து புலம்பும் கங்கா நதிக்கு கண்ணன் ஆறுதல் சொன்னார். "சிறந்தவளே! மனத்தைத் திடமாக வைத்துக்கொள்: துயரப்படாதே. உன் புதல்வர் மேலான கதியை அடைந்திருக்கிறார். வசுவாய் இருந்த அவர் தமக்கு நேர்ந்த ஒரு சாபத்தினால் மானிடராகப் பிறந்தார். அவரைப்பற்றி நீ துயரப்படாதே. போர்க் காலத்தில் அவர் அர்ச்சுனனால் கொல்லப்பட்டாரேயன்றி, சிகண்டியால் கொல்லப்படவில்லை. தேவேந்திரனும் வெல்ல முடியாத அந்த வீரர் இப்பொழுது தம் இச்சையால் சொர்க்கம் சென்றார்" என்று சொன்னார்.

வியாசரும் கங்காதேவிக்கு ஆறுதல் சொன்னார்.

கங்கை துயரத்தை மறந்து, நீருக்குள் திரும்பினாள்.

மற்றவர்களும் அவளிடம் விடைபெற்றுக்கொண்டு திரும்பினர்.

# வியாசர்

அருளிய

# மகா பாரதம்

## அஸ்வமேதிக பருவம்

# வியாசர்

## அருளிய

# மகாபாரதம்

---

## பொருள் இல்லை

தர்ப்பணத்தைச் செய்து முடித்தபின், மனக்கலக்கமுற்ற யுதிட்டிரர் திருதராட்டிர மன்னனை முன்னிட்டுக் கொண்டு, கங்கையிலிருந்து கரைக்கு வந்தார். நீர் ததும்பும் கண்களுடன் வந்த அவர், வேடனால் அடியுண்ட யானைபோல கரைமீது விழுந்தார்.

கீழே விழுந்த அவரைக் கிருஷ்ணனின் கட்டளைப்படி, பீமன் சென்று தாங்கிக் கொண்டான். "பகைவரை வாட்டுபவரே ! நீர் இவ்விதம் துயரப்படலாகாது" என்று கிருஷ்ணன் ஆறுதல் சொன்னார்.

யுதிட்டிரர் வருத்தப்படுவதைக் கவனித்த மற்றப் பாண்டவர்கள் துயருற்று, அவரைச் சூழ்ந்து உட்கார்ந்தார்கள்.

அறிவையே கண்ணாகவுடைய திருதராட்டிர மன்னன் யுதிட்டிரரைத் தேற்ற முயன்றான். "குருகுலச் செம்மலே ! எழுந்திரு. மேலே செய்ய வேண்டிய காரியத்தைச் செய். க்ஷத்திரியர்களுக்கு உரிய தருமப்படி இந்தப் பூமி முழுவதையும் நீ ஜயித்தாய். நண்பர்களுடனும் சகோதரர்களுடனும் அதை ஆண்டு அனுபவி. துயரப்பட வேண்டியவர்கள் தானும் காந்தாரியும்தான். நாங்கள் பெற்ற நூறு புதல்வர்

களும் கனவில் கிடைத்த பொருள்போல, மறைந்து போனூர் கள். எனக்கு நன்மை சொன்ன விதுரன் சொற்களைக் கேளாததன் பயனை இப்பொழுது நான் அனுபவிக்கிறேன்! வயது முதிர்ந்த உன் தாய் தந்தையரான நாங்கள் இருவரும் துயரக் கடலில் தவிப்பதைப் பார். இப்பொழுது நீ துயரப் படுவதற்குக் காரணம் ஒன்றும் இல்லை'' என்று சொன்னான்.

அறிஞனை திருதராட்டிரன் சொன்ன இந்த சொற் களைச் செவிமடுத்த யுதிட்டிரர் பேசாமல் இருந்தார்.

அப்போது வாசுதேவர் அவரை நோக்கி, "அரசே! ஒருவன் அதிகம் துயரப்படுவானாயின், காலம் சென்ற அவன் முன்னோர்களையும் பாதிக்கும். ஆகையால் தான தருமங் கள் நிறைந்த வேள்விகள் பலவற்றை இயற்றும்; அதனால் முன்னோர்களும் தேவதைகளும் திருப்தி அடைவர். விருந் தினர்களுக்கும் ஏழை எளியவர்களுக்கும் அன்னமிட்டு அவர் கள் மனம் களிப்படையச் செய்யும். உம்மைப் போன்றவர் கள் இது சமயம் இப்படி வருந்துவது தகாது. பீஷ்மர், நாரதர், விதுரர், வியாசர் ஆகியோரிடமிருந்து, அரசனுக் குரிய கடமைகளைக் கேட்டுத் தெரிந்துகொண்டுள்ள நீர் மூடர் களைப்போல் நடவாமல் ராஜ்ய பாரத்தை ஏற்று. முன்னோர் வழியைப் பின்பற்றி ஆட்சிபுரியும். போரில் உயிர் துறந்த வர்களை மீண்டும் காணலாம் என்பது நடவாத காரியம், ஆகவே துயரத்தை விட்டொழியும்'' என்று சொன்னூர்

"கோவிந்தரே! என்மீது உமக்கு உள்ள அன்பின் மிகுதி யால் நீர் இப்படி உரைக்கிறீர். ஆயினும் வனம் செல்ல எனக்கு நீர் அனுமதி கொடுக்க வேண்டும். பீஷ்மர், துரோ ணர், கர்ணன் இவர்கள் எல்லாரையும் கொன்ற எனக்கு மனத்தில் ஆறுதல் ஏற்படவில்லை. நான் செய்த இந்தக் கொடிய பாவத்தை நீக்கிப்கொள்ள எனக்கு நீர் கட்டளை யிடும்'' என்று பதில் சொன்னூர் யுதிட்டிரர்.

உடனே வியாசர் யுதிட்டிரருக்குச் சமாதானம் சொல்ல முற்பட்டார். "குற்றமற்றவனே! மனத்தில் ஆறுதல் இல்லாத

காரணத்தால் குழந்தைபோல நீ மதி மயக்கம் அடைந்திருக்கிறாய். அரச குலத்தில் பிறந்தவர்களுக்குப் போர் செய்வது கடமை. தன் கடமையைச் செய்ததற்காக ஓர் அரசன் வருந்துதல் கூடாது. யுதிட்டிரா! பாபம் செய்த மனிதன் அதை நிவர்த்தி செய்துகொள்ள வழியுண்டு. தானம், தவம், வேள்வி இவற்றால், பாபத்தைப் போக்கிக்கொள்ளலாம். மன்னனே! நீ அசுவமேத யாகத்தைச் செய். தசரதன் புதல்வர் இராமரும், துஷ்யந்தன் புதல்வன் பரதனும் முன்பு பல வேள்விகள் இயற்றி இருக்கின்றனர். அதைப்போல, நீயும் அசுவமேத யாகத்தை முறைப்படி செய்'' என்று சொன்னார்.

''அந்தண சீலரே! உமது கட்டளைப்படி யாகத்தைச் செய்ய நான் விரும்புகிறேன். ஆயினும் அதற்குப் போதிய பொருள் வசதி இல்லை. உறவினர்களைக் கொன்ற சோகத்தில் மூழ்கியிருக்கும் என்னால் தேவர்களை எவ்வாறு திருப்தி செய்ய முடியும்? சொற்பமாகக் கொடுத்துப் பழக்கமில்லாதவன் நான். நலிந்திருக்கும் அரசர்களிடம் யாகத்தின் பொருட்டாய் இது சமயம் நான் கப்பம் வாங்க முற்படுவது உசிதம் ஆகாது. வெற்றியை விரும்பிய துரியோதனன் பூமியைப் பாழாக்கிவிட்டான்; மன்னர்கள் பலர் போரில் மடிந்துவிட்டார்கள். அசுவமேதம் செய்வதற்கு நிதி நிறைய வேண்டும். ஆனால் பொக்கிஷமோ காலியாய் இருக்கிறது. ஆகவே நீர்தான் இதுபற்றி யோசனை சொல்ல வேண்டும்'' என்று கேட்டார்.

யுதிட்டிரர் இப்படிக் கேட்டதும், வியாசர் சிறிது நேரம் யோசித்தார். பிறகு யுதிட்டிரரை நோக்கி "மன்னனே! உனது பொக்கிஷம் நிரம்ப வழி இருக்கிறது. முன்பு மருத்தன் என்று ஓர் அரசன் இருந்தான். அவன் வைத்துவிட்டுப் போன செல்வம் இமயத்தின் அடிவாரத்தில் இருக்கிறது. அதை எடுத்து வர ஏற்பாடு செய். அசுவமேத யாகம் செய்ய அது போதியதாகும்'' என்று பதில் சொன்னார் வியாசர்.

# பொறாமை

"பகவானே! மருத்தன் என்னும் அந்த அரசன் எவ்வாறு பெருங் கீர்த்தி அடைந்தான்? பெரும் பொருள் அவனுக்கு எவ்வாறு கிடைத்தது? அதை எனக்குச் சொல்ல வேண்டுகிறேன்" என்று வியாசரை யுதிட்டிரர் கேட்டார்.

வியாசர் மருத்தன் கதையைச் சொன்னார். பொறாமை என்பது பெரிய அறிஞர்களையும் பீடிக்கும் இயல்புடையது என்றும், பிருகஸ்பதி போன்றவர்களும்கூட அதன் பிடிப்பில் சிக்கி அவமானப்பட நேர்ந்தது என்றும், அந்தக் கதை மூலம் யுதிட்டிரருக்கு வியாச மகரிஷி விளக்கினார்.

அங்கிரஸ் மகரிஷிக்கு இரு புதல்வர்கள் இருந்தார்கள்! ஒருவர் பெயர் பிருகஸ்பதி: மற்றவர் பெயர் சம்வர்த்தர்; பொறாமை வயப்பட்டு, தம் தம்பி சம்வர்த்தரை, பிருகஸ்பதி அடிக்கடி பீடித்தார். தன் தமையன் கொடுக்கும் தொல்லைகளைத் தாங்கமாட்டாத சம்வர்த்தர் பொருள்களையெல்லாம் விட்டுவிட்டு, காட்டுக்குச் சென்று வசிக்க விரும்பினார். பித்தனைப்போல் வேடம்பூண்டு ஊர் ஊராக அவர் சுற்றித் திரிந்தார்.

அசுரர்களைக் கொன்று வெற்றி பெற்ற இந்திரன், தனக்குப் புரோகிதராக இருக்கும்படி பிருகஸ்பதியை வேண்டினான். பிருகஸ்பதியும் சம்மதித்து அவனுக்குப் புரோகிதராய் இருந்து வந்தார்.

இது சமயம் இட்சவாகு குலத்தில் பிறந்த மருத்தன் என்ற அரசன் ஒருவன் இருந்தான். இவனுடைய புகழ் நாளுக்கு நாள் பெருகி வருவதைக் கண்ட இந்திரன், மருத்த மன்னன்மீது பொறாமை கொண்டான். ஆகவே அவன் பிருகஸ்பதியை அழைத்து, "குருவே! மருத்தன் நாளுக்கு நாள் அபிவிருத்தி அடைந்து வருகிறான். என்மீது உமக்கு அன்பு இருக்குமானால் நீர் மருத்தனுக்கு ஒரு போதும் வேள்வி செய்

வித்தல் கூடாது. தேவர்களுக்கு அரசனான எனக்குப் புரோகிதராக இருக்கும் நீர், மானுடனான மருத்தனுக்குப் புரோகிதராக இருப்பது கூடாது'' என்று சொன்னான்.

"அவ்வாறே ஆகட்டும். நான் மருத்தனுக்குப் புரோகிதம் செய்யேன். இதை நீர் உறுதியாக நம்பலாம்'' என்று உறுதி கூறினார் பிருகஸ்பதி.

இந்திரனும் பிருகஸ்பதியும் தனக்கு எதிராக உடன்பாடு செய்திருப்பதை அறிந்த மருத்தன் கோபம் கொண்டான். அவன் யாகத்துக்கு வேண்டிய ஓர் ஏற்பாட்டைச் செய்து வைத்துவிட்டு, பிருகஸ்பதியை அணுகி, "குருவே! உமது கட்டளைப்படி நான் யாகத்துக்கு ஏற்பாடு செய்திருக்கிறேன். நீர் முன்பு சொன்னபடி வந்து, யாகத்தைச் செய்யும்'' என்று வேண்டினான்.

மருத்தன் இப்படிச் சொன்னதும் பிருகஸ்பதி, "அரசே! உனக்கு யாகம் செய்விக்க நான் விரும்பவில்லை. இந்திரன் வேண்டுகோளுக்கு இணங்க, உனக்கு யாகம் செய்விப்பது இல்லை என்று நான் உறுதி செய்து கொடுத்து இருக்கிறேன். அதனால் உனக்கு நான் யாகம் செய்ய முடியாது'' என்று சொன்னார்.

"குருவே! உம்மை அண்டி இருக்கும் என்னை நீர் புறக்கணிக்கலாகாது; அவசியம் நீர் எனக்கு யாகம் செய்விக்க வேண்டும்'' என்று மருத்தன் வேண்டினான்.

"மருத்தா! நான் தேவர்களுக்கு யாகம் செய்விப்பவன்; ஆகையால் மானுடனாகிய உனக்கு நான் யாகம் செய்விக்க முடியாது. விரும்பினால் உனக்குப் பிரியமான வேறு ஒருவரைக்கொண்டு நீ யாகம் செய்துகொள்' என்று சொன்னார் பிருகஸ்பதி.

பிருகஸ்பதி இப்படி மறுத்துச் சொன்னதும், மருத்தன் வருத்தமடைந்தான். திரும்பும் வழியில் நாரதரை அவன் சந்தித்தான்.

நாரதர் பிருகஸ்பதி தம்பி சம்வர்த்தரைக் கொண்டு யாகம் செய்து கொள்ளும்படியும், பைத்தியம்போல் திரியும் அவரை இன்ன இடத்தில் காணலாம் என்றும் யோசனை சொல்லிக் கொடுத்தார்.

அதன்படி மருத்தன் தேடியலைந்து சம்வர்த்தரைக் கண்டு பிடித்து, தனக்கு யாகம் செய்விக்குமாறு வேண்டினான்.

முதலில் சம்வர்த்தர் சம்மதிக்கவில்லை. பிறகு மருத்தன் வேண்டுகோளுக்கு இசைந்து, யாகம் செய்விக்க ஒப்புக் கொண்டார். யாகம் வெற்றிகரமாக நிறைவேறுதற்கான வழி துறைகளையும் சொல்லிக் கொடுத்தார்.

அதன்படி மருத்தன் கைலாசநாதரைக் குறித்துக் கடும் தவம்புரிந்தான். அதன் பயனாய் மருத்தனுக்கு, குபேரனைப் போல் அளவற்ற செல்வம் கிடைத்தது. அதனால் மனிதர்களால் செய்ய முடியாத பெரும் வேள்வி ஒன்றை இயற்ற மருத்தன் ஏற்பாடு செய்தான். யாகத்துக்குத் தேவைப்படும் பாத்திரங்களை எல்லாம் தங்கத்தால் செய்தான். சம்வர்த்தருடைய கட்டளைப்படி யாகத்துக்கு வேண்டிய ஏற்பாடுகள் சிறப்பாக நடந்தன.

விவரம் தெரிய வந்து, பிருகஸ்பதி வருத்தமுற்றார். பொறாமை அதிகரித்து இளைத்துப் போனார். "என் பகைவன் சம்வர்த்தன் மேன்மையடையப் போகிறான்" என்று கருதி ஏங்கினார். நிறம் மாறி ஒளி குன்றிப் போனார்.

பிருகஸ்பதியின் நிலைமையை அறிந்த இந்திரன், அவரை அணுகி, "குருவே! தாங்கள் சுகமாகத் தூங்குகிறீர்களா? பணியாட்கள் குறிப்பறிந்து நடக்கின்றனரா? தேவர்களுக்கு நலம் செய்வதில் நீர் நாட்ட முடையவராய் இருக்கிறீரா? தேவர்கள் உம்மைப் பாதுகாக்கின்றனரா?" என்று கேட்டான்.

"அரசே! நான் சுகமாகத்தான் தூங்குகிறேன். பணியாட்கள் கீழ்ப்படிந்து நடக்கின்றனர். தேவர்கள் என்னை நேசிக்கின்றனர்; நான் அவர்களை நேசிக்கிறேன்" என்று பிருகஸ்பதி பதில் சொன்னார்.

"அப்படியாயின் நீர் கவலையுடன் இருக்கக் காரணம் என்ன? நிறம் மாறி உமது உடல் வெளுத்துப் போய் இருக்கிறதே ஏன்?" என்று கேட்டான் இந்திரன்.

"அரசே! மருத்தன் சிறந்த யாகம் ஒன்று செய்யப் போகிருனும். அதைச் சம்வர்த்தன் செய்விக்கப் போகிருனும். அதனால்தான் கவலையுற்று நான் மெலிந்து போனேன்" என்று பதில் சொன்னார் பிருகஸ்பதி.

பிருகஸ்பதி சொன்ன பதிலைக் கேட்டு இந்திரன் ஆச்சரியமுற்றான். "அந்தணரே! சகல விருப்பங்களையும் அடைந்து நீர் அனுபவிக்கிறீர். தேவர்களுக்குப் புரோகிதராகவும் யோசனை சொல்பவராகவும் இருக்கிறீர். மூப்பையும் மரணத்தையும் வென்று வாழ்கிறீர்! அப்படிப்பட்ட உமக்குச் சம்வர்த்தர் என்ன தீங்கைச் செய்ய முடியும்? பொறாமை வயப்பட்டு வீணே நீர் ஏன் அவதிப்படுகிறீர்?" என்று கேட்டான் இந்திரன்.

இந்திரன் இப்படிக் கேட்டதும் பிருகஸ்பதி அவனுடைய பழைய கதைகளை எல்லாம் எடுத்துச் சொல்லி. இந்திரனை இடித்துக் காட்டினார். "பகைவர்கள் விருத்தியடைவதைக் கண்டால் அவர்களை அடக்காமல் நீ சும்மா இருப்பாயா? அதேபோலத்தான் எனக்கும். என் பகைவன் சம்வர்த்தன் விருத்தியடைவதைக் கண்டு நான் சும்மா இருக்க முடியுமா? நான் நிறம் மாறி ஒளி குன்றியதற்குக் காரணம் அதுதான். சம்வர்த்தனை நீ அடக்கினால்தான் என் கவலை நிவர்த்தியாகும்" என்று சொன்னார் பிருகஸ்பதி.

உடனே இந்திரன் அக்னியை நோக்கி, "நீ மருத்தனிடம் சென்று பிருகஸ்பதியைப் புரோகிதராக ஏற்றுக்கொள்ளும்படி சொல். அவனைத் தேவனாக ஆக்குவார் என்பதையும் தெரியப்படுத்து" என்று தூது அனுப்பினான்.

"சரி" என்று சம்மதித்து அக்னி தேவன் புறப்பட்டுச் சென்றான். செல்லும்பொழுது வழி நெடுகிலும் இருக்கும் மரம், செடி, கொடிகளை எல்லாம் எரித்துக்கொண்டு, அக்னி கடுவேகமாகச் சென்றான்.

தன் முன்னே அக்னிதேவன் தேவ வடிவத்துடன் வந்திருப்பதை அறிந்த மருத்தன், பேரானந்தம் அடைந்தான். "அர்க்கியம், பாத்தியம், ஆசமனியம் முதலியவற்றைக் கொணருங்கள்" என்று தன் பணியாளருக்கு உத்தரவிட்டான்.

தான் வந்திருக்கும் காரியத்தை அக்னி தெரியப்படுத்தினான். "வேந்தே! இந்திரன் என்னை உன்பால் தூது அனுப்பி இருக்கிறார். சம்வர்த்தரை விட்டுவிட்டு, பிருகஸ்பதியைப் புரோகிதராக ஏற்றுக்கொள். தேவர்களுக்கு யாகம் செய்யும் அவர், மானுடனாகிய உனக்கு யாகம் செய்து, உன்னைத் தேவன் ஆக்குவார்" என்று சொன்னான்.

அக்னி சொன்ன வார்த்தைகளைச் செவிமடுத்த சம்வர்த்தர் கடும் கோபம் கொண்டார். "அக்னியே! மருத்தனிடம் பிருகஸ்பதியைச் சேர்க்கும் முயற்சியை விட்டுவிடு. இல்லையேல் கோபம்கொண்டு என் கண்களால் உன்னை நான் எரித்துவிடுவேன்" என்று எச்சரித்தார்.

அக்னி பயந்து போனான். அரசிலைபோல் நடுநடுங்கிக்கொண்டே இந்திரனிடம் திரும்பி, நடந்ததைச் சொன்னான்.

அக்னியின் கூற்றை இந்திரன் நம்பவில்லை. "அக்னியே! உன்னைத் தொட்டவர்களை எரிக்கும் ஆற்றல் பெற்றவன் நீ. அப்படி இருக்கும்போது வேறு ஒருவன் உன்னை எரிப்பான் என்பது வியப்பாய் இருக்கிறது" என்று சொன்னான்.

"அரசே! பிரம்ம பலமும் பிரம்மசரிய பலமும் மிக்க ஆற்றல் பெற்றவை. அவற்றைவிட மேலான பலம் ஒன்றும் இல்லை. ஆகையால் சம்வர்த்தரிடம் நான் போக முடியாது" என்று மறுத்துச் சொன்னான் அக்னி.

பிறகு பிராமணர்களிடம் இந்திரனுக்கு நேர்ந்த அவதிகளை எல்லாம் குத்திக்காட்டி நினைவுபடுத்தினான்.

எனவே இந்திரன் அக்னியை விட்டுவிட்டு, கந்தர்வன் ஒருவனை மருத்தனிடம் அனுப்பினான்.

கந்தர்வன் மருத்தனை அணுகி, இந்திரன் சொல்லியனுப்பியதை அவனிடம் சொன்னான்.

அதைக் கேட்ட மருத்தன், "நான் சம்வர்த்தரை விட முடியாது. நண்பனைக் கைவிடுவது கொடிய பாவம்" என்று மறுத்துச் சொன்னான்.

அதற்கு, தூதுவந்த கந்தர்வன், "அரசே! இந்திரன் சொற்படி நீ நடக்காவிட்டால் அவர் வஜ்ராயுதத்தால் உன்னை அடிப்பார். நீ உயிர் பிழைக்க மாட்டாய்" என்று சொன்னான்.

கந்தவர்வன் இப்படிச் சொல்லும்போதே ஆகாயத்தில் இடிமுழக்கம் உண்டாவதைக் கேட்டு, மருத்தன் பயந்து போனான். அவன் சம்வர்த்தரை நோக்கி, "அந்தணரே! என்னைக் காப்பாற்றும். இந்திரன் என்னைத் தாக்க வருகிறான்" என்று சரண் புகுந்தான்.

"பயப்படாதே!" என்று சொல்லி சம்வர்த்தர் மருத்தனுக்கு அபயம் கொடுத்தார். பிறகு தன் தபோ பலத்தினால் இந்திரனை அடக்கிக் கட்டுப்படுத்தினார்.

போர் செய்து யாகத்தை நிறுத்தும் எண்ணத்துடன் வந்த இந்திரன், அதை விடுத்து யாகத்தில் கலந்துகொண்டான். அவிசையும் பெற்றுக்கொண்டு திரும்பினான்

யாகம் நிறைவேறி, மருத்தனும் அளவற்ற ஆனந்தம் அடைந்தான்.

## விடை கொடுங்கள்

ரிஷிகள் விடை பெற்றுக்கொண்டு மறைந்த பின்பு யுதிட்டிரர் அங்கே உட்கார்ந்தார். பீஷ்மர், கர்ணன் முதலானவர்களுக்குச் செய்ய வேண்டிய இறுதிக் கடன்களைச் செய்தார். அவர்களை எண்ணி மிகுதியான தான தருமங்கள் செய்தார். பிறகு திருதராட்டிரனை முன்னிட்டுக்கொண்டு, யுதிட்டிரர் அத்தினாபுரம் போய்ச் சேர்ந்தார்.

திருதராட்டிர மன்னனுக்கு ஆறுதல் சொல்லிவிட்டு நாட்டை ஆளும் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். தசரத ராமனைப் போலவும் மனுவைப் போலவும் நாட்டை ஆட்சி செய்தார்.

அப்போது மக்கள் அறத்தில் அதிக நாட்டமுடையவராய் இருந்தனர்; பெய்ய வேண்டிய காலங்களில் மழை சரியாகப் பெய்தது; நோயின்றியும் மனக் கவலையின்றியும் மக்கள் வாழ்ந்தனர்; பசியாலோ தாகத்தாலோ மக்கள் வருந்தவில்லை. சூதாட்டம் முதலியவற்றில் மக்கள் ஈடுபடாது இருந்தனர். நான்கு வருணத்தாரையும் செவ்வனே பேணி யுதிட்டிரர் பாதுகாத்தார். அறம் வழுவாது மக்கள் இன்ப சாகரத்தில் திளைத்தனர்.

மாதர்கள் அனைவரும் கற்பரசிகளாய் இருந்தனர். அழகும் ஒழுக்கமும் நிரம்பியவர்களாய் இருந்தனர்; கணவன் மனம் கோணாமலும் மற்றவர்கள் மனம் கோணாமலும் அன்போடு நடந்துகொண்டனர். சாத்திரங்களில் சொல்லியிருக்கும் நெறிப்படி வாழ்க்கை நடத்தினர்.

கால்நடைச் செல்வங்கள் நல்ல முறையில் விருத்தியாயின; பசுக்களிலிருந்து பால் நிறையக் கிடைத்தது.

மலர்களையும் கனிகளையும் நிழலையும் தந்து மரங்கள் மகிழ்வித்தன.

சிற்றரசர்கள் யுதிட்டிரருக்குக் கட்டுப்பட்டு நடந்தார்கள்; குடிமக்களை ஓம்பிப் பாதுகாத்தார்கள்.

சோகம் தணிந்து ராஜ்யபாரப் பொறுப்பை ஏற்று யுதிட்டிரர் ஆள்வது குறித்து, கண்ணனும் அர்ச்சுனனும் மகிழ்ச்சி அடைந்தார்கள். வனங்களிலும் மலைகளிலும் சஞ்சரித்து, காலத்தையும் பொழுதையும் மகிழ்வுடன் கழித்தார்கள். அப்போது கண்ணன் அர்ச்சுனனிடம், "வில்லாற்றல் மிக்கவனே! உனது ஆற்றலால் பகைவர்களை அழித்து, யுதிட்டிரர் நாட்டைப் பரிபாலித்து வருகிறார். இனி நான் துவாரகை திரும்ப விரும்புகிறேன். பலராமரையும் மற்ற

யாதவர்களையும் பார்த்து நீண்ட காலம் ஆயிற்று. ஆகவே, நீ அரசர் யுதிட்டிரரிடம் சென்று நான் துவாரகை திரும்பும் விருப்பத்துடன் இருப்பதைத் தெரிவிக்க வேண்டும். அவர் கருத்துக்கு மாறாக நடக்க என் மனம் இடம் தராது. எதற்காக வந்து உங்களுடன் நான் தங்கி இருந்தேனோ, அந்தக் காரியம் நிறைவேறிவிட்டது. துரியோதனன் முதலானவர்களை வதம்செய்து, பூமி, யுதிட்டிரரின் ஆதிக்கத்தின்கீழ் வந்துவிட்டது. இனி நான் துவாரகை திரும்புவதுதான் உசிதம். நீ சென்று யுதிட்டிரரிடம் இதுபற்றி என் விருப்பத்தைத் தெரிவித்து, அனுமதி கேள்'' என்று சொன்னார்.

''ஆகட்டும்'' என்று பதில் சொன்னான் அர்ச்சுனன்.

பிறகு இருவரும் புறப்பட்டுச் சென்று, முதலில் திருதராட்டிர மன்னனைச் சந்தித்து, தாங்கள் இன்னார் என்பதை அறிமுகப்படுத்திக்கொண்டு அவன் பாதங்களைத் தொட்டு வணங்கினார்கள். பின்னர் காந்தாரி, குந்தி, யுதிட்டிரர், பீமசேனன் இவர்களை வணங்கினார்கள். பிறகு விடை பெற்றுக் கொண்டு, அர்ச்சுனன் மாளிகையில் கண்ணனும் அர்ச்சுனனும் அன்றைய இரவை மகிழ்ச்சியுடன் கழித்தார்கள்; இரவு நன்றாக உறங்கினார்கள். பொழுது புலர்ந்ததும் எழுந்து, காலைக் கடன்களை முடித்துக்கொண்டு, யுதிட்டிரரைக் காணச் சென்றார்கள்.

யுதிட்டிரரைச் சந்தித்து அவரை வணங்கினார்கள். அவர் அனுமதி கொடுத்ததும் ஆசனங்களில் அமர்ந்தார்கள்.

அப்போது யுதிட்டிரர் அவர்கள் இருவரையும் நோக்கி, ''வீரர்களே! ஏதோ சொல்லும் விருப்பத்துடன் இந்திரப்பிரத்தத்திலிருந்து, நீங்கள் அத்தினபுரத்துக்கு வந்திருப்பதாகத் தோன்றுகிறது. தாமதியாது விருப்பத்தைத் தெரிவியுங்கள். நிறைவேற்றி வைக்கிறேன்'' என்று சொன்னார்.

இவ்வாறு யுதிட்டிரர் கேட்டதும், வணக்கத்துடன் அர்ச்சுனன் அவர் அருகே சென்றான். ''அரசே! கண்ணன் இங்கே வந்து நெடும் காலம் ஆகிவிட்டது. அவர் தம் தந்தையைக்

காணப் பிரியப்படுகிறுர். உம்மிடம் அனுமதி பெற்றுக் கொண்டு துவாரகை திரும்ப வேண்டுமாம். அதற்கு நீர் அனுமதி அளிக்க வேண்டும்'' என்று சொன்ஞன்.

''கேசவரே! உமது விருப்பப்படி நீர் துவாரகை திரும்பி உம் தந்தை வாசுதேவரையும் தேவகி தேவியையும் சந்தியும். என்னையும் என் சகோதரர்களையும் பற்றிய நினைப்பு உமக்கு எப்பொழுதும் இருக்கட்டும். எல்லாரையும் பார்த்துவிட்டு, அஸ்வமேத யாகத்துககு வந்து சேரும். உமது உதவியிஞல் பூமி முழுவதையும் நாங்கள் அடைந்தோம். உம்மை அண்டினவர்களுக்கு எதுவும் அரிதல்ல'' என்று, கண்ணனிடம் யுதிட்டிரர் சொன்ஞர்.

பிறகு குந்தி, விதுரர் முதலானவர்களிடம் விடைபெற்றுக்கொண்டு, கண்ணன் அத்திஞபுரத்திலிருந்து புறப்பட்டார். செல்லும்பொழுது சுபத்திரையையும் உடன் அழைத்துச் சென்ருர்.

அர்ச்சுனன், பீமன், இரட்டையர்கள், சாத்யகி, விதுரர் முதலியோார் உடன் சென்று, அவரை வழி அனுப்பி வைத்தார்கள்,

சாத்யகி, கண்ணன், சுபத்திரை ஆகிய மூவரும் துவாரகையை நோக்கிப் புறப்பட்டார்கள்.

## உதங்கர்

கிருஷ்ணனைப் பல முறை ஆலிங்கம் செய்து கொண்டு அர்ச்சுனன் விடைகொடுத்தான். கண்ணன் தம் பரிவாரத்திஞருடன் புறப்பட்டார். கண்ணுக்குப் புலப்படும் வரையில் அவர் செல்வதை அர்ச்சுனன் பார்த்துக்கொண்டே நின்ருன். திரும்புவதற்கு அவனுக்கு மனமே வரவில்லை. கண்ணனும் அவ்வாறே அர்ச்சுனனைவிட்டுப் பிரிய மனமில்லாதவராகிப் புறப்பட்டார்.

வழியில், தண்ணீர்ப் பஞ்சமுள்ள பாலைவனத்தின் ஊடே செல்ல நேர்ந்தபோது, உதங்க மகரிஷியைக் கண்ணபிரான்

சந்தித்தார். முறைப்படி அவரைப் பூசித்து. கண்ணன் நலன் விசாரித்தார்; அதேபோல முனிவரும் கண்ணனைப் பூசித்து நலன் விசாரித்தார்.

"மாதவரே! பாண்டவர்களும் கௌரவர்களும் உமது முயற்சினால் அன்புடன் இருந்து வருகின்றனரா? ஒற்றுமையுடன் வாழ்க்கை நடத்துகின்றனரா? அவர்களிடையே எப்பொழுதும் சமாதானம் நிலவும்படி காரியத்தை முடித்து இருக்கிறீரா? யாவற்றையும் எனக்கு விவரமாகச் சொல்லும்" என்று உதங்க மகரிஷி கேட்டார்.

"முனிவரே! பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும் இடையில் சமாதானம் நிலவ நான் பெரு முயற்சி செய்தேன். என்றால் சமாதானப்படுத்த முடியவில்லை. கௌரவர்கள் தம் உறவினர்களுடன் போரில் மடிந்து போனார்கள். புத்தியினாலும் பலத்தினாலும்தெய்வத்தை மீற முடியாது என்பதை நீர் அறிவீர். நானும் பீஷ்மரும் விதுரரும் சொன்ன புத்திமதியைக் கௌரவர்கள் கேட்கவில்லை. போர் செய்து அவர்கள் மடிந்து போனார்கள். ஐந்து பாண்டவர்கள் மட்டும்தான் உயிர் பிழைத்து இருக்கிறார்கள்" என்று கண்ணபிரான் பதில் சொன்னார்.

மாதவர் சொன்ன பதிலைக் கேட்டு, உதங்கர் மிக்க கோபம் அடைந்தார். கண்களை அகல விழித்து அவரை உற்று நோக்கினார். "கேசவரே! சக்தியிருந்தும் கௌரவர்களை நீர் காப்பாற்றவில்லை. அதனால் உம்மை நான் சபிக்கப் போகிறேன், உமது அலட்சியத்தாலும் கபடத்தாலும் கௌரவர்கள் அழிந்து போயினர்" என்று சொன்னார்.

உதங்கர் இப்படிக் கோபமாக மொழிந்ததும் கண்ணன் "பிருகு குலத் தோன்றலே! தவசியான நீர் கோபம்கொள்ளல் தகாது. நான் சொல்வதைக் கேட்டுவிட்டு, பின்னர் நீர் சாபம் கொடுக்கலாம். அற்பமான தவத்தைக் கொண்டு என்னை யாரும் அவமதிக்க முடியாது. சாபம் கொடுத்து அதனால் உமது தவம் அழிந்து போவதை நான் விரும்பவில்லை" என்று சொன்னார்.

பிறகு உதங்கருக்குத் தான் யார் என்பதைச் சொன்னார். "உலகத்தைக் காக்கவும் தருமத்தை நிலைநிறுத்தவும் நான் பல பிறவிகள் எடுக்கிறேன். எடுக்கும் பிறவிக்குத் தக்கவாறு அந்தந்தத் தருமத்தைக் கடைப்பிடித்து ஒழுகுகிறேன். தேவ ஜாதியில் பிறக்கும்போது தேவனைப் போல் காரியங்களைச் செய்வேன்; அரக்கர் குலத்தில் பிறக்கும்போது அரக்கனைப் போலவும், இயக்கர் குலத்தில் பிறந்தால் இயக்கனைப் போலவும், மனிதனாகப் பிறந்தால் மனிதனைப் போலவும், விலங்காகப் பிறந்தால் விலங்கைப் போலவும், எடுக்கும் அவதாரத்துக்கு இயைய நான் நடப்பது உண்டு. அதன்படி மானுட இயல்புக்கு ஏற்ப, கௌரவர்களை நான் நயந்து வேண்டினேன். மதிமயக்க முற்றிருந்த அவர்கள் என் பேச்சைக் கேட்கவில்லை; பயமுறுத்திப் பார்த்தேன்; அதற்கும் அவர்கள் மசியவில்லை. கோபம்கொண்டு என் விசுவ ரூபத்தையும் காட்டினேன். அதுவும் பயன் இல்லாது போயிற்று. அதருமத்தைச் செய்வதில் அதிக நாட்டத்துடன் இருந்த அவர்கள் அதனால் அழிந்து போனார்கள். ஆகையால் அந்தணரே! என்மீது நீர் கோபம்கொள்ள வேண்டாம்" என்று சொன்னார் கண்ணன்.

கண்ணன் கூறிய சமாதானத்தைக் கேட்டு உதங்க மகரிஷி சாந்தம் அடைந்தார். "அச்சுதரே! நீர் சொன்ன காரணங்களால் எனது சினம் அடங்கிவிட்டது. உமது விஸ்வ ரூபத்தை நான் தரிசிக்க விரும்புகிறேன். அதற்கு நீர் அருள் புரியவேண்டும்" என்று சொன்னார்.

உதங்கர் சொன்னதைக் கேட்டு, கண்ணன் அகமகிழ்ந்தார். அர்ச்சுனனுக்கு முன்பு தான் காட்டிய விஸ்வ ரூபத்தை, உதங்கருக்குக் காட்டினார்.

உதங்கர் அந்த விஸ்வ ரூபத்தைக் கண்டு வியந்தார். ஆண்டவனே கண்ணன் வடிவில் இருப்பதைக் கண்டு அவரைப் போற்றினார்; வணங்கினார். பிறகு கண்ணனிடம், "அச்சுதரே! உமது இந்த வடிவத்தைச் சுருக்கிக்கொள்ளும்" என்று வேண்டினார்.

அதற்குக் கண்ணன், "முனிவரே! ஏதாவது விரும்பிய வரத்தைக் கேளும்" என்று கூறினார்.

"காந்தியுள்ள சிறந்த உமது ரூபத்தைத் தரிசித்ததே பெரும்பாக்கியம். அது ஒன்றே எனக்குப் போதும்" என்று மறுமொழி சொன்னார் உதங்கர்.

"முனிவரே! என்னை நீர் தரிசித்தது வீண் போகக் கூடாது. ஆகவே அவசியம் ஒரு வரத்தைக் கேளும்" என்று வற்புறுத்தினார் கண்ணன்.

"பிரபுவே! அவசியம் தாங்கள் எனக்கு வரம் அருளத் தான் வேண்டும் என்று கருதினால், விரும்பும் இடத்தில் எனக்குத் தண்ணீர் கிடைக்க அருள்புரிய வேண்டும். பாலை வனங்களில் தண்ணீர் கிடைப்பது அரிது, அதனால்தான் இதை வரமாகக் கேட்கிறேன்" என்று சொன்னார் உதங்கர்.

இதன் பின்னர், கண்ணன் தமது விஸ்வ ரூபத்தைச் சுருக் கிக்கொண்டார். பிறகு உதங்கரிடம், "எந்த இடத்தில் உமக்குத் தண்ணீர் தேவைப்பட்டாலும், அப்போது என்னை நினைத்துக்கொள்ளும்" என்று வரம் கொடுத்துவிட்டு, துவாரகைக்குச் சென்றார்.

உதங்கர் பாலைவனத்தில் சஞ்சரித்து வந்தார். அப் போது ஒரு சமயம் அவருக்குத் தண்ணீர் கிடைக்கவில்லை. ஆகவே, அவர் கண்ணனை நினைத்தார்.

அது சமயம் அந்தப் பாலைவனத்தில் புலையன் ஒருவன் தென்பட்டான். அவன் அம்மணக் கோலத்துடன் இருந்தான். மேனி அழுக்குப் படிந்து இருந்தது. பல நாய்கள் அவனைச் சூழ்ந்து இருந்தன, வில்லையும் அம்புகளையும் அவன் வைத்துக் கொண்டு இருந்தான், அவன் கால் அருகே ஒரு தோல் பை நிறையத் தண்ணீர் இருந்தது.

அந்தப் புலையன் உதங்கரைக் கண்டதும், கோவிந்தரின் கட்டளையை நினைந்து சிரித்தான். அவன் முனிவனை நோக்கி "பிருகு குலத் தோன்றலே! வாரும். நீர் தாகத்தால் தவிப்பது போலத் தோன்றுகிறது. இதோ தண்ணீர்; பெற்றுக் கொள்ளும்" என்று சொன்னான்.

புலையன் ஒருவன் தனக்கு, தண்ணீர் தர முன்வருகிறான் என்பதை அறிந்து, உதங்கர் ஆத்திரம் அடைந்தார். தனக்கு வரம் அளித்த கண்ணனை அவர் நிந்திக்கத் தொடங்கினார்.

புலையனோ தண்ணீரை ஏற்றுக்கொள்ளுமாறு அவரைப் பல முறை வேண்டினான். உதங்கர் உடன்படாது மறுத்து விட்டார்.

உதங்கரின் மன உறுதியைக் கண்ட புலையன் நாய்க் கூட்டங்களுடன் அந்த இடத்திலேயே மறைந்து விட்டான்.

இதைக் கண்டதும் உதங்கர் நாணமுற்றார். கண்ணன் தன்னை வஞ்சித்துவிட்டதாகக் கருதி வருந்தினார்.

இது சமயம் சங்கும் சக்கரமும் ஏந்தியவராய், கண்ணன் அவருக்குக் காட்சி கொடுத்தார்.

அப்போது உதங்கர் கண்ணனிடம் "பிரபோ ! புலையனிடமிருந்து தண்ணீர் வாங்கி அந்தணன் அருந்துவது முறையா ? இது உமது பெருமைக்கு அடுக்காது" என்று சொன்னார்.

கண்ணன் இன்சொல் கூறி அவரைச் சமாதானப்படுத்தினார். "உதங்கரே ! உமக்காக இந்திரனிடம் சொல்லி அமுதத்தை எடுத்துவரச் சொன்னேன். அவன் 'மானிடனுக்கு அமுதம் கொடுக்கலாகாது. வேறு எதையும் கொடுக்கலாமே' என்றான். நான் உமக்காக வற்புறுத்தியதன் பேரில், அமுதத்தை எடுத்துக்கொண்டு உமக்குத் தர வந்தான். நான் அமுதத்தைத் தண்ணீர் வடிவில் எடுத்துக்கொண்டு, புலையன் போலச் செல்வேன். அதற்குத் தாங்கள் சம்மதிக்க வேண்டும்' என்று சொல்லி, இந்திரன் உம்மிடம் வந்தான். ஞானியான நீர் புலையனைப் புறக்கணிக்க மாட்டீர் என்று கருதி, இந்திரனுடைய நிபந்தனைக்கு நான் சம்மதித்தேன். நீரோ வெறுப்படைந்து புலையன் தந்த அமுதத்தைப் புறக்கணித்துவிட்டீர்" என்று சொன்னார்.

கண்ணன் சொன்ன விளக்கத்தைக் கேட்டு, உதங்கர் நாணமடைந்தார்.

# பொருள் கிடைத்தது

உதங்கருக்கு வரத்தைக் கொடுத்த பின்பு, கண்ணன் துவராகையை நோக்கிப் புறப்பட்டார். அவர் துவாரகையை அடைந்ததும் நகர மக்கள் அவரை உற்சாகமாக வரவேற்றார்கள்.

அவர்களுடன் அளவளாவி நலம் விசாரித்துவிட்டு, கண்ணன் தம் தாய் தந்தையரைக் காணச் சென்றார். சந்தித்து அவர்கள் இருவரையும் வணங்கினார். பாரதப் போர் நடந்ததை தம் பெற்றோருக்குச் சொன்னார்.

* * *

கண்ணன் துவாரகை திரும்பிய பின்பு, யுதிட்டிரர் மருத்தனுடைய தனத்தைக் கொண்டுவருவது பற்றித் தம் சகோதரர்களுடன் ஆலோசித்தார். "வீரர்களே! தவத்தில் முதிர்ந்த வியாசர் அசுவமேத யாகம் செய்வது குறித்துச் சொன்னதை நீங்கள் செவிமடுத்தீர்கள். அவர் சொன்னபடி செய்தால் நிச்சயம் நன்மை உண்டாகும். அதற்குப் போதிய செல்வம் நம்மிடம் இல்லை. அதனால்தான் மருத்தனுடைய தனத்தைப்பற்றி வியாசர் நம்மிடம் சொன்னார். நீங்கள் விரும்பினால் நாம் எல்லோரும் இமய மலைக்குச் சென்று அந்தச் செல்வத்தைக் கொண்டுவருவோம்; உங்கள் அபிப்பிராயம் என்ன?" என்று கேட்டார்.

யுதிட்டிரர் இப்படிச் சொன்னதும் பீமன் அவரைக் கை கூப்பி வணங்கினான். "அரசே! மகரிஷி வியாசர் சொன்னபடி நாம் செய்வோம். மருத்தனுடைய தனத்தைத் தருமப்படி அடைவோம். பர்வதராஜனையும் பரமசிவனையும் வணங்கி அந்தச் செல்வத்தை நாம் எடுத்து வருவோம். முன்பு அர்ச்சுனனுக்குப் பாசுபதத்தைக் கொடுத்தவர், இப்போது அவசியம் அந்தத் தனத்தை எடுத்துக்கொள்ள நமக்கு அருள் புரிவார். அசுவமேத யாகத்தையும் நிறைவேற்றி வைப்பார்" என்று சொன்னான்.

பீமன் பணிவுடன் இப்படிச் சொன்னதைக் கேட்டு யுதிட்டிரர் மகிழ்ச்சி அடைந்தார். அர்ச்சுனன் முதலானவர் களும் பீமன் சொல்லியதை அங்கீகரித்தார்கள்.

பிறகு ஒரு நல்ல நாள் பார்த்து இமய மலை சென்று, செல்வத்தை எடுத்து வர நிச்சயித்தார்கள். திருதராட்டிர னிடமும் குந்தியிடமும் விடைபெற்றுக்கொண்டு புறப்பட் டார்கள். வந்திகளும் மாகதர்களும் தோத்திரம் செய்து போற்ற யுதிட்டிரர் சென்றார். பரிவாரத்தினர் புடை சூழ்ந்து வரச் சென்ற அவர், ஆறுகளையும் குளங்களையும் வனங் களையும் கடந்து இமய மலையை அடைந்தார்.

அடைந்ததும் தனக்கும் தன் பரிவாரத்தினருக்கும் பாடி வீடு முதலியன அமைக்கச் செய்தார்.

அன்று இரவு யுதிட்டிரர் முதலானவர்கள் உபவாசம் இருந்து முக்கண்ணரைத் துதித்தார்கள். பொழுது புலர்ந் ததும் செல்வம் இருக்கும் இடத்தை அறிந்து, பலி முதலியன கொடுத்தார்கள். வியாசரை முன்னிட்டுக்கொண்டு வந் திருந்த யுதிட்டிரர், பிறகு அந்த இடத்தைத் தோண்டும்படி உத்தரவிட்டார்.

தோண்டியதும் பல வகையான அழகிய தங்கப் பாத்தி ரங்கள் அங்கே கிடைத்தன. குடங்கள், அண்டாக்கள், சிறு குடங்கள், கரண்டிகள் முதலிய ஆயிரக் கணக்கில் அங்கே கிடைத்தன.

அவற்றை எடுத்து, ஒட்டகங்கள், யானைகள், குதிரைகள், தேர்கள் ஆகியவற்றில் ஏற்றும்படி உத்தரவிட்டார் யுதிட் டிரர்.

மீண்டும் முக்கண்ணரை வழிபட்டு, வியாசரிடம் விடை பெற்றுக்கொண்டு, பாண்டவர்கள் அத்தினபுரத்தை நோக் கிப் புறப்பட்டார்கள். செல்வத்தின் பாரம் தாங்காது வாக னங்கள் மெதுவாக ஊர்ந்து சென்றன. இடையிடையே தங்கி ஓய்வு எடுத்துக்கொண்டு, மிக்க மகிழ்ச்சியுடன் பாண்ட வர்கள் அத்தினபுரத்தை அடைந்தார்கள்.

## பரீட்சித்து

அசுவமேத யாகம் நடக்கப் போவதை அறிந்த கிருஷ்ணன், சுபத்திரை, பலராமர் முதலிய சுற்றத்தாரை அழைத்துக்கொண்டு முன்னதாகவே அத்தினபுரத்துக்கு வந்தார்.

அவரை திருதராட்டிரனும் விதுரரும் யுயுத்சுவும் முறைப்படி வரவேற்றார்கள். அவர்களால் நன்கு உபசரிக்கப் பெற்று, அத்தினபுரத்தில் கிருஷ்ணன் தங்கியிருந்த சமயம், அபிமன்யுவின் மனைவி உத்தரைக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது.

அசுவத்தாமா ஏவின பிரம்மாத்திரத்தால் பீடிக்கப்பட்டு இருந்த காரணத்தால் அந்தக் குழந்தை செத்துப் பிறந்தது. இதைக் கண்ட அந்தப்புரத்து மாதர்கள் துக்கமேலிட்டு அலறினார்கள். "கிருஷ்ணா! இங்கே வா" என்று சொல்லி, குந்தி அழைத்தாள்.

உடனே அந்தப்புரத்துக்கு வேகமாகச் சென்றார் கண்ணன். குந்தி, திரௌபதி, சுபத்திரை முதலியவர்கள் அழுது கொண்டு இருந்தனர். குந்தி, கண்களில் நீர் மல்கி நிற்க, கண்ணனை அணுகி, தழுதழுத்த குரலில், "மாதவா! நீதான் எங்களுக்குக் கதியாவாய்: இந்தக் குலம் தழைப்பது உன் கையில் இருக்கிறது. அசுவத்தாமாவின் அத்திரத்தால் பீடிக்கப்பட்டு உன் மருமகன் அபிமன்யுவுக்கு மகன் பிறந்திருக்கிறான். 'குழந்தை அத்திரத்தினால் பீடிக்கப்பட்டு மரித்துப் பிறந்தால் அதை நான் உயிர்ப்பிக்கிறேன்" என்று நீ வாக்களித்தாய், அதன்படி செய்" என்று சொன்னாள்.

குந்தி சொல்லி முடித்ததுதான் தாமதம், அவளும் அந்தப்புரத்திலிருந்த மற்றப் பெண்களும் துக்கம் மேலிட்டுத் தரைமீது விழுந்துவிட்டார்கள். "வாசுதேவருடைய மருமகன் அபிமன்யுவுக்குக் குழந்தை செத்துப் பிறந்திருக்கிறது" என்று சொல்லி அழுதார்கள்.

வசுதேவர் குந்தியைத் தூக்கி, அவளுக்குச் சமாதானம் சொன்னார்.

சுபத்திரையும் தன் தமையனிடம் தன் துக்கத்தை வெளியிட்டு அழுதாள். "தாமரைக் கண்ணரே! கௌரவர்கள் நசித்து இருக்கும் இது சமயம் பார்த்தருக்குப் பேரன் செத்துப் பிறந்திருக்கிறான். அசுவத்தாமா ஏவின அத்திரம் உத்தரையின் கர்ப்பத்தை பாதித்துவிட்டது அசுவத்தாமா அத்திரத்தை ஏவின சமயம் 'பிராமணர்களில் கடைப்பட்டவனே! உனது எண்ணம் நிறைவேறாது. அபிமன்யுவின் குழந்தையை உயிர் பிழைக்கச் செய்கிறேன்' என்று நீர் சொன்னீர். அதன்படி இந்தக் குழந்தையை உயிர்பெற்று எழச் செய்யும். இல்லையேல் நான் உயிர் தரியேன். மழை பொழியும் மேகம் பயிரைச் செழிக்கச் செய்வதுபோல, அபிமன்யுவின் குழந்தையைப் பிழைக்கச் செய்யும். நீர் நினைத்தால் ஆகாதது இல்லை" என்று வேண்டினாள்.

சுபத்திரை இவ்வாறு புலம்பி அழுததும், "ஆகட்டும்" என்று கண்ணன் உரக்கப் பதில் சொன்னார். கோடையில் நலிவுறும் மாந்தருக்கு, குளிர்ந்த நீர் மகிழ்ச்சி அளிப்பதைப் போல, அவர்கள் உள்ளங்களை மகிழ்வித்தார்.

பிறகு அவர் உத்தரையின் பிரசவ அறைக்குள் நுழைந்தார். அப்போது திரௌபதி உத்தரையிடம் சென்று, "உன் கணவரின் மாமன், மகிமை வாய்ந்த கண்ணன் இதோ வருகிறார்" என்று சொன்னாள்.

உடனே உத்தரை கண்ணீரை அடக்கி, ஆடையைச் சரிப்படுத்திக்கொண்டாள். கோவிந்தரைக் கண்டதும் பலவாறு அவள் புலம்பினாள். "மகிமை வாய்ந்தவரே! அசுவத்தாமாவின் அத்திரத்தால் எரிக்கப்பட்டுப் பிறந்திருக்கும் இந்தக் குழந்தையை உயிர்பெறச் செய்யும். அந்த அத்திரத்தால் நான் மடிந்திருந்தாலும் மகிழ்ச்சியாய் இருந்திருக்கும். உம்மை நான் வணங்குகிறேன். குழந்தையை மடியில் வைத்துக்கொண்டு உம்மை நான் வணங்க வேண்டும் என்று ஆசைப்பட்டேன். அது இப்போது வீணாகிவிட்டது" என்று புலம்பி, மூர்ச்சித்துக் கீழே விழுந்துவிட்டாள் உத்தரை.

இதைப் பார்த்ததும் கௌரவ குல மாதர் அனைவரும் அழுதார்கள்.

மூர்ச்சை தெளிந்த உத்தரை குழந்தையை மடியில் தூக்கி வைத்துக்கொண்டு, பைத்தியம் பிடித்தவள்போலப் புலம்பினாள். "குழந்தாய்! தருமத்தை அறிந்தவரின் புதல்வரான நீ ஏன் தருமத்தைத் தெரிந்துகொள்ளாமல் இருக்கிறாய்? விருஷ்ணி குல வீரரான கண்ணபிரானை நீ ஏன் வணங்காமல் இருக்கிறாய்?" என்று சொல்லி, மறுபடியும் மூர்ச்சித்துக் கீழே விழுந்துவிட்டாள்.

பின்னர் மூர்ச்சை தெளிந்து, தாமரைக் கண்ணரைக் கை கூப்பி வணங்கினாள்.

கண்ணன் அவள்மீது பரிவுகொண்டு, பிரமாத்திரத்தின் வேகத்தைத் திருப்பி அழைத்தார். "உத்தரையே! நான் பொய் சொல்லவில்லை. சகலரும் பார்த்திருக்க இந்தக் குழந்தையை நான் உயிர்ப்பிக்கப் போகிறேன். விளையாட்டுக்காகக்கூட நான் பொய் சொன்னது கிடையாது. போரில் புறங்காட்டினதும் இல்லை. இது உண்மையாயின் இந்தக் குழந்தை பிழைக்கட்டும்" என்று சொல்லி, மகிமை பொருந்திய தமது பாதத்தால், குழந்தையைத் தலைமுதல் கால்வரை தடவிக் கொடுத்தார்.

உடனே அந்தக் குழந்தை மெல்ல மெல்ல உணர்வு பெற்று அசைந்தது: அந்த மாளிகையும் பெருத்த பிரகாசம் அடைந்தது. பரதகுல மாதர்கள் அளவற்ற மகிழ்ச்சி அடைந்தார்கள்; கண்ணபிரானை மனமார வாழ்த்தினார்கள்.

உத்தரை எழுந்து, குழந்தையைக் கையில் எடுத்துக் கொண்டு வாசுதேவரை வணங்கினாள்.

கண்ணன் மகிழ்ச்சி அடைந்தார். "குலம் க்ஷீண நிலையில் இருக்கும் சமயம் பிறந்ததனால் பரீட்சித்து என்ற பெயரில் இந்தக் குழந்தை விளங்கட்டும்" என்று குழந்தைக்குப் பெயர் சூட்டினார் கண்ணன்.

# அசுவம் புறப்பட்டது

பரீட்சித்து பிறந்து ஒருமாதம் ஆயிற்று; செல்வம் எடுத்து வரச் சென்ற பாண்டவர்கள் இமய மலைச் சாரலிலிருந்து திரும்பினார்கள். வரும் வழி முழுதும் சங்கரரை நினைந்த வாறு அவர்கள் வந்துகொண்டிருந்தார்கள்.

பாண்டவர்கள் திரும்புகிறார்கள் என்பது தெரிந்து, நகர மாந்தர்கள் அத்தினாபுர நகரைத் தோரணங்களால் அலங்கரித் தார்கள்; கொடிகளாலும் இதர பொருள்களாலும் வீதிகளை அலங்கரித்தார்கள். பாண்டவர்கள் நலம்பெறும் பொருட்டு, கோயில்களில் பூசை செய்யும்படி விதுரர் கட்டளையிட் டார். ஆடலும் பாடலும் இசையும் பெரு முழக்கமாக முழங்கின.

மக்கள் மகிழ்ச்சி அடைந்தார்கள்; ஆடவரும் பெண்டி ரும் பாண்டவர்களை எதிர்கொண்டு வரவேற்கப் புறப்பட் டார்கள்.

பாண்டவர்கள் அருகில் வந்துவிட்டார்கள் என்பதை அறிந்த கிருஷ்ணன் சுற்றத்தாருடன் சென்று அவர்களை எதிர் கொண்டு வரவேற்கப் புறப்பட்டார். பாண்டவர்களும் விருஷ்ணிகளும் சந்தித்து, அளவளாவி, அத்தினாபுரத்துக்கு வந்தார்கள்.

வந்ததும் திருதராட்டிர மன்னனிடம் சென்று தங்கள் பெயரைச் சொல்லி, அவனுடைய பாதங்களை வணங்கினார் கள்; பிறகு காந்தாரி, குந்தி, விதுரர் முதலியவர்களையும் வணங்கினார்கள். யுயுத்சு பாண்டவர்களை வணங்கினான்.

அதன் பின்னர் அபிமன்யுவுக்கு மகன் பிறந்திருப்பதை அறிந்து அகமகிழ்ந்தார்கள்.

சில தினங்களுக்குப் பின்னர் வியாச மகரிஷி அத்தினா புரத்துக்கு வந்தார். அவரை வரவேற்று உபசரித்த பின்னர், பாண்டவர்கள், கௌரவர்கள், விருஷ்ணிகள், அந்தகர்கள் முதலியோர் அவரைச் சூழ்ந்து உட்கார்ந்தார்கள். அப்

போது யுதிட்டிரர் அவரை நோக்கி, "பகவானே! உமது அருளால் கிட்டிய செல்வத்தைக் கொண்டு அசுவமேத யாகம் செய்ய விரும்புகிறேன். யாகத்தைத் தொடங்க நீர் அனுமதிக்க வேண்டும். உமக்கும் கண்ணனுக்கும் நாங்கள் கட்டுப்பட்டவர்கள்" என்று சொன்னார்.

"அரசனே! உனக்கு நான் அனுமதி கொடுக்கிறேன். மேலே செய்ய வேண்டியதைச் செய். அசுவமேத யாகத்தைச் செய்து, பாவங்களைப் போக்கிக்கொள்" என்று வியாசர் பதில் சொன்னார்.

சித்ரா பௌர்ணமி யன்று, யுதிட்டிரருக்கு, தீட்சை செய்து வைத்து யாகத்தைத் தொடங்கினார்கள். நல்ல குதிரை ஒன்றைத் தேர்ந்தெடுத்து, சாத்திர முறைப்படி தேச சஞ்சாரம் செய்யவிட்டார்கள். குதிரைக்குக் காவலாக அர்ச்சுனனை அனுப்பினார்கள். மற்ற மன்னர்கள் எல்லாருக்கும் அர்ச்சுனன் மூலமாகவே யாகத்துக்கு அழைப்பு அனுப்பினார்கள்.

குதிரை முதலில் வட திசையில் சென்றது. அந்தத் திசையில் இருந்த திரிகர்த்தர் முதலான அரசர்களை அர்ச்சுனன் வென்றான். பிறகு மூன்று தினங்கள் பகதத்தன் மகன் யக்ஞதத்தனோடு போர் செய்து அவனை வென்றான். "அரசர் யுதிட்டிரர் நடத்தும் அசுவமேத வேள்விக்கு வந்து சேர்" என்று யக்ஞதத்தனுக்குக் கட்டளையிட்டு அப்பால் சென்றான் அர்ச்சுனன்.

பிறகு குதிரை சிந்து நாட்டை அடைந்தது. ஜயத்ரதனைக் கொன்ற அர்ச்சுனன் தங்கள் நாட்டுக்கு வந்திருக்கிறான் என்பதை அறிந்த சிந்து நாட்டினர் அவனைக் கடுமையாக எதிர்த்தார்கள். பதிலுக்கு அவர்களைத் தாக்கி அர்ச்சுனன் துன்புறுத்தினான்; அனேக வீரர்களைக் கொன்றான்.

இதை அறிந்த திருதராட்டிரன் மகள் துச்சலை, தன் பேரன் சிறு வயதுப் பாலகனைத் தேரில் ஏற்றிக்கொண்டு, அர்ச்சுனனிடம் வந்தாள்.

தன் தங்கையைக் கண்டதும் கையிலிருந்த வில்லை அர்ச்சுனன் கீழே போட்டுவிட்டான். துச்சலையை நோக்கி, "தங்கையே! உனக்கு நான் என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டான்.

"குந்தி மைந்தனே! வீரனே! உன் மருமகனுடைய குழந்தையான இந்தப் பாலன் உன்னை வணங்குகிறான்" என்று சொன்னாள்.

"இவன் தந்தை சுரதன் எங்கே?" என்று கேட்டான் அர்ச்சுனன்.

"வீரனே! தன் தந்தை மாண்டதால் வருத்தத்துடன் இருந்த என் புதல்வன், மீண்டும் நீ எங்கள் நாட்டுக்குக் குதிரையைத் தொடர்ந்து வந்திருக்கிறாய் என்பதைக் கேள்வியுற்று, பீதியால் உயிர் துறந்தான். அதனால்தான் அவன் மைந்தனை அழைத்துக்கொண்டு நான் உன்பால் வந்தேன்" என்று பதில் சொன்னாள் துச்சலை.

துச்சலை சொன்ன பதிலைக் கேட்டு, அர்ச்சுனன் பெரிதும் வருந்தினான். "இதற்கு எல்லாம் அற்பனான அந்தத் துரியோதனனைத்தான் நிந்திக்க வேண்டும். அவனுடைய செருக்கினால்தான் உறவினர்களை நான் நமன் உலகு அனுப்ப நேர்ந்தது" என்று சொல்லிவிட்டு, துச்சலையை அன்புடன் தழுவிக்கொண்டான் அர்ச்சுனன்.

இதன் பின்னர், யாகக் குதிரையைப் பின்தொடர்ந்து, அர்ச்சுனன் பற்பல நாடுகளுக்கும் சென்றான்.

## அசுவமேதம்

பற்பல நாடுகளுக்கும் சென்ற குதிரை பிறகு, அத்தினாபுரத்தை நோக்கித் திரும்பிற்று. யாகக் குதிரை திரும்பி வருகிறது என்பதை,சாரணர்கள் யுதிட்டிர மன்னருக்குத் தெரிவித்தார்கள். அர்ச்சுனன் வாகைசூடி வருவதை அறிந்து யுதிட்டிரர் களிப்புற்றார்.

அவர் தம் மற்றத் தம்பியர்களை நோக்கி, 'பீமசேனா! அர்ச்சுனன் திரும்பி வருகிறான்; குதிரையும் திரும்புகிறது. யாகத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைத் தொடங்கலாம்; இடத்தைத் தேர்ந்து எடுக்கலாம்'' என்று சொன்னார்.

பீமசேனன் களிப்புற்று யாகசாலை முதலியவற்றை அமைக்க ஏற்பாடு செய்தான். அரசர்கள், அரசியர், அந்தணர்கள் தங்குவதற்கு வீடுகளை ஆங்காங்கு அமைத்தான்.

பிறகு அரசர்களுக்குத் தூதுவர்களை அனுப்பினான்' அரசர்கள் யுதிட்டிரரின் விருப்பத்துக்கு இசைந்து, இரத்தினங்கள், ஆயுதங்கள், வாகனங்கள் ஆகியவற்றைக் கொணர்ந்தார்கள்.

யாகத்துக்கு வந்த அரசர்களையும் அந்தணர்களையும் யுதிட்டிரர் வரவேற்று உபசரித்தார்; அவரவர் தகுதிக்கு ஏற்ப வீடுகளைக் கொடுக்கச் செய்தார்; தாமே அவர்களுடன் பின்சென்று விடுதிகளைக் காட்டினார்.

யாகத்துக்குத் தேவைப்படும் பாத்திரங்கள் அனைத்தும் தங்கத்தால் செய்யப்பட்டு இருந்தன. இவற்றை எல்லாம் யாகத்துக்கு வந்திருந்தவர்கள் பார்வையிட்டார்கள்.

விருந்து வெகு விமரிசையாக நடந்தது. இது சமயம் அர்ச்சுனன் அனுப்பிய தூதன் வந்து, அர்ச்சுனன் வந்து கொண்டிருப்பதை யுதிட்டிரருக்குத் தெரிவித்தான்.

யுதிட்டிரர் களிப்புற்று நல்ல செய்தியைச் சொன்ன தூதனுக்குச் சன்மானம் வழங்கினார். யுதிட்டிரர், கண்ணன், திருதராட்டிரன் முதலியோர் எதிர்கொண்டு அர்ச்சுனனை வரவேற்றனர்.

திருதராட்டிரன், யுதிட்டிரர் முதலானவர்களை அர்ச்சுனன் வணங்கினான்; கண்ணபிரானை ஆலிங்கனம் செய்து கொண்டான். பிறகு மனமகிழ்ச்சியுடன் ஓய்வு எடுத்துக் கொண்டான்.

பிறகு யாகம் தொடங்க வேண்டிய சமயம் வந்தது; குறிப்பிட்ட நேரத்தில் யாகத்தைத் தொடங்கும்படி வியா

சர் சொன்னார். "யுதிட்டிரா! புண்ணியத்தை நல்குவதான அசுவமேத யாகத்தைச் செய்து, போரினால் ஏற்பட்ட பாவத்தைப் போக்கிக்கொள்" என்று கூறினார்.

யுதிட்டிரர் தீட்சை செய்துகொண்டார். ரித்துவிக்குகள் சாத்திரத்தில் சொல்லிய முறைப்படி குதிரையைக் கொன்று, திரௌபதியை அதன் அருகில் உட்காரச் செய்தார்கள்; பிறகு குதிரையின் வபையை எடுத்து, மணத்தைச் செலுத்திப் பக்குவம் செய்தார்கள். அப்பொழுது யுதிட்டிரர் தம் தம்பியர்களுடன் இருந்து, வபையின் புகையை முகர்ந்து, பாவங்களைப் போக்கிக்கொண்டார்.

யாகம் வெற்றிகரமாக நிறைவேறிற்று; அந்தணர்களுக்கும் மகரிஷிகளுக்கும் வியாசருக்கும் பொன்னையும் பூமியையும் வழங்கினார்.

தமக்கு யுதிட்டிரர் அளித்த பூமியை வியாசர் பெற்றுக்கொண்டார். பிறகு அவர் யுதிட்டிரரிடம் "அரசே! நீ பூமியைத் திரும்பப் பெற்றுக்கொள். அதற்குப் பதிலாகப் பொன்னைக் கொடு" என்று சொன்னார்.

யுதிட்டிரர் அவ்வாறே செய்தார். அந்தணர்கள் யுதிட்டிரர் அளித்த பொன்னைப் பெற்றுக்கொண்டு மகிழ்ச்சியுடன் வீடு திரும்பினார்கள்.

அதேபோல யுதிட்டிரர் அரசர்களுக்கும் மரியாதை செய்தார். யானைகள், குதிரைகள், இரத்தினங்கள் முதலியவற்றை வழங்கிக் கௌரவித்தார்.

"கொடுங்கள், சாப்பிடுங்கள், திருப்தி" என்ற சொற்கள் மிகுதியாகக் கேட்டன.

## கீரிப்பிள்ளை

யுதிட்டிரர் நடத்திய அசுவமேத யாகம் வெகு விமரிசையாக நடந்து முடிந்தது. திசைகள்தோறும் பறையறைந்து அழைக்கப்பட்டு வந்திருந்த ஏழை எளியவர்களும் அந்தணர்களும் அநாதைகளும் தானம் பெற்றார்கள். யுதிட்டிரரின் இந்தச் செயலைப் பாராட்டிப் பூமாரி பொழிந்தது.

இந்தச் சமயத்தில் எங்கிருந்தோ ஒரு கீரிப்பிள்ளை திடீ ரென்று யாகசாலைக்குள் நுழைந்து, அங்கு இருப்பவர்கள் அனைவரையும் நோக்கிப் பெரிய சிரிப்புச் சிரித்தது. "மன்னர் களே! நீங்கள் செய்த அசுவமேத யாகத்தைப்பற்றிப் பெருமையடித்துக்கொள்ள வேண்டாம். முன்பு குருக்ஷேத் திரத்தில் வசித்த உஞ்சவிருத்திப் பிராமணர் ஒருவர் தானம் செய்த ஒரு படி மாவுக்கு, இந்த யாகம் ஈடாகாது" என்று மானுடக் குரலில் கூறிற்று.

கீரி இவ்வாறு சொன்னதைக் கேட்டு, சபையோர் வியப் படைந்தார்கள். அந்தக் கீரிப் பிள்ளையின் உடம்பில் ஒரு பாதி பொன் மயமாய்ப் பிரகாசித்தது.

ஆச்சரியமுற்ற அந்தணர்கள் கீரி அருகே சென்று, "சான் றோர்கள் கூடியிருக்கும் இந்த யாகத்துக்கு நீ எங்கிருந்து வந்தாய்? நீ யார்? சாஸ்திர முறை தவறாமல் நாங்கள் நடத்தி முடித்திருக்கும் இந்த யாகத்தை எதற்காக நீ நிந்திக் கிறாய்? என்ன காரணத்தைக்கொண்டு இந்த யாகத்தை நீ பழிக்கிறாய்? யாகத்துக்கு வந்திருந்தோர் அனைவரும் கிரமப் படி பூசிக்கப்பட்டார்கள்; மனம் திருப்தியடையும் வகையில் தானங்கள் வழங்கி இருக்கிறார்கள். மந்திரங்களை ஓதி, அக்னி யில் முறையாக அவி சொரியப்பட்டன. நான்கு வருணத் தாரும் மகிழ்ச்சி அடைந்து இருக்கிறார்கள். அப்படி இருக் கும்போது நீ ஏன் குறை கூறுகிறாய்? அதை எங்களுக்கு விளக்கிச் சொல்" என்று கேட்டார்கள்.

அந்தணர்கள் இப்படிக் கேட்டதும் கீரி மீண்டும் சிரித் தது. "அந்தணர்களே! நான் சொன்னது பொய்யன்று; பொறாமை வயப்பட்டு நான் இவ்வாறு கூறவில்லை. நீங்கள் நடத்திவைத்த இந்த யாகம், அந்தப் பிராமணர் தானம் செய்த ஒரு படி மாவுக்குச் சமமாகாது. சிறந்த கொடை யாளியான அவர் குருக்ஷேத்திரத்தில் வசித்தவர். அவர் செய்த தானத்தின் பயனாய் அவரும் அவர் மனைவியும் மகனும் மரு மகளும் சொர்க்கத்தை அடைந்தனர். நான் பார்த்த நிகழ்ச் சியை உங்களுக்குக் கூறுகிறேன்: கேளுங்கள்.

முன்பு குருசேத்திரத்தில், உஞ்சவிருத்தி செய்து, ஒரு பிராமணர் வாழ்ந்து வந்தார். தரும சிந்தையுள்ள அவர் மனைவி, மகன், மருமகள் இவர்களுடன் வசித்து, தவம் செய்து வந்தார். கீழே உதிர்ந்து கிடக்கும் தானியங்களைப் பொறுக்கி, அதை உணவாகக்கொண்டு, அவர்கள் நால்வரும் காலத்தையும் பொழுதையும் கழித்து வந்தனர். ஒவ்வொரு நாளும் அவர்கள் பிற்பகலில்தான் சேர்ந்து உணவு அருந்து வார்கள். போதிய அளவு தானியம் கிடைக்காவிட்டால் அன்று, உபவாசம் இருந்து மறு தினம் பிற்பகலில் எல்லாரும் சாப்பிடுவார்கள்.

இப்படி அவர்கள் வாழ்ந்து வந்த காலத்தில், மழை யின்மை காரணமாக, அந்த நாட்டில் கடும் பஞ்சம் உண்டா யிற்று. உணவு கிடைக்காமல் மக்கள் பெரிதும் அவதிப் பட்டார்கள். மழையின்மையால் விவசாயம் நடக்கவில்லை; அதன் காரணமாக, பிராமணக் குடும்பத்தாருக்கு உணவு கிடைக்கவில்லை. அதனால் அந்தக் குடும்பத்தார் பல நாட் கள் பட்டினி கிடந்தார்கள்.

பசி அதிகரிக்கவே ஒரு நாள் பகல் நேரத்தில், வெயில் காய்ந்து கொண்டிருந்தபொழுது அவர்கள் எல்லாரும் உஞ்சவிருத்திக்காகப் புறப்பட்டார்கள். அன்று ஒன்றும் கிடைக்கவில்லை. பட்டினியாக இருந்துவிட்டு மறு தினம் புறப்பட்டுச் சென்று, பிற்பகலில் ஒரு படி சோளம் சேகரித்து வந்தார்கள். அதை மாவாக அரைத்தார்கள். ஜபம் முத லியவற்றை முடித்துக்கொண்டு, மாவை ஆளுக்குக் கால் படி வீதம் பிரித்துக்கொண்டு சாப்பிட உட்கார்ந்தார்கள்.

இந்தச் சமயத்தில் ஒரு பிராமணர், பசியுடன் வந்து சேர்ந்தார். தங்கள் இல்லத்துக்கு விருந்தினர் ஒருவர் வந் திருப்பதைக் கண்டு அவர்கள் மகிழ்ச்சி அடைந்தார்கள். அவரை வரவேற்று உபசரித்தார்கள். அன்பு கனிய "பெரிய வரே! ஆசனத்தில் அமர்ந்து சுத்தமான இந்தச் சோள மாவைச் சாப்பிடுங்கள்" என்று சொன்னார்கள்.

விருந்தினராக வந்திருக்கும் அந்தப் பிராமணருக்கு, உஞ்சவிருத்திப் பிராமணர் முதலில் தன் பங்குக்குள்ள சோள மாவைக் கொடுத்தார்.

)னர் அதைச் சாப்பிட்டார்; பசி அடங்கவில்லை. இது விவரத்தை முகக்குறிப்பினல் அறிந்துகொண்ட உஞ்ச விருத்திப் பிராமணரின் மனைவி தனக்குரிய கால் பாகத்தை யும் கொடுக்க முன்வந்தாள். "நாதா! என்னுடைய பாகத் தையும் இந்த விருந்தினருக்குக் கொடும். அதை உண்டு அவர் திருப்தி அடையட்டும்" என்று சொன்னாள்.

அதற்கு அந்த உஞ்சவிருத்திப் பிராமணர், "தேவி! புழு, பறவை, விலங்கு முதலியனவும், தம் இனத்துப் பெண்களைப் பேணிப் பாதுகாக்கின்றன. அறம், பொருள், இன்பம், குல விருத்தி, பிதிர்க்கடன், தன் கடமை அனைத்தும் மனைவியை அடுத்து இருக்கின்றன. மனைவி இல்லாவிட்டால் மேலே சொன்ன தருமங்களை ஒருவன் நடத்தவே முடியாது. எலும் பும் தோலுமாக இருக்கும் உன்னைப் பட்டினி போட்டு விட்டு, விருந்தினரை உபசரிப்பதால் யாது பயன்?" என்று சொன்னார்.

உடனே அவர் மனைவி, "நாதா! அறம் பொருள் இரண் டும் கணவன் மனைவி இருவருக்கும் பொதுவானவை. தயவு செய்து என் பங்கையும் விருந்தினருக்குக் கொடும். சத்தியம், இன்பம், தருமம் முதலிய அனைத்தும் கணவனாலேயே பெண் களுக்குக் கிடைக்கின்றன. குழந்தைச் செல்வமும் கணவனால் தான் கிடைக்கிறது. ஆகையால் பசியால் வாடும் நீர் உமது பங்கை அதிதிக்குக் கொடுத்ததுபோல், என் பங்கையும் அவருக்குக் கொடும்" என்று சொன்னாள்.

அதன்படி உஞ்சவிருத்திப் பிராமணர் மனைவியிடமிருந்து மாவை வாங்கி, அதை விருந்தினருக்குக் கொடுத்தார். அதை வாங்கிச் சாப்பிட்டும் விருந்தினர் திருப்தி அடையவில்லை. இதைக் கண்டு உஞ்சவிருத்திப் பிராமணர் பெரிதும் கவலைப் பட்டார்.

உடனே அவருடைய மகன், "அப்பா! வயது முதிர்ந்த தங்களைக் காப்பாற்றுவது எனது தலையாய கடமை. ஆகையால் எனது பங்கை விருந்தினருக்குக் கொடும்" என்று சொன்னான்.

அதற்கு அந்த உஞ்சவிருத்திப் பிராமணன், "மகனே! உனது சீலத்தைக் கண்டு மகிழ்கிறேன். பெரியவர்களால் பசியைப் பொறுத்துக்கொள்ள முடியும். வாலிபர்களால் முடியாது. நீண்ட காலம் தவம் இயற்றியுள்ள நான் மரணத்துக்கு அஞ்சவில்லை" என்று சொன்னார்.

மைந்தன் அவர் கூற்றுக்கு உடன்படவில்லை. "வயது முதிர்ந்த தந்தையைக் காப்பாற்றுவது மகனுடைய கடமை. தந்தை வேறு மகன் வேறு என்பது இல்லை. தந்தையே மகனாகப் பிறக்கிறார் என்று பெரியவர்கள் கருதுகின்றனர். ஆகையால் எனது பங்கையும் விருந்தினருக்குக் கொடும்" என்று தந்தையை அவன் வேண்டினான்.

"மகனே! புலன் அடக்கத்திலும் சீலத்திலும் மேம்பட்டு நீ விளங்குகிறாய். உன்னை நான் பரீட்சித்துப் பார்த்தேன். நீ வெற்றி பெற்றுவிட்டாய். உனது பங்கை நான் பெற்றுக் கொள்கிறேன்" என்று சொல்லி, மகிழ்ச்சியுடன் வாங்கி அந்த மாவையும் அதிதியிடம் கொடுத்தார்.

மகனுடைய பங்கையும் சாப்பிட்டுவிட்டு விருந்தினர் திருப்தி அடையாமல் இருந்தார். இதைக் கண்டு உஞ்சவிருத்திப் பிராமணர் வெட்கப்பட்டார். யாது செய்வது என அறியாது திகைத்து நின்றார்.

இது சமயம் தனது பங்கை எடுத்துக்கொண்டு, பதிவிரதையான மருமகள் மாமனாரை அணுகினாள். "எனது பங்கையும் வாங்கி அதிதிக்குக் கொடும். அதனால் நற்பேற்றை நான் அடைவேன்; நல்ல உலகங்களையும் அடைவேன்" என்று சொன்னாள்.

"சிறந்த ஒழுக்கமுள்ள பெண்ணே! பசியால் மெலிந்து வாடும் உன்னிடமிருந்து பங்கை வாங்கி, அதிதிக்கு நான் கொடுத்தால் அது தருமத்தை அழித்த செயலாகும். நீ பசி

யால் வருந்துவதைப் பார்த்துக்கொண்டு இருக்க எனக்கு மனம் வராது'' என்று சொன்னார்.

அதற்கு மருமகள், ''பெரியீர்! நீர் எனக்குத் தெய்வத்துக்குத் தெய்வமாகவும் குருவுக்குக் குருவாகவும் விளங்குபவர். என் பங்கு மாவையும் நீர் பெற்றுக்கொள்ள வேண்டும். எனது உடல், பொருள், ஆவி அனைத்தும் குருவின் பணிவிடைக்காகத்தான் இருக்கின்றன. நான் நற்கதியை அடைவதற்கு நீர் உதவ வேண்டும்'' என்று நயந்து வேண்டினாள்.

மருமகள் இப்படிச் சொன்னதும் அந்தணர் அவளை ஆசீர்வதித்தார். ''நீ சகல நன்மைகளையும் அடைக'' என்று வாழ்த்தி, அவளுடைய பங்கையும் வாங்கி, அதிதியிடம் கொடுத்தார்.

விருந்தினர் உஞ்சவிருத்திப் பிராமணரின் நடத்தையை கண்டு மகிழ்ச்சி அடைந்தார். ''அந்தணர் திலகமே! சக்திக்கு ஏற்ப நியாயமாக நீர் சம்பாதித்ததைத் தானம் செய்தது குறித்து அகமகிழ்ந்தேன். நீர் செய்த மேன்மையான இந்தத் தானத்தைக் கண்டு தேவர்கள் பூமாரி பொழிகிறார்கள். தேவர்களும் ரிஷிகளும் உம்மைத் தரிசிப்பதற்கு வானத்தில் நிற்பதைப் பாரும்; தேவர்கள் திருப்தியடைந்திருப்பதால் நீர் சொர்க்கம் செல்லும்; உம்முடைய மேன்மையான தானத்தால் நீர் சொர்க்கலோகவாசியாகப் போகிறீர்' பசியானது அறிவை அழிக்கும்; தரும புத்தியைக் கெடுக்கும். ஞானிகூடத் தைரியத்தை இழப்பான். பசியை வென்றவன் சொர்க்கத்தையும் எளிதில் வெல்வான். மனைவி, மக்களையும் பொருட்படுத்தாமல் தருமத்தை நீர் பெரிதாக மதித்தீர். ஆசையை விட்டொழித்தீர். ஒருவனுக்குப் பொருள் கிடைப்பது அரிது. அதை நல்ல முறையில் தானம் செய்வது அதனிலும் அரிது. தகுந்த காலத்தில் தானம் செய்வது அதனிலும் அரிது. தானத்தில் ஈடுபாடு இருப்பது இன்னும் அரிது. ஆயிரம் கொடுக்கச் சக்தி இருந்து நூறு கொடுப்பவனும், நூறு கொடுக்கச் சக்தி இருந்து பத்துக் கொடுப்பவனும், தன்

சக்திக்கு ஏற்ப நீரை மட்டும் வழங்குபவனும் சமமான பலனைத்தான் அடைகின்றனர். அனேக அசுவமேத யாகங்களும், ராஜ்யசூய யாகங்களும் உமது இந்தத் தானத்துக்கு ஈடாகா. உங்களுக்காகக் காத்திருக்கும் விமானத்தில் ஏறி நீங்கள் சொர்க்கம் செல்லுங்கள்'' என்று சொல்லி, அந்த அதிதி அந்தணர் மறைந்தார்.

இவ்வாறு உஞ்சவிருத்தி பிராமணரின் கதையைக் கூறி விட்டு, கீரி, ''அந்தணர்களே! அந்த அந்தணர் தன் குடும்பத்தாருடன் சொர்க்கம் சென்ற பிறகு, நான் வளையிலிருந்து வெளிப்பட்டு, அந்தணர் இருந்த இடத்துக்குச் சென்றேன். அங்கே சிதறி கிடந்த சோளமா என் தலையிலும் பாதி உடம்பிலும் பட்டதால்; உடனே அவை தங்க மயமாக மாறி விட்டன. மற்றொரு விலாப்புறத்தையும் சொர்ணமயமாக்கிக் கொள்ள விரும்பி, சிறந்த தானங்கள் நடைபெறும் இடங்களுக்கு எல்லாம் சென்று புரண்டு பார்க்கிறேன். இதுவரை எனது பாதிவிலா தங்க மயமாகாமலே இருக்கிறது. தரும புத்திரர் யாகம் செய்கிறார் என்று கேள்விப்பட்டு இங்கு வந்தேன். இங்கும் என் உடலில் பாதி தங்கமயமாகாமல் இருக்கிறது. அதனால்தான் இந்த யாகம் ஒரு படி மாவுக்குச் சமமாகாது என்று நான் சொல்ல நேர்ந்தது'' என்று சொல்லிவிட்டு அந்த இடத்திலேயே கீரி மறைந்து விட்டது.

இதன் பின்னர் அந்தணர்கள் விடைபெற்றுக்கொண்டு திரும்பினார்கள். கண்ணனும் யுதிட்டிரரிடமும் திருதராட்டிரன், விதுரன், காந்தாரி, குந்தி, அர்ச்சுனன் முதலியவர்களிடமும் விடைபெற்றுக்கொண்டு துவாரகை திரும்பினார்.

# வியாசர்

அருளிய

# மகாபாரதம்

## பதினைந்து ஆண்டுகள்

வெற்றி பெற்ற பாண்டவர்கள், நாட்டைப் பரிபாலித்து வந்தார்கள். எந்தக் காரியத்தையும் திருதராட்டிரன் அனுமதி பெற்றே யுதிட்டிரர் செய்து வந்தார். புத்திரர்களை இழந்து துக்கத்தில் அழுந்தி இருக்கும் திருதராட்டிரனின் மனம் கோணாதவாறு பாண்டவர்கள் பணிவிடை செய்தனர்.

அவன் விரும்பும் உணவு வகைகளைப் பக்குவமாகச் சித்தம் செய்து கொடுத்தனர். சிறந்த படுக்கை முதலியவற்றை அமைத்துக் கொடுத்தனர்.

அரசியல் விவகாரங்களைத் திருதராட்டிரனின் அனுமதி பெற்றே யுதிட்டிரர் செய்தார். சிறையில் அடைக்கப்பட்டு இருப்பவர்களுக்கு விடுதலை அளிக்குமாறு திருதராட்டிரன் சொன்னான். யுதிட்டிரர் அதன்படி செய்தார்.

விதுரரும் சஞ்சயனும் யுயுத்சுவும் எப்பொழுதும் திருதராட்டிரன் அருகிலேயே இருந்து பணிவிடைகள் புரிந்தனர்.

கிருபாச்சாரியார் எப்பொழுதும் அவன் அருகிலேயே வசித்தார். கதைகள் பல சொல்லி, அவன் மனத்தில் வியாசர் ஆறுதல் ஏற்படச் செய்தார். மற்ற நாடுகளிலிருந்து குரு நாட்டுக்கு வரும் மன்னர்கள் எல்லாரும் முன்போலவே திருதராட்டிர மன்னனைக் கௌரவித்து உபசரித்தனர். 'புத்திரர்களை இழந்து துயரக் கடலில் மூழ்கியிருக்கும் மன்னரின் மனம் களிப்படையும் வகையில் நடந்துகொள்ளுங்கள்' என்று தம் சகோதரர்களுக்கு யுதிட்டிரர் கட்டளையிட்டு இருந்தார்.

குந்தியும், காந்தாரியின் மனப்போக்குக்கு இசைய நடந்து கொண்டாள். திரௌபதி, சுபத்திரை, உலூபி, சித்திராங்கதை முதலியோர் கண்ணுங் கருத்துமாய் இருந்து அவளுக்குப் பணிவிடை புரிந்தனர்.

பாண்டவர்களால் நன்கு மதிக்கப் பெற்று, திருதராட்டிர மன்னன் சுகபோகமாக வாழ்ந்து வந்தான். அவன் இடும் ஏவல்களை யுதிட்டிரர் மகிழ்ச்சியுடன் செய்தார். அவர் தம் சகோதரர்களையும் மந்திரிகளையும் நோக்கி, "திருதராட்டிர மன்னரின் கட்டளையை நிறைவேற்றுபவர்களை நான் ஆதரிப்பேன்; மீறுபவர்களைத் தண்டிப்பேன்" என்று சொன்னார்.

பாண்டவர்கள் திருதராட்டிர மன்னனை அன்போடு நடத்தினர்; அவனும் அவர்களிடம் பிரியம் காட்டி வந்தான். காந்தாரியும் பாண்டவர்களிடம் பரிவோடு நடந்து கொண்டாள்.

காலையில் எழுந்ததும் திருதராட்டிரன் உடலைச் சுத்தம் செய்துகொண்டு, ஜபம் செய்வான்; பாண்டவர்கள் வெற்றியுடனும் நீடித்த ஆயுளுடனும் வாழ வேண்டும் என்று பிரார்த்திப்பான். தன் மைந்தர்களை நினைத்து நினைத்து இடையிடையே வருத்தமடைவான்.

ஆயினும் யுதிட்டிரரிடம் திருதராட்டிரனும் காந்தாரியும் பிரியமாகவே இருந்தனர்; யுதிட்டிரரும் அவர்கள் இருவரும் மகிழ்ச்சியுடன் வாழத் தன்னால் இயன்றதை எல்லாம் செய்து வந்தார்.

ஆனால் பீமன் மட்டும் திருதராட்டிரனிடம் அன்பு பாராட்டாமல் இருந்தான். 'தீயவர்களான கௌரவர்களை நாங்கள் கொன்றோம்' என்று திருதராட்டிரன் காதில் படும்படி அடிக்கடி சொல்வான். சில சமயங்களில் திருதராட்டிரன் இடும் கட்டளையை மீறி நடக்க ஏற்பாடு செய்வான்.

துரியோதனனைப் பற்றிய நினைப்பு வரும்பொழுது எல்லாம், திருதராட்டிர மன்னனுக்குப் பீமனைப் பற்றிய நினைப்பும் உடனே வந்துவிடும். ஆகவே, எப்பொழுதும் பீமனிடம் அவன் பிரியக் குறைவாக இருந்து வந்தான். உள்ளத்தில் பிரியக் குறைவான எண்ணமும் உதட்டில் இனிமையான பேச்சையும் கொண்டு, அவர்கள் இருவரும் வாழ்ந்து வந்தனர்.

இறந்துபோன பகைவர்களான துரியோதனன், கர்ணன், துச்சாதனன் இவர்கள் மீது கட்டுக்கடங்காத கோபம் ஒரு நாள் பீமனுக்கு வந்துவிட்டது. அவன் தன் அருகே இருந்த நண்பர்களை நோக்கி, திருதராட்டிரனுக்கும் காந்தாரிக்கும் காதில் விழும்படி கடுமையான வார்த்தைகளைத் தன் தோள்களைத் தட்டிக்கொண்டு சொல்லத் தொடங்கினான்.

"குருட்டு மன்னன் திருதராட்டிரன் புதல்வர்கள் அத்திர சாத்திரங்களில் தேர்ந்தவர்கள்தான். இருந்தாலும் தூண் போன்ற எனது கைகளால், அவர்களைப் பரலோகத்துக்கு நான் அனுப்பிவிட்டேன். எந்த இரு கரங்களால் திருதராட்டிரன் புதல்வர்களை நமன் உலகுக்கு நான் அனுப்பினேனோ, அந்த இரு கரங்களும் சந்தனம் அணிந்துகொண்டு, பூரிப்புடன் இருப்பதைப் பாருங்கள்; எந்தப் பகைவர்களுக்காவது இவற்றை அசைக்கத் துணிவு பிறக்குமா? போற்றிப் புகழ்ந்து வணங்கத்தக்க கைகள் ஆகும் இவை" என்று சொன்னான்.

அம்பு போன்ற இத்தகைய கூரிய கொடுஞ் சொற்களைக் கேட்டு, திருதராட்டிர மன்னன் மனம் நொந்து போனான். காந்தாரியும் பீமனுடைய நடத்தையால் புண்பட்டிருந்தாள்;

ஆயினும் குந்தியை நினைந்து அவனை அவள் சபிக்காமல் பொறுத்துக்கொண் டிருந்தாள்.

இப்படியாகப் பதினைந்து ஆண்டுகள் கழிந்தன.

## விடை கொடு

இடையிடையே பீமன் குத்தலாகச் சொன்ன கொடுஞ் சொற்களைக் கேட்டுக் கேட்டு, வயது முதிர்ந்த திருதராட்டிர மன்னன் மனம் நொந்துபோனான். தருமபுத்திரன் அன்புடன் செய்து கொடுத்த சுகபோகங்களை அவனால் அனுபவிக்க முடியவில்லை. ஆகவே, பாண்டவர்களுக்குத் தெரியாமல் தவ வாழ்வை அவன் மேற்கொண்டான்; ஆகாரத்தைக் குறைத்துக்கொண்டான்; மென்மையான படுக்கைகளில் துயிலாமல், தரைமீது துயின்றான். காந்தாரியும் திருதராட்டிரனைப் போலவே, தவ வாழ்வை மேற்கொண்டாள்.

பீமனுடைய கொடுஞ் சொற்களை மேலும் திருதராட்டிரனால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. ஆகவே, அரண்மனையைத் துறந்து, காடு செல்ல அவன் முடிவு செய்தான் ஒரு நாள், யுதிட்டிரனையும் மற்ற கௌரவர்களையும் தன்பால் அவன் அழைத்துவரச் செய்தான். வந்ததும் யுதிட்டிரனை நோக்கி, "மைந்தா! நலத்துடன் நீ நீடு வாழ்க! உன் ஆதரவினால் பதினைந்து ஆண்டுகளை நாங்கள் அரண்மனையில் கழித்துவிட்டோம். சுகமாக வாழ்ந்து தான தருமங்களைச் செய்தேன்; சிராத்தம் செய்தேன்; எனது சக்திக்கு ஏற்ப, செய்யத்தக்கதை யெல்லாம் செய்துமுடித்தேன். புதல்வர்களை இழந்த பதிவிரதையான காந்தாரியும், மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு, என்னைப் பேணினாள். திரௌபதிக்கு அபசாரம் செய்து, உனது நாட்டைக் கவர்ந்துகொண்டிருந்த தீயோர், போரில் மடிந்துவிட்டார்கள்: போரில் புறம் கொடாமல் வீர சொர்க்கம் அடைந்தார்கள். நானும் காந்தாரியும் இனி மறுமைக்கு வேண்டிய காரியங்களைச் செய்து

கொள்ளப் பிரியப்படுகிறோம். நீ யாவும் தெரிந்தவன் ஆயிற்றே? ஆகவே, இதை நான் உனக்குச் சொல்லுகிறேன். நானும் காந்தாரியும் கிழிந்த ஆடையையும் மரப்பட்டையையும் கட்டிக்கொண்டு, காடு செல்ல எண்ணியிருக்கிறோம். அரசனான நீ அதற்கு அனுமதி கொடுக்க வேண்டும், உனக்கு ஆசி சொல்லிக்கொண்டு, வனத்தில் நாங்கள் சஞ்சரிக்கிறோம். அந்திம காலத்தில் நாட்டைப் புதல்வனிடம் ஒப்படைத்து விட்டு, காடு செல்வது நம் குல வழக்கம். அரசனாய் இருப்பதால், நான் புரியும் தவ வாழ்வில் உனக்கும் பாகம் உண்டு. நாட்டில் நடக்கும் நன்மை தீமைகளில் அரசனுக்கும் அவசியம் பங்கு உண்டு'' என்று சொன்னான்.

திருதராட்டிரன் கூறின சொற்களைச் செவிமடுத்த யுதிட்டிரர், "அரசே! நீர் உபவாசமிருந்து, தரையில் படுத்து, உடம்பை வருத்திக்கொண்டு வந்ததை நானும் என் தம்பியரும் அறியாது போனோம்; நீர் சுகமாக வாழ்வதாக எண்ணிக்கொண்டு ஏமாந்து போனோம். உமது தவ வாழ்வை வெளிப்படையாக நீர் காட்டிக்கொள்ளாமல் இருந்து விட்டீர். அதனால் மூடனான நான் வஞ்சிக்கப்பட்டேன், என் தந்தையான நீர் ஆறாத துயரத்தில் அழுந்தி இருக்கும்போது, ராஜ்யம் என்னிடம் இருப்பதால் யாது பயன்? நான் கெட்டவன்? தவறு செய்தவன்; ராஜ்யத்தில் மோகமுள்ளவன்; அதனால் நிந்தனைக்கு ஆளானேன். ஆகையால் ராஜ்யத்தை விட்டு நான் காடு செல்கிறேன். உம் புதல்வன் யுயுத்சு அரசனாக இருந்து நாட்டை ஆளட்டும்; அல்லது நீர் விரும்பும் வேறு யாராவது அரசனாக இருக்கட்டும். இல்லையேல் நீரே ராஜாவாக இருந்து நாட்டைப் பரிபாலனம் செய்யும். இதுவரை நான் அடைந்த நிந்தனைகள் போதும்; இனியும் எனக்கு அபகீர்த்தி உண்டாக வேண்டாம். நான் அரசன் அல்லன்; நீர்தான் அரசர். அப்படியிருக்கும்போது உமக்கு அனுமதி தர எனக்கு அருகதை ஏது? அரசே! துரியோதனன் எங்களுக்கு இழைத்த கொடுமைகளை நினைத்து நான் கோபப்படவில்லை. விதிவசத்தால் நடக்க வேண்டியது நடந்துவிட்டது; அதன் பிடிப்பில் சிக்கி நாம் மதிமயக்கம் அடைந்தோம்.

துரியோதனன் முதலானவர்களைப்போல, நாங்களும் உம் புதல்வர்களே. காந்தாரி, குந்தி இருவரும் எங்களுக்கு அன்னைகள்; இருவரிடமும் வேற்றுமை பாராட்டாது நாங்கள் நடக்கிறோம். அப்படியிருக்கும்போது, எங்களைவிட்டு, நீர் காடு சென்றால், நானும் உம்முடன் கூடவே வருவேன். இது உறுதி. உம்மை விட்டுப் பிரிந்த பின்பு, அரச பதவியில் இருந்தாலும் எனது உள்ளத்தில் அமைதி உண்டாகாது. அரசே! உம்மைத் தலை தாழ்த்தி வணங்குகிறேன். உம் மனத்திலுள்ள கவலை அகலட்டும். உமக்கு எப்பொழுதும் மகிழ்ச்சியுடன் பணிவிடை செய்ய நாங்கள் காத்திருக்கிறோம். ஆகையால் காடு செல்லும் எண்ணத்தை விட்டு விடும்'' என்று நயந்து வேண்டினார்.

உடம்பு நடுங்க, கைகூப்பி வணங்கிக்கொண்டு, யுதிட்டிரர் திருதராட்டிரனை இவ்வாறு வேண்டினார்.

அதற்குத் திருதராட்டிரன், ''குருகுலத் தோன்றலே! உன்னுடன் நான் வெகு காலம் வசித்துவிட்டேன். நீங்களும் எனக்கு நன்றாகப் பணிவிடை செய்தீர்கள். ஆயினும் நம் குல வழக்கப்படி தவம் செய்வதில் எனது நாட்டம் சென்று விட்டது. ஆகவே காடு செல்ல அனுமதி கொடு'' என்று சொன்னான்.

பிறகு அவன் விதுரரிடமும் கிருபரிடமும், ''அரசனுக்குச் சொல்லி, நீங்கள் எனக்கு அனுமதி வாங்கித் தர வேண்டும். வயது அதிகமாகிவிட்டபடியால், பேசுவது எனக்குச் சிரமமாய் இருக்கிறது; வாயும் உலர்ந்துபோகிறது'' என்று சொன்னவன், மூர்ச்சையடைந்து, உயிர்போனவனைப்போல, காந்தாரியின் மீது சாய்ந்தான்.

இதைப் பார்த்ததும் குந்தி மைந்தன் யுதிட்டிரன் அளவற்ற துயரம் அடைந்தான். ''அந்தோ! எவர் இலட்சம் யானைப் பலமுடையவரோ, அந்த அரசர் ஒரு பெண்ணின் கைமீது சாய்ந்திருக்கிறார். பீமசேனனுடைய இரும்புப் பிரதிமையை எவர் பொடிப் பொடியாகச் செய்தாரோ அந்த அரசரைப் பலவீனமான ஒரு பெண் தாங்கி நிற்கிறாள். என்

ளுல் அல்லவோ இந்தக் கதியை இவர் அடைந்தார். இதற்காக என்னையும் எனது புத்தியையும் நிந்திக்க வேண்டும். புகழ்பெற்ற காந்தாரியும் அரசரும் உணவுகொள்ளாவிட்டால் நானும் உபவாசம் இருப்பேன்'' என்று சொல்லி வருந்திஞர்.

பிறகு யுதிட்டிரர் நீரைத் தெளித்து, திருதராட்டிர மன்னரின் மார்பையும் முகத்தையும் தடவிக் கொடுத்தார். மங்களகரமான, வாசமுள்ள கையால் யுதிட்டிரர் தடவிக் கொடுத்ததும், திருதராட்டிர மன்னன் மூர்ச்சை தெளிந்தான். ''தாமரை மலர் போன்ற கண்களுள்ளவனே! நீ தொட்டதளுல் எனக்கு உயிர் வந்துவிட்டது. உன்னை அணைத்துக்கொண்டு நான்கு தினங்கள் ஆகின்றன. எனது கை கால்களை அசைக்க எனக்குச் சக்தி இல்லை. ஆயினும் அமிர்தம் போன்ற சுகமான உனது ஸ்பரிசத்தால் மூர்ச்சை தெளிந்து உணர்வு பெற்றேன்'' என்று சொன்ஞன்.

இப்படித் திருதராட்டிரன் சொன்னதும் அன்பு மேலிட்டு, யுதிட்டிரர் உடல் முழுதும் தடவிக்கொடுத்தார். மூர்ச்சை தெளிந்து தம் கைகளால் கட்டிக்கொண்டு, யுதிட்டிரரை, திருதராட்டிரன் உச்சி மோந்தான்.

திருதராட்டிரன் நிலைமையைக் கண்டு வருந்தி, விதுரர் முதலானவர்கள் அழுதார்கள். யுதிட்டிரரிடம் அவர்கள் ஒன்றும் சொல்லவில்லை. காந்தாரியும் மனத்தை அழுத்தும் ஆருத் துயரத்தை அடக்கிக்கொண்டு ஒன்றும் சொல்லாமல் இருந்தாள்.

குந்தி முதலான கௌரவ குல மாதர்கள் துயரம் தாங்காது கண்ணீர் சொரிந்து அழுதார்கள். அரசன் திருதராட்டிரனைச் சுற்றி அவர்கள் உட்கார்ந்து இருந்தார்கள்.

திருதராட்டிரன் மறுபடி யுதிட்டிரரை நோக்கி, ''அரசே! தவம்புரிய எனக்கு அனுமதி கொடு. இதுபற்றி அடிக்கடி பேச நேருவதால் என் மனம் வாடுகிறது. மேலும்

என் மனம் இன்னும் துயரப்பட வேண்டாம்'' என்று சொன்னான்.

வயது முதிர்ந்த மன்னன் இப்படிச் சொன்னதும் சுற்றியிருந்த மாதர்கள் கூக்குரலிட்டு அழுதார்கள். யுதிட்டிரரும் கண்ணீர் சொரிந்து அழுதார். தன் தந்தையைத் தழுவிக் கொடுத்தவாறே, ''அண்ணலே! உமது நலத்தில் நாட்டத்தைத் தவிர எனக்கு வேறு எதிலும் விருப்பம் இல்லை. நீர் இப்பொழுது எனது விருப்பத்துக்கு இணங்கி உணவு உட்கொள்ளும். பிறகு செய்ய வேண்டியதைச் செய்யலாம்'' என்று சொன்னார்.

அதற்குத் திருதராட்டிரன், ''மைந்தா! முதலில் எனக்கு நீ அனுமதி கொடு. பிறகு நான் உணவு உட்கொள்ளுகிறேன்'' என்று வேண்டினான்.

இது சமயம் சத்தியவதியின் புதல்வர் வியாசர் அங்கு வந்து சேர்ந்தார். அவர் யுதிட்டிரரை நோக்கி, ''அரசே! திருதராட்டிர மன்னன் என்ன சொல்லுகிறானோ அதன்படி நீ செய். வயதுமுதிர்ந்தும் புதல்வர்களை இழந்தும் இருக்கும் மன்னனால் மேலும் துயரத்தைத் தாங்கிக்கொள்ள முடியாது. காந்தாரியும் துயரத்தைப் பொறுத்துக்கொண்டு இருக்கிறாள். வீணே அவர்கள் இங்கே மரணம் அடைய வேண்டாம். காடு சென்று அவர்கள் தவ வாழ்வை மேற்கொள்ளட்டும்'' என்று சொன்னார்.

அதற்கு யுதிட்டிரர்; ''பகவானே! தாங்களே எங்களுக்கு முக்கிய கதி. எனக்குத் தந்தையும் குருவுமாக இருக்கும் திருதராட்டிர மன்னரின் கட்டளைப்படி நான் நடப்பேன்'' என்று பதில் சொன்னார்.

வியாசர் மேலும்யுதிட்டிரனிடம்.''பாரத! வனம்செல்லத் திருதராட்டிரனுக்கு நான் அனுமதி கொடுத்துவிட்டேன். நீயும் அனுமதி கொடு. தன் விருப்பப்படி திருதராட்டிரன் நடந்துகொள்ளட்டும், ராஜ ரிஷிகளாய் இருப்பவர்கள் போரில் இறக்க வேண்டும் அல்லது வனம் சென்று அங்கே இறக்க வேண்டும். இதுதான் அவர்களுக்கு விதிக்கப்பட்ட தருமம். நீங்கள் பதின்மூன்று வருடம் காட்டில்

பொழுது திருதராட்டிர மன்னன் நாட்டை ஆண்டு அனுப வித்துவிட்டான்; பலவிதமான தான தருமங்களையும் செய் தான். தவம் செய்ய வேண்டிய தருணம் இப்பொழுது வாய்த் திருக்கிறது. அனுமதி கொடு" என்று சொன்னார்.

"ஆகட்டும்" என்று யுதிட்டிரர் சம்மதித்தார். உடனே வியாச மகரிஷி காடு திரும்பிவிட்டார்.

அதன் பின்னர் யுதிட்டிரர் திருதராட்டிரனிடம் பணி வோடு, "தந்தையே! வியாச மகரிஷி சொற்படி நடக்கிறேன். இப்பொழுது முதலில் உணவு உட்கொள்ளும். பிறகு நீர் கானகம் செல்லலாம்" என்று வேண்டினார்.

"சரி" என்று சொல்லி, திருதராட்டிர மன்னன் தன் மாளிகை நோக்கிப் புறப்பட்டான்; காந்தாரியும் அவனைப் பின்தொடர்ந்தாள். விதுரர், கிருபர், சஞ்சயன முதலானவர் களும் அவனைப் பின்தொடர்ந்து சென்றார்கள்.

மாளிகையை அடைந்து காலைக் கடன்களைத் திருதராட் டிரன் முடித்துக்கொண்டான். அந்தணர்களுக்குத் தானம் செய்துவிட்டு, உணவு உட்கொண்டான். மருகியர்கள் உப சாரம் செய்ய, காந்தாரியும் குந்தியும் உணவு உண்டார்கள். விதுரரும் பாண்டவர்களும் உணவு அருந்திவிட்டு, திருதராட் டிரனிடம் வந்தார்கள். திருதராட்டிரனிடம் உட்கார்ந் தார்கள்.

## திருதராட்டிரன் சொன்ன அறிவுரைகள்

எல்லாரும் உட்கார்ந்ததும், அம்பிகையின் புதல்வன் திருதராட்டிரன், குந்தி மைந்தன் யுதிட்டிரர் முதுகில் தடவிக் கொடுத்தான். பிறகு பின்வரும் அறிவுரைகளை அவருக்குக் கூறினான்:

- "குரு நந்தனா! அறத்தை முதன்மையாகக் கொண்டு நாட்டைப் பரிபாலிக்க வேண்டும்.

"சான்றோரை அடுத்து, அவர்கள் சொல்வதைத் தயங்காமல் கடைப்பிடிக்க வேண்டும்.

"அதி காலையில் எழுந்து காலைக் கடன்களை முடித்துக் கொள்ள வேண்டும்.

"புலன் அடக்கம் உள்ளவனாக இருக்க வேண்டும். பாது காக்கப்பட்ட செல்வம்போல அது பெரும் பலனைத் தரும்.

'நல்ல பரம்பரையில் உதித்த, அடக்கமும் திறமையுமுள்ளவர்களை அமைச்சர்களாக நியமித்துக்கொள்'

"இவர்கள் சாரர்கள் என்று தெரியாதபடி நடந்துகொள்ளும் திறமையுள்ளவர்களை உள்நாட்டிலும் பிற நாடுகளிலும் சஞ்சரிக்கச் செய்.

"இரகசியமான இடங்களில் ஆலோசனை செய்ய வேண்டும். இரவு நேரங்களில் செய்யக் கூடாது. ஆலோசனை செய்யும் நேரத்தில் சொல்லிபதைக் சொல்லுகின்ற விலங்குகள், பறவைகள், குருடர்கள், நொண்டிகள் இருத்தல் கூடாது.

"ஆலோசனை வெளிப்பட்டால் அதனால் பல தீமைகள் விளையலாம்.

"ராஜ்யத்தின் பொறுப்புகளை நம்பிக்கையுள்ள மனிதர்களிடம் ஒப்படைக்க வேண்டும்.

"குற்றம், தண்டனை இவற்றின் அளவை அறிந்து, தக்க தக்க காலத்தில் அவசியம் தண்டிக்க வேண்டும்.

"அரசன் அதிகமாக மதுபானம் செய்யக்கூடாது; வேலைக்காரர்கள் பக்கத்தில் இருக்கும் சமயம் பானம் செய்யவே கூடாது. தன் பலத்தை விருத்தி செய்துகொள்வதற்காக, மனைவியை அருகே வைத்துக்கொண்டு, தனித்துப் பானம் செய்ய வேண்டும்.

"உன் நலத்தில் நாட்ட முடையவர்களை அதி காலையில் சந்திக்க வேண்டும். பிறகு அலங்காரத்தையும் ஆகாரத்தையும் செய்ய வேண்டும். அதன் பின்னர்ப் படையினரைச் சந்தித்து அவர்கள் மனம் மகிழச் செய்ய வேண்டும். தூதர்களையும் சாரர்களையும் மாலை நேரத்தில் சந்திக்க வேண்டும்.

"யார் பகைவன், யார் நண்பன், யார் அலட்சிய புத்தி யுள்ளவன், யார் நடுநிலைமையில் இருப்பவன் என்பதை எப்பொழுதும் திட்டமாகத் தெரிந்துகொள்.

"இம்மையிலும் மறுமையிலும் மேலான நலம் தனக்குக் கிட்டும் வகையில் அரசன் நடந்துகொள்ள வேண்டும். குடி மக்களை அறவழி நின்று பாதுகாத்தால் இம்மையில் புகழ் உண்டாகும்; மறுமையில் நற்பேறு கிட்டும்.

"பீஷ்மர், விதுரன், கண்ணன் முதலியோர் அறவழிபற்றி உனக்குக் கூறி இருக்கின்றனர். நானும் எனக்குத் தெரிந்ததைச் சொன்னேன். அதன்படி நடந்து மேன்மை அடை. ஆயிரம் அசுவமேத யாகங்களைச் செய்யும் அரசனும், அறவழி நின்று குடிமக்களைப் பேணுபவனும் சமமான பலனைத்தான் அடைகிறார்கள்."

இவ்வாறு புத்திமதியைத் திருதராட்டிரன் சொல்லி ஓய்ந்ததும், யுதிட்டிரர் "அரசே! நீர் கூறின அறிவுரைப்படி நடக்கிறேன்" என்று சொன்னார்.

இதன் பின்னர், திருதராட்டிரன், "மைந்தா! நீ இளைப்பாறு; பேசுவது எனக்குச் சிரமமாய் இருக்கிறது" என்று சொல்லி, எழுந்து காந்தாரியின் மாளிகைக்குச் சென்றான்.

## குடிமக்களிடம் அனுமதி

தன் மாளிகையை அடைந்து ஆசனத்தில் வீற்றிருக்கும் அரசனை அணுகி, "நாதா! வனம் செல்ல வியாச மகரிஷி உமக்கு அனுமதி கொடுத்துவிட்டார். யுதிட்டிரனிடம் அனுமதி பெற்றுக்கொண்டு எப்பொழுது வனம் செல்லப் போகிறீர்?" என்று காந்தாரி கேட்டாள்.

"காந்தாரி! வியாச மகரிஷியின் அனுமதி கிடைத்துவிட்டது. யுதிட்டிரனிடம் அனுமதி பெற்றுக்கொண்டு விரைவில் கானகம் செல்ல உத்தேசித்து இருக்கிறேன். அதற்குள் நகர

மாந்தரை அழைத்து, அவர்களை எதிரில் வைத்துக்கொண்டு, கொடிய சூதாட்டத்தை நடத்திப் பரலோகம் சென்ற நம் புத்திரர்கள் நற்கதி அடையத் தான தருமங்கள் செய்ய விரும்புகிறேன்'' என்று சொன்னான்.

தன் விருப்பத்தைத் திருதராட்டிரன் யுதிட்டிரருக்குச் சொல்லி யனுப்பினான்.

அவனுடைய விருப்பப்படி நகர மாந்தரை யுதிட்டிரர் வருவித்தார். குருஜாங்கல நாட்டைச் சேர்ந்த நான்கு வருணத்தாரும் அங்கே வந்தார்கள். யுதிட்டிரர் வந்து அவர்களைச் சந்தித்தார். திருதராட்டிரனும் வந்து அவர்களைச் சந்தித்து அடியில் வருமாறு சொன்னான்:

''குடிமக்களே! நீங்களும் கௌரவர்களும் நெடுங் காலம் சேர்ந்து வசித்தீர்கள். ஒருவர் நன்மையில் ஒருவர் நாட்டத்துடன் இருந்தீர்கள். காலத்துக்கு ஏற்ப நான் சொல்லவிருக்கும் வார்த்தையை நீங்கள் கேட்க வேண்டும். வியாச மகரிஷியிடத்திலும் யுதிட்டிரனிடத்திலும் அனுமதி பெற்றுக்கொண்டு, காந்தாரியுடன் நான் காடு செல்ல விரும்புகிறேன். அதற்கு நீங்களும் அனுமதி அளிக்க வேண்டும். உங்களுடைய ஆலோசனை கௌரவிக்கத்தக்க ஆலோசனையாக இருக்கும். உங்களுக்கும் எங்களுக்கும் இடையில் நிலவிய அன்பைப் போல், மற்ற நாட்டினரிடையே காண முடியாது என்பது என் எண்ணம். எனக்கும் காந்தாரிக்கும் வயதாகிவிட்டது; எங்கள் புதல்வர்களும் போரில் இறந்துவிட்டார்கள். நாங்கள் இருவரும் பலம் குன்றி உபவாசத்தால் இளைத்துப்போய் இருக்கிறோம். யுதிட்டிரன் ஆட்சிக்கு வந்த பின் நானும் காந்தாரியும் மேலான சுகத்தை அடைந்தோம். இனி காடு சென்று தவ வாழ்வை மேற்கொள்ள விரும்புகிறேன். அதற்கு நீங்கள் அனுமதி அளிக்க வேண்டும்'' என்று வேண்டினான்.

திருதராட்டிரன் இப்படிச் சொல்லி, அனுமதி கேட்டதும், குருஜாங்கல நாட்டினர் கண்ணீர் சொரிந்து அழுதுவிட்டார்கள்; அவர்களால் பேச முடியவில்லை. வருத்தத்

துடன் இருக்கும் அவர்களை நோக்கி மீண்டும் திருதராட்டிர மன்னன் சொன்னான்:

"குடிமக்களே! எங்கள் முன்னோர் சந்தனு மன்னர் இந்த நாட்டைப் பரிபாலித்தார். அவருக்குப் பின்னர் எங்கள் தந்தை விசித்திர வீரியர் இந்த நாட்டை ஆண்டார். பிறகு பீஷ்மர் பரிபாலித்தார். இவற்றை எல்லாம் நீங்கள் அறிவீர்கள். அதன் பின்னர் என் தம்பி அன்புள்ள பாண்டு இந்த நாட்டை ஆண்டான். நானும் உங்களைப் பாதுகாத்தேன். அதில் குற்றங் குறைகள் இருப்பினும் அதை நீங்கள் பொறுத்துக்கொள்ள வேண்டும். என் புதல்வன் துரியோதனன் இந்த நாட்டை ஆண்டபொழுது, இழைத்த அநீதியாலும் அகந்தையாலும் பெரும் போர் மூண்டது. அதில் கௌரவர்கள் அழிந்து போனார்கள். அது சமயம் நான் நடந்துகொண்டதில் குற்றங் குறைகள் இருப்பின் அதை நீங்கள் மனத்தில் கொள்ளக்கூடாது. உங்களை நான் வணங்கிப் பணிவுடன் கேட்டுக்கொள்கிறேன். 'இந்த அரசன் முதியவன், புதல்வர்களை இழந்தவன்; துயரத்தில் மூழ்கி இருப்பவன்; முன் இருந்த அரசரின் புதல்வன்' என்று எண்ணி, நீங்கள் பொறுத்துக்கொள்ள வேண்டும். என்னைப்போலவே துயரத்தில் வாடிக் கிடக்கும் காந்தாரியும் உங்களை வேண்டுகிறாள். எங்கள் நிலைமையை அறிந்து எங்களுக்கு நீங்கள் அனுமதி கொடுங்கள். உங்களை நாங்கள் வேண்டுகிறோம்.

"நீங்கள் எல்லாரும் குருகுலத்தில் தோன்றிய குந்தி மைந்தன் யுதிட்டிரனுக்கு ஆதரவு கொடுங்கள். நல்ல காலங்களிலும் கெட்ட காலங்களிலும் அவனை ஆதரியுங்கள். ஒரு பொழுதும் தீய காரியங்களை அவன் செய்ய மாட்டான். அறங்களை அறிந்த அவன் தம்பியர் நால்வரும் அவனுக்கு உதவிபுரிவர். யுதிட்டிரன் உங்களை நன்கு பரிபாலிப்பான். இந்த யுதிட்டிரனை உங்களிடம் அடைக்கலமாக ஒப்படைக்கிறேன்; அதேபோல, உங்களை அவனிடம் அடைக்கலமாக ஒப்படைக்கிறேன். என் புதல்வர்களும் பணியாளர்களும் ஏதாவது பிரியக் குறைவான காரியத்தைச் செய்து இருந்தால் அதை நீங்கள் பொறுத்துக்கொள்ள வேண்டும்; நீங்கள் தவறு

தலாக என்பால் நடந்துகொள்ளவில்லை. உங்களைக் கை கூப்பி வேண்டுகிறேன். காடு செல்ல எனக்கும் காந்தாரிக்கும் அனுமதி கொடுங்கள்'' என்று வேண்டினான்.

வயது முதிர்ந்த திருதராட்டிர மன்னன் இவ்வாறு வேண்டியதும், நகர மகந்தர்கள் பேச்சு மூச்சற்றுக் கண்ணீர் வடித்தார்கள். மீண்டும் திருதராட்டிரன் அவர்களிடம் ''சிறந்தவர்களே! தலைவணங்கி உங்களை நான்வேண்டுகிறேன். வியாசரும் யுதிட்டிரனும் எனக்கு அனுமதி கொடுத்து விட்டனர். நீங்களும் அனுமதி கொடுங்கள்'' என்று வேண்டினான்.

திருதரகட்டிரன் பணிவுடன் தங்களை வேண்டுவதைச் செவிமடுத்த நகர மாந்தர்கள் முகங்களைக் கைகளாலும் மேல் ஆடைகளாலும் மூடிக்கொண்டு அழுதார்கள். பிறகு ஒருவருடன் ஒருவர் தத்தம் கருத்துகளைப் பரிமாறிக் கொண்டு, அந்தணன் ஒருவன் மூலம் நகர மாந்தரின் கருத்தை அரசனுக்கு அறிவித்தார்கள்.

அந்த அந்தணன் திருதராட்டிரனிடம், ''அரசே! நகர மாந்தர்கள் தம் கருத்துக்களை என்னிடம் தெரிவித்துவிட்டார் கள். நம்மிடையே அன்பு குன்றவில்லை. நீர் எங்களைத் தாய் போலவும் தந்தை போலவும் இதுவரை பரிபாலித்தீர். துரியோதனன் பிரியக் குறைவான காரியம் ஒன்றையும் எங் களுக்குச் செய்யவில்லை. வியாசர் கூறியபடி நீர் செய்யும். அவர் நம் அனைவருக்கும் குரு. உம்மைப் பிரிய நேரும் துக் கம் எங்களை நெடுங் காலம் வாட்டும்: சந்தனு, சித்திராங் கதன், உன் தந்தை விசித்திரவீரியன், பீஷ்மர் இவர்களைப் போலவே துரியோதனனும் எங்களைப் பாதுகாத்தான். உங்க ளுடைய ஆதரவினால் நாங்கள் நன்றாக வாழ்ந்தோம். தரும சீலரான யுதிட்டிரருடைய ஆட்சியிலும் நாங்கள் சுகமாக வாழப்போகிறோம். சான்றோரை அடுத்து நடப்பவரான இவரிடம் எத்தகைய குறைபாடும் கிடையாது. உம்மிடத் திலும் உம் புதல்வன் துரியோதனனிடத்திலும் எங்களுக்குப் பிரியம் குறையவில்லை. கௌரவர்கள் போர்புரிந்து அழிந்த

தற்குக் காரணம் துரியோதனன் அல்லன்; நீரும் காரணம் இல்லை சகுனி, கர்ணன் முதலானவர்களும் காரணமல்லர். தவிர்க்க முடியாத அந்தப் போர் தெய்வச் செயலால் நிகழ்ந்த தென்று நாங்கள் கருதுகிறோம். ஆயிரக்கணக்கான அரசர்களும் பதினெட்டு அக்குரோணி சேனையும் இந்தப் பெரும் போரில் அழிந்தன. தெய்வத்தின் திருவுள்ளம் இல்லாவிட்டால் இவ்வளவு பெரிய அழிவு நடைபெற்று இருக்க முடியாது.

"அரசே! நீர் தருமத்தை அறிந்தவர்; உலகத்துக்கு அதிபதியாய் இருப்பவர்: உம் புதல்வன் துரியோதனனும் தரும சீலன். வீரமரணம் எய்தி இருக்கும் அவன் சுகமாக வாழ்வான். தர்மத்தில் நாட்டமுள்ள நீரும் மேலான கதியை அடைவீர்.

"பாண்டவர்களும் எத்தகையோர் என்பதை நாங்கள் அறிவோம். தேவலோகத்தையும் பரிபாலிக்கும் ஆற்றல் அவர்களுக்கு உண்டு; பூலோகத்தை ஆள்வதைப் பற்றிக் கேட்பானேன்?

"நல்ல காலத்திலும் கெட்ட காலத்திலும் குடிமக்களை அனுசரித்துப் பாண்டவர்கள் நடப்பார்கள். யுதிட்டிரர் தீர்க்க யோசித்து எதையும் செய்பவர்; குபேரன் போல அடக்கமுள்ளவர்; பெருந்தன்மையுள்ள மந்திரிகளை யுடையவர்; பகைவனிடத்திலும் கருணை காட்டும் இயல்பு படைத்தவர். ஆகவே புதல்வர்களைப் பேணிக் காப்பதுபோல எங்களை அவர் பேணிக் காப்பார். ஆகவே யுதிட்டிரரிடம் பொறுப்பை ஒப்படைத்துவிட்டு, நீர் வனம் சென்று தவ வாழ்வை மேற்கொள்ளும்" என்று சொன்னான்.

அந்தணன் சொன்னதை "நல்லது நல்லது" என்று சொல்லி மற்ற ஜனங்களும் ஆதரித்தார்கள்.

திருதராட்டிரனும் கைகூப்பி வணங்கி, அவர்களிடம், விடைபெற்றுக் கொண்டான். இரவு வந்ததும் காந்தாரியை அழைத்துக்கொண்டு, தனது அரண்மனை திரும்பினான்.

குடிமக்களும் தத்தம் இல்லம் திரும்பினர்.

# ர்த்த தானம்

அரண்மனை திரும்பின திருதராட்டிரன் இரவு சுகமாகத் தூங்கினான். பொழுதுபுலர்ந்ததும் விதுரரை யுதிட்டிரரிடம் அனுப்பிவைத்தான்.

அவர் யுதிட்டிரரிடம் சென்று, "அரசே! திருதராட்டிர மன்னர் வனவாசம் செல்லத் தீட்சை எடுத்துக் கொண்டிருக்கிறார். திருக்கார்த்திகை யன்று அவர் கானகம் செல்ல முடிவு செய்திருக்கிறார் ஒரு காரியத்துக்காக உம்மை அவர் பார்க்க விரும்புகிறார். நீர் அனுமதிகொடுத்தால் பீஷ்மர், துரோணர், சோமதத்தன், பாகலீகன், போரில் மடிந்த தம் புதல்வர்கள், ஜயத்ரதன் முதலானவர்களுக்கு நீர்க்கடன் செய்ய விரும்புகிறார்" என்று சொன்னார்.

விதுரர் சொன்னதைக் கேட்டு யுதிட்டிரரும் அர்ச்சுனனும் அகமகிழ்ந்தனர். ஆனால் துரியோதனன்மீது அடங்காத கோபம்கொண்டிருந்த பீமன் மட்டும் விதுரர் சொன்ன வார்த்தைகளை ஏற்க மறுத்துவிட்டான்.

பீமன் கருத்தை அறிந்த அர்ச்சுனன் சிறிது பணிவுடன் "பீம! நம் தந்தை முதிய மன்னர் திருதராட்டிரர் வனம் செல்ல முடிவு செய்துவிட்டார். அவர் தம் உற்றார் உறவினர்களுக்கு நீர்க்கடன் செய்ய விரும்புவதலால் நம்மிடம் பொருள் உதவியை நாடுகிறார். எந்தத் திருதராட்டிர மன்னரிடம் முன்பு நாம் யாசித்தோமோ அந்தத் திருதராட்டிர மன்னர் இப்பொழுது நம்மை யாசிக்கிறார். காலத்தின் கோலத்தைப் பார்த்தாயா? ஆகவே அவர் விரும்புகிற தனத்தை நாம் கொடுக்க வேண்டும்" என்று சொன்னான்.

அர்ச்சுனன் சொல்லியதை யுதிட்டிரர் பாராட்டினார். ஆனால் பீமசேனனோ அர்ச்சுனனைக் கோபத்துடன் நோக்கினான். "அர்ச்சுனா! பீஷ்மர், துரோணர் முதலானவர்களுக்கு நாம் சிரார்த்தம் செய்வோம். கர்ணனுக்குக் குந்தி செய்

யட்டும். திருதராட்டிர மன்னன் யாருக்குச் சிரார்த்தம் செய்ய வேண்டும். குலத்தைக் கெடுத்த துரியோதனன் முதலானவர்கள் இன்னும் அதிக கஷ்டத்தை அனுபவிக்கட்டும். பன்னிரண்டு ஆண்டுகள் காட்டிலும் ஓர் ஆண்டு தலைமறைவாகவும் வாழ்ந்து நாம் அனுபவித்த துயரங்களை எல்லாம் நீ மறந்து விட்டாயா? திரௌபதியை அவமானப் படுத்திய கொடுஞ் செயலை மறந்து போனாயா? மான் தோல் உடுத்தித் திருதராட்டிரரிடம் நீ சென்றபோது, அவன் உன் பால் இரக்கம் காட்டினானா? திருதராட்டிரன் குணத்தில் இழிந்தவன், கெட்டவன்; இவனுக்கு நாம் உதவி செய்யக் கூடாது" என்று சொன்னான்,

"இப்படி எல்லாம் பேசாதே" என்று யுதிட்டிரர் பீம சேனனை அதட்டினார்.

அர்ச்சுனனோ மீண்டும் பீமசேனனிடம் "நீர் எனக்கு மூத்தவர்; ஆகையால் வேறு ஒன்றும் சொல்ல எனக்குத் துணிவு உண்டாகவில்லை. ராஜரிஷியான திருதராட்டிரரை நாம் மதிக்க வேண்டும். பெரியோர் சொல்லைத் தட்டி நடக்காதவர்கள் அபகாரங்களை நினைக்க மாட்டார்கள்; உபகாரங்களைத்தான் நினைப்பார்கள்" என்று சொன்னான்.

இதன் பின்னர் யுதிட்டிரர் விதுரரிடம், "விதுரரே! உற்றார் உறவினர்களையும் உதவியாய் இருந்தவர்களையும் நினைத்துத் திருதராட்டிரர் தானம் செய்ய விரும்புவதற்குச் செல்வத்தை என் பொக்கிஷத்திலிருந்து நான் தருகிறேன். இதைத் திருதராட்டிர மன்னரிடம் தெரிவியும். பீமன் சொன்னதை அவர் மனத்தில் கொள்ள வேண்டாம். கானகத்தில் பனி, மழை, வெயில் முதலானவற்றால் துன்புற்ற காரணத்தால் இப்படிக் கூறுகிறான், பீமன். அர்ச்சுனனிடத்திலும் என்னிடத்திலுமிருந்து, தேவையான பொருள்களை அவர் எடுத்துக் கொள்ளட்டும். உற்றார் உறவினர்களுக்கு நீர்க்கடனை அவர் செய்து முடிக்கட்டும்" என்று சொல்லி அனுப்பினார்.

யுதிட்டிரர் சொல்லியதைக் கேட்டுக்கொண்டு, விதுரர் திருதராட்டிரனிடம் திரும்பினார். "அரசே! நீர் சொல்லி யனுப்பியதை முழுவதும் யுதிட்டிரரிடம் சொன்னேன். உமது

விருப்பத்துக்கு இணங்கி, யுதிட்டிரரும் அர்ச்சுனனும் தம் பொக்கிஷங்களிலிருந்து மகிழ்ச்சியுடன் பொருள் தர இசைகிறார்கள். உடல், பொருள், ஆவி அனைத்தையும் உமக்கு அர்ப்பணிக்க இசைகிறார்கள். பீமசேனனோ முன்பு அனுபவித்த துயரங்களை எண்ணி எண்ணி, பெருமூச்சு விட்டுக்கொண்டு பொருள் தர இசையாமல் இருக்கிறான். அவனுக்கு யுதிட்டிரரும் அர்ச்சுனனும் சமாதானம் சொல்லி இசையச் செய்து இருக்கிறார்கள். பீமசேனன் சொல்லியதை நீர் மனத்தில் கொள்ள வேண்டாம்' என்று யுதிட்டிரர் உம்மிடம் சொல்லச் சொன்னார். ஆசையால் உம் விருப்பம்போல் ஏழை எளியவர்களுக்கு நீர் தானம் செய்யும்'' என்று சொன்னான்.

விதுரர் சொன்னதைக் கேட்டு, திருதராட்டிரன் மகிழ்ச்சி அடைந்தான். திருக்கார்த்திகை யன்று தான தருமங்களைச் செய்யத் தீர்மானித்தான்.

ஆயிரக்கணக்காக அந்தணர்களையும் மகரிஷிகளையும் திருதராட்டிர மன்னன் வரவழைத்தான். அன்ன தானம் செய்தான். ஆடைத் தானம் செய்தான். பசுத்தானம் செய்தான். பொன்னையும் மணியையும் ரத்தினங்களையும் தானம் செய்தான். கிராமங்களைத் தானம் செய்தான். கம்பளங்கள், குதிரைகள், யானைகள், கன்னியர்கள் ஆகியவற்றைத் தானம் செய்தான்.

பீஷ்மர், துரோணர், பாகலீகன், சோமதத்தன், துரியோதனாதியர்கள், ஜயத்ரதன் முதலான உறவினர்கள் பெயரைத் தனித் தனியாகச் சொல்லி, சிரார்த்த தானம் செய்தான். ஒவ்வொரு பிராமணரையும் குறிப்பிட்டுக் குறிப்பிட்டு, பெயர் சொல்லிக் கொடுத்தான்.

யுதிட்டிரர் அனுமதியின் பேரில் நடந்த அந்தச் சிரார்த்தத்தில் கணக்காயர்களும் எழுதுவோரும் வந்து குறிப்பெடுத்துக்கொண்டார்கள். அவர்கள் திருதராட்டிரனை அணுகி, ''அரசே! யாவும் தயாராக இருக்கின்றன. யார் யாருக்கு எது எதைக் கொடுக்க வேண்டும் என்பதைத் தெரியப்படுத்தும்'' என்று வேண்டினார்கள்.

திருதராட்டிரன் சொன்ன பொருள்களை உடனுக்குடன் கொண்டுவந்து கொடுத்தார்கள். நூறு கொடுக்க வேண்டியதற்கு ஆயிரம் கொடுத்தார்கள்; ஆயிரம் கொடுக்க வேண்டியதற்குப் பதினாயிரம் கொடுத்தார்கள். மழை பொழிந்து பூமியை மேகம் மகிழ்விப்பது ஒப்ப, திருதராட்டிர மன்னன், தானம் என்கிற மழையைப் பொழிந்து, சான்றோர்கள் உள்ளங்கள் களிப்படையச் செய்தான்.

பிறகு, நான்கு வருணத்தாருக்கும் அன்னமிட்டு உபசரித்தான். ஆடுவோரும் பாடுவோரும் விருந்தினர் உளம் மகிழ ஆடினார்கள்; பாடினார்கள்.

இவ்வாறு தொடர்ந்து பத்து நாட்கள் திருதராட்டிரன் சிரார்த்த தானம் செய்தான். புதல்வர்களையும் மற்ற உற்றார் உறவினர்களையும் எண்ணி, எண்ணி, களைப்படையும்வரையில் திருதராட்டிரன் தானம் செய்தான்; களைப்பு மேலிட்ட பின்னர்தான், தானம் செய்வதை நிறுத்தினான்.

## வனம் சென்றனர்

பொழுது புலர்ந்தது. திருக்கார்த்திகை தினமும் வந்தது. காந்தாரியுடன் கானகம் செல்லத் திருதராட்டிரன் தயாரானான். பாண்டவர்களை வரவழைத்து அவர்களுக்கு ஆசி கூறினான்.

அந்தணர்கள் தனக்கு ஆசி சொன்ன பின்னர், மரப் பட்டையையும் மான் தோலையும் திருதராட்டிர மன்னன் உடுத்துக் கொண்டான். தான் இதுவரை வாழ்ந்த மாளிகையைப் பொரிகளாலும் விதவிதமான மலர்களாலும் அலங்கரித்து, அதைப் போற்றினான். வேலைக்காரர்களுக்கும் மற்றவர்களுக்கும் வெகுமதிகள் வழங்கிவிட்டு, அந்த மாளிகையிலிருந்து புறப்பட்டான்.

அரசன் புறப்படுவதைக் கண்டதும் கௌரவக்குல மாதர்கள் வாய்விட்டு அரற்றினார்கள்; மருகியரும் மற்றவர்களும் அழுது கொண்டே அவனைத் தொடர்ந்தார்கள்.

யுதிட்டிரர் கண்கலங்கி அழுதார். கைகூப்பி வணங்கிக் கொண்டு, "அரசே! எங்கே போகிறீர்?" என்றுகேட்டுவிட்டு, துயரம் தாங்காது பூமியில் சாய்ந்தார்.

அர்ச்சுனன் துயரம் தாங்காது பெருமூச்சு விட்டான். "அரசே! அழ வேண்டாம்" என்று யுதிட்டிரருக்குச் சமாதானம் சொன்னான்.

பீமன், அர்ச்சுனன், நகுலன், சகதேவன், விதுரர், சஞ்சயன், யுயுத்சு, கிருபர், தௌமியர் முதலியோர் துக்கம் மேலிட்டுக் கண்ணீர் சொரிந்தனர்: அவர்களால் பேச முடியவில்லை: அவர்களும் திருதராட்டிரனைப் பின் தொடர்ந்தார்கள்.

குந்தி முன்னே சென்றாள்; கண்களைத் துணியால் மறைத்துக் கட்டிக்கொண்டிருந்த காந்தாரி, குந்தியின் தோள் மீது கையை வைத்துக்கொண்டு அவள் பின்னே சென்றாள்; :திருதராட்டிரன் காந்தாரியின் தோள்மீது கையை வைத்துக்கொண்டு, அவள் பின்னே சென்றான்.

திரௌபதி, சுபத்திரை, உத்தரை, சித்தராங்கதை முதலியோர், முதியவர் மூவரும் செல்லும் கோலத்தைக் கண்டு, துயரம் தாங்காது அன்றில் பேடுபோல அரற்றினர். நகரத்தாரும் ஆடவரும் பெண்டிரும் அழுதுகொண்டே திருதராட்டிர மன்னனைப் பின்தொடர்ந்தனர். சூதாடி ராஜ்யத்தைத் தோற்றுவிட்டு, பாண்டவர்கள் திரௌபதியுடன் வனம் சென்றபொழுது, அத்தினபுர மக்கள் துயரம் தாளாது அன்று எப்படி அழுதார்களோ, அதேபோல இன்றும் துயருற்று அழுதார்கள்.

வீதிதோறும் ஆடவரும் பெண்டிரும் திரள் திரளாக நின்றனர். ஜன நெருக்கடி அதிகமாக இருந்தது. சந்தடியும் கூக்குரலும் மிகுந்திருந்தன.

திருதராட்டிர மன்னன் வயதினால் தளவுற்று நடுங்கியவாறே, கைகூப்பிய வணங்கிக்கொண்டும், சிரமப்பட்டுக் கொண்டும், கூட்டத்திலிருந்து வெளிப்பட்டான். அத்தினபுரத்தின் பெரிய வாயில் வழியாகப் புறப்பட்ட அவன், திரும்பிச் செல்லும்படி ஜனங்களை வேண்டிக்கொண்டே சென்றான்.

சஞ்சயன், விதுரன் முதலியோர் அரசனுடன் சேர்ந்து கானகம் செல்ல ஆயத்தமானார்கள். திருதராட்டிர மன்னன் யுயுத்சுவையும் கிருபரையும் யுதிட்டிரரிடம் ஒப்படைத்தான்.

நகர மாந்தர்கள் திரும்பினர்; யுதிட்டிரரும் திருதராட்டிரனிடம் அனுமதி பெற்றுக்கொண்டு திரும்ப எண்ணினார். அவர் தன் தாய் குந்தியை அணுகி, "அம்மா! நான் அரசருடன் செல்கிறேன்; மருகியரை அழைத்துக்கொண்டு நீ நகரம் திரும்பு" என்று சொன்னார்.

குந்தியோ கண்ணீரை உகுத்துக்கொண்டு, காந்தாரியுடன் சென்றாள். அவள் யுதிட்டிரனிடம், "அரசே! நீ சகதேவனைப் பேணிக் காப்பாற்று; கர்ணனையும் மறந்துவிடாதே. அவனை நினைந்து, தம்பியர்களுடன் சேர்ந்து, தான தருமங்களைச் செய். திரௌபதியை அன்போடு நடத்து. பீமன் முதலானவர்களுக்குச் சமாதானம் சொல்; நானும் காந்தாரியுடன் சேர்ந்து சென்று, கானகத்தில் தவம் செய்ய விரும்புகிறேன்" என்று கூறினாள்.

குந்தி சொன்ன பதிலைக் கேட்டு, யுதிட்டிரர் அளவற்ற துயரம் அடைந்தார்; அவரால் பேச முடியவில்லை. சிறிது நேரம் யோசித்தார். கவலையும் ஏக்கமும் மேலிட்டவராகத் தன் தாயை நோக்கி, "அம்மா! என்ன காரியம் செய்ய முயன்றாய்? நீ கானகம் செல்ல நான் அனுமதி தர மாட்டேன். எங்கள் நலத்தில் நாட்டமுள்ள நீ எங்களை விட்டுச் செல்லக் கூடாது. உன் விருப்பத்துக்கு இணங்க அரசர்களைக் கொன்று இந்த ராஜ்யத்தை நான் அடைந்தேன். அப்பொழுது இருந்த எண்ணம் உனக்கு இப்பொழுது மாறிவிட்டதா? நாட்டையும் மருகியரையும் துறந்து, காட்டில் நீ எவ்வாறு சஞ்சரிப்பாய்? தயவுசெய்து நீ போக வேண்டாம்" என்று வேண்டினார்.

யுதிட்டிரரின் கண்கள் நீரால் நிறைந்துவிட குந்தியும் கண்ணீர் சொரிந்தபடி சோர்வுற்று இருந்தாள். பீமசேனன் அவளை அணுகி, "அன்னையே! உன் புதல்

வர்கள் வெற்றி பெற்று ராஜ்யத்தை அடைந்திருக்கின்றனர். அதை அனுபவித்து மகிழாமல் காடு செல்லும் எண்ணம் உனக்கு எவ்வாறு வந்தது? எதற்காகப் போர்புரியும்படி எங்களைத் தூண்டினாய்? எதற்காக இப்பொழுது காடு செல்லப் பிரியப்படுகிறாய்? நீ காடு போகக் கூடாது. நாட்டிலிருந்து சுகத்தை நீ அனுபவிக்க வேண்டும்'' என்று வேண்டினான்.

குந்தி காடு செல்வதற்கே நாட்டத்துடன் இருந்தாள். புதல்வர்களும் மருகியரும் அவளைப் பின்தொடர்ந்து அழுது கொண்டே சென்றனர். குந்தி, பிறகு கண்ணீரைத் துடைத்துக்கொண்டு, புதல்வர்களை நோக்கி, ''வீரர்களே! நீங்கள் சொல்லுவது உண்மைதான். உங்களை நான் பாடுபட்டுப் பாதுகாத்தேன்: நீங்கள் பிறர் தயவை நாடி வாழக் கூடாது என்பதற்காகவே அவ்விதம் செய்தேன். உங்கள் தந்தை பாண்டு மன்னர் காலத்தில் ராஜ்ய சுகத்தை நான் அனுபவித்தேன். உங்களால் ஜயித்த ராஜ்யத்தின் பயனை நான் அனுபவிக்க விரும்பவில்லை. ஆகவே, நீங்கள் திரும்புங்கள். நான் காடு சென்று, திருதராட்டிர மன்னர் காந்தாரி முதலியவர்களுக்குப் பணிவிடை புரியப் போகிறேன்'' என்று சொன்னாள்.

குந்தி இப்படிச் சொன்னதும் பாண்டவர்கள் நாணமுற்றனர். திரௌபதியை அழைத்துக்கொண்டு, நகரம் திரும்பினர். திருதராட்டிர மன்னரை வலம் வந்து விடைபெற்றுகொண்டனர்.

இது சமயம் திருதராட்டிர மன்னன் காந்தாரியையும் விதுரரையும் நோக்கி, ''யுதிட்டிரன் கூறுவது முற்றும் உண்மை. குந்தி ராஜ்ய சுகத்தை அனுபவிக்கட்டும். புதல்வர்கள் அடைந்துள்ள செல்வத்தின் பயனைத் துய்க்காமல், அறிவில்லாதவள் போல, கானகம் செல்ல யாருக்குத்தான் மனம் வரும்? முதியவளான இவள் ராஜ்யத்தில் இருந்துகொண்டே விரதங்களை அனுஷ்டித்து, தான தருமங்களைச் செய்து தவம் புரியலாம்: நான் சொல்வதைக் கேட்டு அவள் நகரம் திரும்பட்டும்'' என்று சொன்னான்.

திருதராட்டிரன் சொன்ன வார்த்தைகளைக் குந்தி தேவியிடம் காந்தாரி தெரிவித்தாள். குந்தி சம்மதிக்கவில்லை. காடு சென்று பணிவிடை செய்வதில் அவள் உறுதியுடன் இருந்தாள்.

குந்தியின் உறுதியை அறிந்த பாண்டவர்களும் மற்றவர்களும் அழுதுகொண்டே நகரம் திரும்பினார்கள். நகரம் சோபை குன்றிப் போய்க் கிடந்தது. மாந்தர்கள் உற்சாகம் குன்றி, கவலையுடன் இருந்தார்கள். தாயைவிட்டுப் பிரிந்த கன்றுகள்போல, பாண்டவர்கள் கலங்கினார்கள்.

திருதராட்டிர மன்னன் வெயிலில் நெடும் தூரம் நடந்து கங்கைக் கரையை அடைந்தான். பொழுது சாய்ந்ததும் அழலை ஓம்பிப் பூசித்தான்.

விதுரரும் சஞ்சயனும், காந்தாரிக்கும் திருதராட்டிர மன்னனுக்கும் தர்ப்பைப் புல்லால் படுக்கை அமைத்தார்கள். குந்தியும் காந்தாரிக்கு அருகே படுத்தாள். இரவு சுகமாகத் தூங்கினார்கள்.

பொழுது புலர்ந்ததும் காலைக் கடன்களை முடித்துக் கொண்டு, வடக்கு நோக்கிப் புறப்பட்டார்கள்.

திருதராட்டிரன், காந்தாரி, குந்தி, விதுரர் முதலானவர்கள் கங்கையில் இறங்கி நீராடிவிட்டு. குருசேத்திரத்திற்குச் சென்றனர். அங்கே சதயூபன் என்னும் ராஜரிஷி தவவாழ்க்கையில் ஈடுபட்டு இருந்தான்.

திருதராட்டிர மன்னன் அவருடைய ஆசிரமத்துக்குச் சென்றான். அவனையும் அழைத்துக்கொண்டு வியாசருடைய ஆசிரமத்துக்குப் போனான்.

வியாசர் திருதராட்டிரனை முறைப்படி வரவேற்றார். அவரிடம் தீட்சை பெற்றுக்கொண்டு, திருதராட்டிரன் சதயூபனுடைய ஆசிரமத்துக்குத் திரும்பினான். அங்கிருந்துகொண்டு திருதராட்டிரன் தவம் செய்து வந்தான். காந்தாரியும் குந்தியும் விரத வாழ்வை மேற்கொண்டார்கள். விதுரரும் தவ வாழ்வை மேற்கொண்டு, அரசனுக்குப் பணிவிடைகள் புரிந்து வந்தார்.

அப்பொழுது நாரதர் சதயூபனுடைய ஆசிரமத்துக்கு வந்தார். காந்தாரி அவரை முறைப்படி வரவேற்று உப சரித்தாள். அவர் திருதராட்டிரனை நோக்கி, "வேந்தே! தவ வாழ்வை மேற்கொண்டுள்ள நீ மனைவியுடன் நற்கதியை அடைவாய். உன் தம்பி பாண்டு இந்திரன் பக்கத்தில் இருப் பவன் எப்பொழுதும் உன் நினைவாகவே இருக்கிறான். குந்தியும் தன் கணவன் இருக்கும் உலகத்தை அடைவாள். இவற்றை எல்லாம் ஞான திருஷ்டியால் நான் அறிகிறேன்" என்று சொன்னார்.

திருதராட்டிரன் இதைக் கேட்டு, பெருமகிழ்ச்சி அடைந் தான். நாரதரை முறைப்படி பூசித்தான். "இன்னும் மூன்று ஆண்டுகளுக்குப் பின்னர் ஒளியால் சூழப்பட்டு, திருதராட் டிரன் நற்கதியை அடைவான்" என்று தெரிவித்துவிட்டு நாரதர் திரும்பினார்.

## பகைமை ஒழிந்தது

திருதராட்டிர மன்னன் வனம் சென்றவுடன், பாண் டவர்கள் அளவற்ற துயரம் அடைந்தார்கள். தங்கள் தாய் குந்தியை நினைந்து நினைந்து ஏங்கினார்கள். "வயது முதிர்ந்த மன்னர் காட்டில் எப்படி வசிக்கிறாரோ? குந்தியும், காந் தாரியும் எப்படி வாழ்கின்றனரோ? புதல்வர்களையும் ராஜ்ய போகத்தையும் வேண்டாம் என்று ஒதுக்கிவிட்டாரே! விதுரரும் சஞ்சயனும் எப்படி இருக்கின்றனரோ!" என்று நினைந்து ஏங்கினார்கள்.

இந்தக் கவலையின் மிகுதியால் பாண்டவர்கள் ராஜ்யத்தி லும் பெண்களிடத்திலும் ஈடுபாடு இன்றி இருந்தார்கள். போரில் உயிர் துறந்த அபிமன்யு, கர்ணன் முதலியவர்களை எண்ணி எண்ணி, நெஞ்சம் வெதும்பினார்கள். திரௌபதியும் சுபத்திரையும் உள்ளத்தில் இன்பத்தைக் காணவில்லை. பரீட் சித்தை நினைத்து, அவனைப் பார்த்து, உயிருடன் இருந் தார்கள்.

அவர்களுக்குத் திருதராட்டிரனையும் குந்தியையும் பார்க்க வேண்டும் என்ற விருப்பம் உண்டாயிற்று. உடனே அதற்கான ஏற்பாடுகளைச் செய்யும்படி யுதிட்டிரர் உத்தர விட்டார்.

மறு நாளே கானகத்தைக் குறித்து அவர்கள் புறப்பட்டார்கள். நகரத்து மக்களும் திருதராட்டிரனைப் பார்க்க விரும்பி, யுதிட்டிரருடன் சேர்ந்து புறப்பட்டார்கள். ஆடவர்கள் தேர்களில் சென்றார்கள்; பெண்கள் பல்லக்குகளில் சென்றார்கள்.

அவர்கள் சென்ற சமயம் யுயுத்சும் புரோகிதரான தௌமியரும், யுதிட்டிரரின் கட்டளைப்படி நகரத்தைப் பாதுகாத்தார்கள்.

யுதிட்டிரர் யமுனையைக் கடந்து, குருசேத்திரத்தை அடைந்தார். சிறிது தூரத்திலேயே சதயூபனுடைய ஆசிரமத்தையும் திருதராட்டிரனுடைய ஆசிரமத்தையும் அவர்கள் பார்த்தார்கள். உடனே வாகனங்களிலிருந்து இறங்கிக் கொண்டு, நடந்து, திருதராட்டிரனுடைய ஆசிரமத்தை அணுகினார்கள்.

திருதராட்டிரனுடைய ஆசிரமத்தில் மான்கள் கூட்டங் கூட்டமாகத் திரிந்தன. எங்கே பார்த்தாலும் வாழைத் தோட்டங்கள். இவற்றைப் பார்த்ததும் யுதிட்டிரரின் கண்கள் நீரால் நிறைந்துவிட்டன. ஆசிரமத்தை அடைந்த அவர் "கௌரவ குலத் தோன்றல் எங்கள் பெரிய தந்தை எங்கே?" என்று வினவினார்.

"அரசே! நிராடிவிட்டு, குடத்தில் நீரும் மலர்களும் கொணர்வதற்காக யமுனைக்குப் போயிருக்கிறார்" என்று ஆசிரமவாசிகள் சொன்னார்கள்.

உடனே யுதிட்டிரர் நடந்து யமுனை ஆற்றங்கரைக்குப் போனார். அங்கே விரைந்து எல்லோரும் சென்றார்கள். திருதராட்டிரன் முதலானவர்களையும் கண்டார்கள். சகதேவன் விரைந்து ஓடி, குந்தியை அடைந்து, அவளுடைய பாதங்களைப் பிடித்துக்கொண்டு அழுதான்.

குந்தியும் அவனைக் கட்டித் தழுவிக்கொண்டு கண்ணீர் உகுத்தாள். காந்தாரியிடம் சகதேவன் வந்திருப்பதைத் தெரிவித்தாள்.

மற்ற புதல்வர்களும் வந்திருப்பதை அறிந்து அவர்களிடம் விரைந்தாள் குந்தி. பாண்டவர்கள் வந்து திருதராட்டிரனை யும் காந்தாரியையும் பாதங்களில் விழுந்து வணங்கினார்கள். குந்தியைக் கண்டதும் அவள் பாதங்களில் விழுந்தார்கள்.

குரலினால் யார் யார் வந்திருக்கிறார்கள் என்பதை திருத ராட்டிரன் தெரிந்துகொண்டான். ஆறுதல் சொல்லி அவர் களைத் தேற்றினான்.

பாண்டவர்கள் அவர்களுடைய தீர்த்த கலசங்களைத் தத்தம் கைகளில் வாங்கிக்கொண்டார்கள். நகர மாந்தரும் அரசகுலப் பெண்டிரும் திருதராட்டிர மன்னர்களைச் சந்தித் தார்கள். யார் யார் வந்திருக்கிறார்கள் என்பதை, திருத ராட்டிரனுக்கு யுதிட்டிரர் குலம் கோத்திரம் முதலியவற் றைச் சொல்லித் தெரிவித்தார்.

திருதராட்டிர மன்னனும் அவர்களை உபசரித்தான். ஆனந்தக் கண்ணீர் உகுத்து, தான் அத்தினாபுரத்தில் இருப்ப தாகவே அகமகிழ்ந்தான்.

திரௌபதி முதலிய மருகியர்கள் அரசனையும் காந்தாரி யையும் குந்தியையும் வணங்கினார்கள். அவர்களுக்கு மூவ ரும் ஆசி சொன்னார்கள். அவர்கள் ஆசிரமத்துக்குத் திரும்பியதும், ஆசிரமத்திலுள்ளவர்களுக்கு யுதிட்டிரர் முத லியவர்களை, சஞ்சயன் அறிமுகம் செய்துவைத்தான். ஆசிரம வாசிகள் திரும்பிய பின்பு, திருதராட்டிரன் யுதிட்டிரன் முதலியவர்களுடன் அளவளாவி நலம் விசாரித்தான்.

அவன் யுதிட்டிரனை நோக்கி, "வீரனே! நீ தம்பியருடன் சௌக்கியமாக இருக்கிறாயா? நகர மாந்தரும் கிராம மாந் தரும் நலத்துடன் இருக்கின்றனரா? மக்கள் பயமின்றி உன் நாட்டில் இருக்கின்றனரா? சான்றோருடைய நடையை அனுசரித்து நீ ஆட்சிபுரிகிறாயா? உன்னுடைய நாட்டில் மக்கள் யாசகம் கேட்காமல் இருக்கின்றனரா?" என்று வினவினான்.

அதற்குத் தகுந்த பதில் சொல்லிவிட்டு, "அரசே! உமது தவம் விருத்தியடைந்து வருகிறதா? என் தாய் குந்தி உங்களுக்குச் சோர்வின்றி, களைப்பின்றி, பணிவிடை புரிகிருளா? காந்தாரி தேவி துயரப்படாமல் இருக்கிருளா? அவளுடைய புதல்வர்களைக் கொன்ற எங்களை நினையாமல் இருக்கிருளா? விதுரர் எங்கே?" என்று கேட்டார்.

"மகனே! விதுரன் கடும் தவம்புரிகிருன். எப்பொழுதாவதுதான் இங்கு வருகிருன்" என்று திருதராட்டிரன் பதில் சொன்னுன்.

இது சமயம் விதுரர் அழுக்கடைந்த மேனியராய் அங்கே வந்தார். யுதிட்டிரர் அவரைப் பின்தொடர்ந்தார். சிறிது தூரம் சென்றதும் மரத்து அருகே இருக்கும் விதுரரை அணுகி, "நான் யுதிட்டிரன்" என்று சொன்னபோது, விதுரர் அவரைக் கூர்ந்து நோக்கி, யோக சக்தியால், யுதிட்டிரன் மேனியில் பிரவேசித்தார். ஆவி பிரிந்து, விதுரருடைய உடல் கீழே விழுந்தது.

யுதிட்டிரர் திரும்பி, நடந்ததைத் திருதராட்டிர மன்னனிடம் தெரிவித்தார். இதைக் கேட்டு ஆசிரமத்தில் இருந்த அனைவரும் ஆச்சரியமடைந்தனர்.

இதன் பின்னர், திருதராட்டிர மன்னன் யுதிட்டிரர் முதலானவர்களுக்கு உணவு கொடுத்தான். "அரசே! எதை ஒருவன் உண்கிருனே அதையே விருந்தினனுக்கு வழங்க வேண்டுவது முறை. இதோ காய், கிழங்கு, கனி, நீர் இவற்றை அருந்து" என்று சொல்லிக் கொடுத்தான்.

"ஆகட்டும்" என்று சொல்லி, தம்பியருடன் சேர்ந்து யுதிட்டிரர் அவற்றை உண்டார்.

திருதராட்டிர மன்னுடைய ஆசிரமத்தில் பாண்டவர்கள் ஒரு மாத காலம் தங்கினுர்கள்.

அப்போது வியாசர் அங்கு வந்தார். எல்லாரும் முறைப்படி அவரைப் பூசித்தார்கள். பிறகு எல்லாரும் உட்கார்ந்தார்கள். வியாசர் திருதராட்டிர மன்னனிடம், "அரசே! நீ என்ன சொல்ல விரும்புகிருய் என்பதை நான்

அறிவேன். நீ விரும்பும் வரத்தைக் கேள். என் தவத்தின் வல்லமையால் கிட்டும்படி செய்கிறேன்'' என்று சொன்னார்.

வியாசர் இப்படிச் சொன்னதும் திருதராட்டிரன் சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்தான். பிறகு வியாசரிடம் "தபோ தனரே! போரில் உயிர்துறந்த என் புதல்வர்களும் மற்றவர் களும் என்ன கதியை அடைந்திருக்கின்றனர் என்பதை அறிய ஆவலுடன் இருக்கிறேன்'' என்று சொன்னன்.

"சரி, அவ்வாறே செய்யலாம். நீங்கள் கங்கைக் கரைக்குச் செல்லுங்கள்'' என்று சொன்னர் வியாசர்.

அதன்படி எல்லோரும் மகிழ்ச்சியுடன் கங்கைக் கரைக் குச் சென்றனர். மாலைக் கடன்களை முடித்துக்கொண்டு கங்கைக் கரையில் அமர்ந்தனர்.

அதன் பின்னர் வியாசர் கங்கையில், போரில் இறந்தவர் களை அழைத்தார். பீஷ்மர், துரோணர், துரியோதனன், அபிமன்யு அனைவரும் காட்சியளித்தனர்.

பாண்டவர்களும் கௌரவர்களும் தங்கள் பகைமையை மறந்து, ஒருவருடன் ஒருவர் உளம் மகிழ்ந்து உறவாடினர்.

## ஆசிபெற்றனர்

இரவுப் பொழுதைக் கங்கைக் கரையில் உல்லாசமாகக் கழித்துவிட்டு, திருதராட்டிர மன்னனும் பாண்டவர்களும் ஆசிரமத்துக்குத் திரும்பினர். பிறகு வியாசர் "மன்னு! உன் மைந்தர்கள் எப்படி இருக்கின்றனர் என்பதை நீ பார்த்தாய். யுதிட்டிரன் முதலியோர் வனத்துக்கு வந்து ஒரு மாதம் ஆயிற்று. அவர்களை அத்தினபுரத்துக்குத் திருப்பி அனுப்பு. மிகுந்த கண்காணிப்புடன் இருந்து ராஜ்யத்தைப் பாது காப்பது அவசியம். இல்லையேல் ராஜ்யம் பகைவர்கள் வசமாகிவிடும்'' என்று சொன்னர்.

வியாசர் இப்படிச் சொன்னதும் திருதராட்டிர மன்னன் யுதிட்டிரரை அழைத்து, பகைமையற்றவனே! நீ நலமுடன் வாழ்க! என் மனத்தில் இருந்த கவலை அகன்றுவிட்டது. நீங்கள் வந்து என்னுடன் தங்கியதால், நான் அத்தினபுரத்தில் இருப்

பதுபோல அக மகிழ்ந்தேன். நீங்கள் இனி நகரம் திரும்ப லாம். இனி, கடும் தவ வாழ்வை மேற்கொண்டு நற்கதி அடைய வேண்டும். நமது குலத்தின் பெருமையும் பாரமும் உன்னிடம் ஒப்படைக்கப்பட்டு இருக்கின்றன. இன்றைக் காவது நாளைக்காவது இங்கிருந்து புறப்படு. நீ அனைத் தையும் அறிந்தவன். உனக்கு நான் சொல்லத்தக்கது ஒன்றும் இல்லை'' என்று சொன்னான்.

அதற்கு யுதிட்டிரர் ''அரசே! என் தம்பியரும் மற்றவர் களும் அத்தினபுரம் திரும்பட்டும். நான் உம்முடன் இருந்து கொண்டு, உமக்கும் என் தாயார் இருவருக்கும் பணிவிடை புரிகிறேன்'' என்று பதில் சொன்னார்.

உடனே காந்தாரி, ''மைந்தா! அரசர் சொற்படி நட. தாமதியாது நாடு திரும்பு. உன்னால் குலம் மேன்மை அடை யட்டும்'' என்று சொன்னாள்.

காந்தாரி இப்படிச் சொன்னதும் யுதிட்டிரரின் கண்கள் நீரால் நிறைந்துவிட்டன; அவர் அன்புமேலிட்டு, தன் தாய் குந்தியை நோக்கினார்; இரு கண்களையும் துடைத்துக் கொண்டு பணிவுடன், ''அம்மா! புகழ்பெற்ற காந்தாரியும் மன்னரும் என்னைப் போகச் சொல்லுகின்றனர். உன்பால் அன்புள்ள எனக்கு நாடு திரும்ப விருப்பம் இல்லை. தவம் செய்ய வேண்டும் என்ற எண்ணமும் என் உள்ளத்தில் மேலோங்கி நிற்கிறது. என் உறவினர்கள் அழிந்துவிட்டார் கள்; எனக்குள்ள வலிமையும் குன்றி வருகிறது. பாஞ்சாலர் களில் அனைவரும் மிச்சமின்றி அழிந்துபோயினர்; அவர் களுடைய குலம் தழைக்க வழி இல்லை; அனைவரையும் துரோ ணர் பஸ்பமாக்கிவிட்டார். எஞ்சியிருந்த மச்ச நாட்டினரை யும் சேதி நாட்டனரையும் மிச்சம் வையாது இரவில் அசுவத் தாமா அழித்துவிட்டார். விருஷ்ணிகளின் படையும் அழிந்து விட்டது. யார் உதவியைக் கொண்டு நாட்டை நான் ஆளப் போகிறேன்! ஆகவே எனக்கு நாட்டில் விருப்பம் இல்லை. தவம் செய்வதையே விரும்புகிறேன்'' என்று சொன்னார்.

"மைந்தா! நீ இவ்விதம் சொல்லாதே. நாடு திரும்பி, ராஜ்ய பரிபாலனம் செய். நான் இங்கே இருந்து தவம் செய்கிறேன். என் சொல்லைத் தட்டாதே" என்று குந்தி சொன்னாள்.

இதன் பின்னர் யுதிட்டிரர் திருதராட்டிரனை அணுகி, வருத்தத்துடன், "அரசே! உமது ஆசியை நாங்கள் பெற்றோம். மகிழ்ச்சியுடன் நாடு திரும்புகிறோம். அனுமதி கொடுங்கள்" என்று வேண்டினார்.

யுதிட்டிரருக்கு மரியாதை செய்து, திருதராட்டிரன் மீண்டும் ஆசி கூறினான். பலசாலிகளுள் சிறந்தவனை பீமனுக்குச் சமாதானம் சொன்னான். அவனும் அதை ஏற்றுக் கொண்டான். அர்ச்சுனன், நகுலன், சகாதேவன் இவர்களை அலங்காரம் செய்து, ஆனந்தப்படுத்தி ஆசி சொன்னான்.

அவர்கள் அவனை வலம் வந்து வணங்கி விடை பெற்றுக் கொண்டார்கள்.

திரௌபதி முதலானவர்களும் மாமியர் இருவரையும் கட்டித் தழுவி விடை பெற்றுக்கொண்டனர்; மன்னனை வணங்கி ஆசிபெற்றனர்.

பிறகு யுதிட்டிரர் தன் தம்பியருடனும் மனைவியுடனும் பரிவாரத்தினருடனும் அத்தினபுரியை அடைந்தார்

## மூவரின் முடிவு

பாண்டவர்கள் அத்தினபுரம் திரும்பி, நாட்டைப் பரிபாலித்துக்கொண்டிருந்தனர். அப்போது தற்செயலாக, நாரத மகரிஷி அங்கே வந்தார்.

வந்ததும் யுதிட்டிரர் அவரை முறைப்படி பூசித்தார். "முனிபுங்கவரே! தாங்கள் எனக்குத் தரிசனம் தந்து வெகு காலம் ஆயிற்று. தாங்கள் எங்கு எங்கே சஞ்சரித்து இப்பொழுது இங்கு வந்திருக்கிறீர்கள்? நான் தங்களுக்கு என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டார்.

"அரசே! உன்னைப் பார்த்து வெகு காலம் ஆயிற்றே என்று கருதித்தான் இப்பொழுது இங்கு வந்தேன். கங்கை முதலிய தீர்த்தங்களைப் பார்த்துவிட்டு, தபோவனத்திலிருந்து இங்கு வந்தேன்" என்று நாரதர் பதில் சொன்னார்.

"முனிவரே! என் தந்தை திருதராட்டிர மன்னர் சிறந்த தவத்தைச் செய்கிறார் என்று கேள்விப்பட்டேன். அவர் நலமாய் இருக்கிறாரா? என் தாய் குந்தியும் காந்தாரியும் சௌக்கியமாக இருக்கின்றனரா? சஞ்சயன் எவ்வாறு இருக்கிறார்?" என்று யுதிட்டிரர் கேட்டார்.

"அரசே! நான் சொல்வதைக் கேள். நான் தபோவனத்தில் கண்டதையும் கேட்டதையும் உள்ளது உள்ளபடி உனக்குச் சொல்லுகிறேன். நீங்கள் அத்தினபுரம் திரும்பியதும், திருதராட்டிரனும் மற்றவர்களும் குருசேத்திரத்திலிருந்து கங்கைத் துவாரம் சேர்ந்தனர். அங்கு இருந்து கொண்டு உன் தந்தை திருதராட்டிர மன்னன் கடும் தவம் புரிந்தான்; மாதர்களும் விரதம் முதலியன அனுஷ்டித்தனர். இவர்கள் வனத்தில் சஞ்சரித்துக்கொண்டிருந்தபோது, பெரிய காட்டுத் தீ உண்டாகி நாற்புறமும் சூழ்ந்து கொண்டது. தப்பியோட அவர்களுக்கு வழி தெரியவில்லை. ஆகவே, திருதராட்டிரன் சஞ்சயனிடம், "சஞ்சயா! எங்களைப் பற்றி நீ கவலைப்படாதே. நெருப்புச் சுழலில் சிக்காமல் நீ தப்பித்துக்கொள். நாங்கள் அக்கினியுடன் கலந்து நற்கதியை அடைகிறோம்" என்று சொன்னான்.

"அரசே! நீர் நெருப்பில் சிக்கி மாள்வது உசிதம் அன்று. தீயினின்று தப்புவிப்பதற்கு எனக்கு வழியும் தெரியவில்லை. நான் என்ன செய்ய வேண்டும் என்பதை நீரே கட்டளையிடும்" என்று சொன்னான் சஞ்சயன்.

"சஞ்சயா! நீ தப்பித்துச் செல். எங்களைப்பற்றி நீ கவலைப்பட வேண்டாம். நீர், நெருப்பு, காற்று, உண்ணாமை இவற்றால் நேரும் மரணம் தவசிகளுக்கு உரியது. ஆகையால் நீ போ" என்று சொன்னான் திருதராட்டிரன்.

இவ்விதம் சொல்லிவிட்டு, காந்தாரி, குந்தி, திருதராட்டிரன் மூவரும் கிழக்கு முகமாக உட்கார்ந்தார்கள்; காட்டுத் தீயுடன் கலந்து மேலான பதவியை அடைந்துவிட்டார்கள்.

சஞ்சயன் இது விவரத்தை மற்றத் தவசியர்களிடம் தெரிவித்துவிட்டு, தவம் செய்ய இமயமலைக்குப் போய்விட்டான்.

"அரசே! இதற்காக நீ துயரப்பட வேண்டாம். அவர்கள் மூவரும் சொர்க்கத்தில் இருக்கின்றனர்" என்று சொல்லி முடித்தார் நாரதர்.

திருதராட்டிர மன்னனின் இந்த முடிவைக் கேட்டுப் பாண்டவர்கள் பெரிதும் வருந்தினார்கள். "என்ன துன்பம்! என்ன துன்பம்!" என்று யுதிட்டிரர் கதறி அழுதார். மற்றவர்களும் அழுதார்கள். அரண்மனையே சோகமாய்க் காட்சி அளித்தது.

இதன் பின்னர், தம்பியர் தொடர்ந்து வர, யுதிட்டிரர் கங்கைக்குச் சென்று, இறந்தவர்களை எண்ணி. உதக தானம் முதலியவற்றைச் செய்துவிட்டு, அரண்மனை திரும்பினார். மனத்தில் மகிழ்ச்சியின்றி நாட்டைப் பரிபாலித்து வந்தார்.

# வியாசர்

அருளிய

# மகா பாரதம்

## இருப்பு உலக்கை

யுதிட்டிரர் ஆட்சிப் பொறுப்பை ஏற்று முப்பத்தாறு ஆண்டுகள் நாட்டைப் பரிபாலித்தார். கிருஷ்ணனும் துவாரகையிலிருந்துகொண்டு ஆட்சிபுரிந்து வந்தார்.

கிருஷ்ணனுடைய குலத்தைச் சேர்ந்த விருஷ்ணிகள், அந்தகர்கள், போஜர்கள் என்னும் பெயர்களைக் கொண்ட யாதவர்கள், வரம்பு கடந்த சுகத்தில் அழுந்திக்காலத்தையும் பொழுதையும் கழித்தார்கள். சுக வாழ்க்கையின் காரணமாக, அடக்கமும் ஒழுக்கமும் குன்றி, பெரியோர்களைப் பரிகசிக்கவும் துணிந்தார்கள்.

ஒரு நாள், விசுவாமித்திரர், நாரதர், கண்வர் ஆகிய மூவரும் துவாரகைக்கு வந்திருந்தார்கள். அவர்களைப் பரிகசிக்க எண்ணங்கொண்டு, சாரணன் முதலான யாதவ வீரர்கள், சாம்பன் என்பவனைப் பெண்போல அலங்கரித்தார்கள். பிறகு, அவனை மகரிஷிகளிடம் அழைத்துச் சென்று, "ரிஷி

களே! இவள் பப்ருவின் மனைவி. இவளுக்குக் குழந்தை வேண்டும் என்ற விருப்பம் அதிகம். என்ன குழந்தை பிறக்கும்? சொல்லுங்கள்'' என்று கேட்டார்கள்.

விபரீத வார்த்தைகள் சொல்லி, யாதவர்கள் தங்களைப் பரிகசிக்கிறார்கள் என்பதை, ரிஷிகள் தெரிந்துகொண்டார்கள். ஆகவே, அவர்கள் கோபமுற்று ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டார்கள். பிறகு யாதவர்களை நோக்கி, "இவளுக்கு ஓர் இருப்பு உலக்கை பிறக்கும். தீய நடத்தையுள்ள உங்கள் குலம் முழுவதையும் அது அழிக்கும்'' என்று சபித்துவிட்டு, ரிஷிகள் வந்த வழியே திரும்பிவிட்டார்கள்.

அதன்படி சாம்பன் என்பவன், மறுநாள் ஓர் இருப்பு உலக்கையைப் பெற்றான். யாதவர்கள் பயந்து போனார்கள். இது விவரத்தை அரசனிடம் யாதவர்கள் தெரிவித்தார்கள்.

அரசன் உக்கிரசேனன் அந்த உலக்கையைப் பொடிப் பொடியாகச் செய்து, கடலில் வாரி இறைக்கும்படி உத்தர விட்டான்.

அதன்படி யாதவர்கள் செய்தார்கள்.

விவரம் தெரிய வந்ததும் நகரில் யாரும் கள்ளோ சாராயமோ அருந்தக் கூடாது என்றும், உற்பத்தி செய்யக் கூடாது என்றும் அரசன் தடை உத்தரவு பிறப்பித்தான்; மீறி நடப்பவர்கள் தண்டிக்கப்படுவார்கள்; உயிரோடு அவர்களின் தோலை யுறிக்கப்படும் என்று பறையறைந்து அறிவிக்கச் செய்தான்.

ஆயினும், யாதவர்கள் கட்டுப்படவில்லை. அவர்கள் வெட்கமின்றி ஒழுக்கம் கெட்ட வாழ்க்கை வாழத் தலைப்பட்டனர். சான்றோரையும் குருமார்களையும் யாதவ குல ஆடவர்கள் அவமதித்தார்கள்; கிருஷ்ணன், பலராமர் இவர்களையும்கூட அவர்கள் மதிக்கவில்லை; கணவர்கள் மனைவியை மதித்தார்கள்; மனைவி, கணவனை ஏமாற்றினாள்.

நகரில் பல துர்நிமித்தங்கள் தோன்றின. ஆடுகள் நரிகள் போல ஊளையிட்டன; தூங்குகின்றவர்களின் நகங்களையும் கூந்தல்களையும் எலிகள் தின்றன. நாய்களிடத்தில் பூனைகளும் கீரிகளிடத்தில் எலிகளும் பிறந்தன. வடித்து வைத்த

அன்னத்தில் புழுக்கள் தோன்றின. மங்கல ஒலிகளுக்குப் பதிலாகக் கழுதைகள் கத்தும் ஒலி, பயங்கரமாகவும் மிகுதியாகவும் கேட்டது.

காலம் மாறுபட்டுக்கொண்டு வருவதை வாசுதேவர் அறிந்தார். பதின்மூன்றாவது நாளன்றே அமாவாசை ஏற்பட்டது. "காந்தாரி இட்ட சாபம் பலிக்கப் போகிறது. குலம் அழிவதற்கு உரிய தருணம் வந்துவிட்டது. இனி இதை யாரும் தடுக்க முடியாது" என்ற நிலைக்கு வந்தார்.

ஆகவே யாதவர்கள் யாவரும் தீர்த்த யாத்திரைக்குக் கிளம்ப வேண்டும் என்று கண்ணன் உத்தரவிட்டார்.

மது, இறைச்சி, இதர உணவு வகைகள் ஆகியவற்றைச் சித்தப்படுத்திக்கொண்டு, வாகனங்களில் ஏறி, அந்தகர்களும் விருஷ்ணிகளும் உல்லாசப் பிரயாணத்துக்காகக் கடற்கரைக்குப் புறப்பட்டார்கள். மனைவியர்களை அழைத்துச் சென்ற அவர்கள், பிரபாச தீர்த்தத்தில் வசித்தார்கள். ஆடலும் பாடலும் நடக்க, அவர்கள் அங்கே மது அருந்தி மகிழ்ந்தார்கள். குடித்துக் குடித்துப் போதையில் மூழ்கினார்கள் யாதவர்கள்; பலராமரும் கிருஷ்ணனும் பார்த்திருக்க, அவர்கள் கூச்சமின்றி மது அருந்தினார்கள்.

சாத்யகி, கிருதவர்மா, கதன், பப்ரு முதலியோர் ஒன்றாக அமர்ந்து பானம் செய்தார்கள். அப்போது கிருதவர்மாவைப் பரிகசித்து, சாத்யகி பேசினான். "ஏ கிருதவர்மா! அரச குலத்தில் பிறந்த யோக்கியன் எவனாவது, தூங்குகிறவர்களைக் கொல்வானா? யாதவ குலத்துக்கே அவகீர்த்தி உண்டுபண்ணும் செயல் அல்லவா இது?" என்று சொன்னான்.

போதையிலிருந்த சாத்யகியின் கூற்றை மற்ற யாதவர்களும் ஆதரித்துப் பேசினர்; கிருஷ்ணனுடைய குமாரன் பிரதியுத்மன் இதற்காகச் சாத்யகியைப் பாராட்டினான்.

இந்த அவமதிப்பைக் கிருதவர்மா பொறுக்கவில்லை. அவன் கடும் கோபம்கொண்டான். "கையறுக்கப்பட்டு, பிராயோபவேசம் செய்து, யோகத்தில் இருந்த மகான்

பூரிசிரவஸை, நீ கொடிய முறையில் கொன்றாய். அப்படிப் பட்ட உனக்கு என்னை அவமதித்துப் பேச வாய் ஏது?'' என்று கேட்டான்.

கிருதவர்மா இப்படிச் சொன்னதும், கிருஷ்ணன் கோபத்தால் முகத்தைச் சுளித்துக்கொண்டு கிருதவர்மாவைப் பார்த்தார்.

இது சமயம் சாத்யகி, எழுந்து ஓடி, ஒரு கத்தியை எடுத்து வந்து, "தூங்கினவர்களைக் கொன்ற அதமனை இதோ கொல்கிறேன்'' என்று சொல்லி, கிருதவர்மாவின் தலையை அந்த வாளால் வெட்டி வீழ்த்தினான்; மற்றவர்களையும் வெட்டினான். கலகம் முற்றிவிட்டது.

கண்ணன் தடுக்க முயன்று பார்த்தார். முடியவில்லை. யாதவர்கள் பலரும் சாத்யகியைச் சுற்றி வளைத்துக்கொண்டார்கள்; கோபத்துடன் இருந்த அவர்கள், எச்சில் பாத்திரங்களைத் தூக்கி எறிந்து, சாத்யகியை அடித்தார்கள். கலகம் தீவிரமாயிற்று. கண்ணன் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே, சாத்யகியும் பிரதியுத்மனனும் கலகத்தில் உயிர் துறந்தார்கள்.

சாத்யகியும் தன் புதல்வனும் கொல்லப்பட்டதை அறிந்த கிருஷ்ணன் கடும் கோபம்கொண்டார். பக்கத்தில் முளைத்து நின்ற கோரைப் புற்களைப் பிடுங்கினார். அவை உடனே இருப்பு உலக்கைகளாக மாறின. அவற்றைக் கொண்டு, எதிரில் இருந்தவர்கள் எல்லாரையும் கண்ணன் அடித்துக் கொன்றார்; அந்தகர், போஜர், விருஷ்ணிகள் ஒருவரை ஒருவர் ஓங்கி உலக்கைகளால் அடித்துக்கொண்டார்கள். யார் கோரைப் புல்லைப் பிடுங்கினாலும், உடனே, அது உலக்கையாக மாறிற்று. தந்தை மகனையும் மகன் தந்தையையும் உலக்கையால் அடித்துக் கொன்றனர்; நெருப்பில் விழும் விட்டிற் பூச்சிபோல, ஒருவரை ஒருவர் உலக்கையால் அடித்துக்கொண்டு உயிர் துறந்தனர்.

காலத்தின் மாறுதலை அறிந்த கிருஷ்ணன், உலக்கையைக் கையில் பிடித்தவாறு கலகத்தைப் பார்த்துக்கொண்டிருந்தார். பிறகு, கோபமுண்டு யாரையும் மீதம் வையாமல்

உலக்கையால் அடித்துக் கொன்றார். அப்போது தாருகனும் பப்ருவும் "பகவானே! பெரும்பாலோர் உயிர் துறந்தனர்; பலராமர் எங்கு இருக்கிறாரோ தெரியவில்லை. அவரைத் தேடி நாம் செல்லாம்" என்று சொன்னார்கள்.

அதன்படி அவர்கள் மூவரும் புறப்பட்டுச் சென்றார்கள். பலராமர் ஒரு மரத்தடியில் உட்கார்ந்து ஆலோசனையில் மூழ்கி இருந்தார். அப்போது கிருஷ்ணன் தாருகனை நோக்கி, "நீ பாண்டவர்களிடம் சென்று, யாதவ குலம் அழிந்து போன விவரத்தைத் தெரிவி. அர்ச்சுனன் விரைவில் இங்கு வரட்டும்" என்று சொன்னார்.

அதன் பேரில் தாருகன் தேரில் ஏறிக்கொண்டு, கௌரவர்களின் நாட்டுக்குப் புறப்பட்டான்.

பிறகு, அவர் பப்ருவை நோக்கி, "மாதர்களைக் காப்பதற்காக நீ செல். பொருள்மீது நாட்டமுள்ள திருடர்கள் அவர்களைத் துன்புறுத்த வேண்டாம்" என்று சொன்னார்.

கவலையுடன் அவன் புறப்பட்டுச் சென்றான். அப்போது பெரிய உலக்கை ஒன்று அவன்மீது விழவே, அவன் உயிர் துறந்தான்.

இதனால் கலக்கமுற்ற வாசுதேவர் தன் தந்தையிடம் திரும்பி, "அர்ச்சுனனுடைய வரவை எதிர்பார்த்துக் காத்திருக்கும் மாதர்களைக் காப்பாற்றும். பலராமர் என்னை எதிர் பார்த்து வனத்தில் காத்திருக்கிறார். நான் அவரிடம் செல்கிறேன். யாதவ குலம் அழிந்ததைப் பார்த்தேன்; கௌரவர்கள் அழிந்ததையும் பார்த்தேன். யாதவர்கள் இல்லாத துவாரகையைப் பார்க்க என் மனம் பொறுக்கவில்லை. ஆகவே, நான் கானகம் சென்று தவம் புரியப் போகிறேன்" என்று சொல்லி, அவர் பாதங்களைத் தொட்டு வணங்கி, விடைபெற்றுக்கொண்டு கானகம் போனார்.

# கண்ணனின் முடிவு

தந்தையை வணங்கி விடைபெற்றுக்கொண்டு கிருஷ்ணன் கிளம்பியதும், துவாரகையின் மகளிரும் சிறுவர்களும் வாய்விட்டு அரற்றி அழுதார்கள். அவர்களுக்குக் கண்ணன் ஆறுதல் சொன்னார். "அர்ச்சுனன் துவாரகைக்கு வருகிறான். உங்கள் துயரங்களை அவன் துடைப்பான்" என்று சொன்னார்.

பிறகு, ஏகாந்தமாக இருக்கும் பலராமரிடம் சென்றார். அப்போது, பலராமர் யோக நிலையில் இருந்தார். அவருடைய முகத்திலிருந்து பொன்னிறமான நாகம் ஒன்று வெளிப்படுவதை கிருஷ்ணன் கண்டார்.

ஆயிரம் தலைகளுள்ள அந்த நாகம் சிவந்த முகங்களுடனும் பெரிய உடலுடனும் புறப்பட்டுக் கடலில் புகுந்தது. நாகர்கள் அந்த நாகத்தை மரியாதையுடன் வரவேற்றனர்.

தன் தமையன் சென்றவுடன் சூனியமான அந்தக் கானகத்தில் கிருஷ்ணன் ஆலோசனையில் மூழ்கிச் சஞ்சரித்தார்; ஓய்ந்து பூமியில் உட்கார்ந்தார்; காந்தாரியின் சாபத்தை நினைத்துப் பார்த்தார். யாதவ குலமும் கௌரவ குலமும் அழிவுற்றதை நினைந்து மனம் புழுங்கினார். தாமும் செல்ல வேண்டிய காலத்தை உணர்ந்தார். புலன் பொறிகளை அடக்கி, யோகத்தில் அமர்ந்து, தரையில் படுத்துக் கொண்டார்.

அது சமயம் ஜரன் என்னும் வேடன் ஒருவன் அங்கே வந்தான். யோகத்தில் படுத்திருக்கும் கிருஷ்ணனை மான் என்று கருதிய அவன் அம்பால் அடித்துவிட்டு, அருகே சென்று பார்த்தான்.

பீதாம்பரம் தரித்து, யோக நிலையில் இருப்பவரை, தான் அம்பெய்து கொன்று இருப்பதைப் பார்த்துத் திடுக்கிட்டான்; வருந்தினான். நடுக்கத்துடன் சென்று அவருடைய இரு பாதங்களையும் பற்றிக்கொண்டான்.

அவனுக்கு ஆறுதல் சொல்லிவிட்டு, கிருஷ்ணன் ஆகாயத் தில் கிளம்பினார். ஆகாயம் முழுவதும் ஒளியினால் பிரகாசித் தது. வசுக்கள், கந்தர்வர்கள், அப்சரசுகள் முதலியோர் அவரை எதிர்கொண்டு, களிப்புடன் வரவேற்றார்கள்; போற்றினார்கள்; பூமாரி பொழிந்து புகழ்ந்தார்கள்.

## ஆற்றல் குறைந்தது

தாருகன் கௌரவர்கள் நாட்டை அடைந்தான். பாண்டவர்களைச் சந்தித்து, "ஒருவருடன் ஒருவர் உலக்கை யால் அடித்துக்கொண்டு யாதவர்கள் இறந்து போயினர்" என்று தெரிவித்தான்.

விவரம் தெரியவந்ததும் பாண்டவர்கள் துயரத்தால் நடுங்கினர். கண்ணனுடைய பிரிய நண்பன் அர்ச்சுனன் மற் றவர்களிடம் விடைபெற்றுக்கொண்டு துவாரகைக்குப் புறப் பட்டான். துவாரகை நகரம் கணவனை இழந்த மங்கை போலப் பொலிவிழந்து இருந்தது.

அந்த நகர மாந்தர்கள் பார்த்தனைக் கண்டதும் அழுது புலம்பினார்கள். கிருஷ்ணனின் மனைவியர் பதினாயிரவரும் கணவரையும் புதல்வர்களையும் இழந்து கதறுவதை அர்ச்சுனன் கண்டான். கண்கள் நீரை மளமள வென்று கொட்டிய காரணத்தால் அர்ச்சுனனால் அவர்களைப் பார்க்க முடியவில்லை; மூர்ச்சித்து அவன் கீழே சாய்ந்துவிட் டான்.

சத்தியபாமையும் ருக்மணியும் வந்து, அர்ச்சுனனைச் சந் தித்து அழுது புலம்பினார்கள். அவர்களுக்கு ஆறுதல் சொல்லிவிட்டு, வசுதேவரைப் பார்க்க அர்ச்சுனன் சென் றான். நீர் சொறியும் கண்களுடன் சென்று துயரத்துடன் இருக்கும் வசுதேவரின் இரு பாதங்களையும் அவன் பற்றிக் கொண்டான்.

அவனை உச்சிமோக்க வசுதேவர் விரும்பினார். அவரால் முடியவில்லை. முதுமையினால் தளர்ச்சியுற்று இருந்த அவர் தன் இரு கைகளாலும் அர்ச்சுனனைக் கட்டிக்கொண்டு, யாதவர்களின் நினைவை நினைத்து அழுதார். "அர்ச்சுனா! வீரர்களை வென்ற மன்னர் அனைவரும் ஒருவருடன் ஒருவர் உலக்கையால் அடித்துக்கொண்டு உயிர் துறந்தார்கள். இறக்க வழி தெரியாமல் நான் உயிருடன் இருக்கிறேன். விருஷ்ணிகளின் அழிவுக்குச் சாத்யகியும் பிரதியுத்மனனுமே முக்கியக் காரணம் ஆவர். சாபத்தின் காரணமாகத்தான் இந்தப் பெரிய அழிவு நேர்ந்திருக்கிறது. விவரம் தெரிந்து துவாரகைக்கு நீ வருவாய் என்றும், உன் சொற்படி நடக்குமாறும் சொல்லிவிட்டு, வாசுதேவன் சென்றான். இனி உயிருடன் இருக்க எனக்கும் மனம் இல்லை. நானும் உயிரை விட்டுவிடப் போகிறேன். மாதர்களையும் ராஜ்யத்தையும் செல்வத்தையும் உன்னிடம் நான் ஒப்படைத்துவிட்டேன்" என்று சொன்னார்.

மாதுலர் இப்படிச் சொன்னதைச் செவிமடுத்த அர்ச்சுனன் மனக்கலக்கமுற்றான். அவரை நோக்கி, "சிறந்தவரே! வாசுதேவரையும், உறவினர்களையும் இழந்த பின்னர் இந்தப் பூமியைப் பார்த்துக்கொண்டிருக்க எனக்கு மனம் வராது. தருமராஜர், பீமசேனர், சகதேவன், நகுலன், திரௌபதி, அனைவரும் ஒரே மனப்பாங்கை உடையவர்கள். முதியவர்களையும் பாலர்களையும் மாதர்களையும் நான் துவாரகையிலிருந்து இந்திரப்பிரத்தத்துக்கு அழைத்துச் செல்கிறேன்" என்று சொன்னான்.

பிறகு, அதற்கான காரியங்களைச் சித்தம் செய்யச் சொன்னான். அன்று இரவுப் பொழுதை, கிருஷ்ணனுடைய அரண்மனையில் சோகத்துடன் கழித்தான்.

மறுநாள், பொழுது புலர்ந்த சமயம் வசுதேவர் யோகத்தில் அமர்ந்து உயிர் நீத்தார். மாதர்கள் அனைவரும் அலறிப் புடைத்துக்கொண்டு அழுதார்கள். தேவகி, சுபத்திரை, ரோகிணி, மதிரை ஆகிய நால்வரும் தங்கள் கணவர் வசுதேவருடன் உடன்கட்டை ஏற முடிவு செய்தார்கள்.

அர்ச்சுனன் சிறந்த பல்லக்குத் தயார் செய்து, அதில் வசுதேவரை வைத்து, சுடுகாட்டுக்கு எடுத்துச்செல்ல ஏற்பாடு செய்தான். அடக்கம் செய்ய வசுதேவரை மிக்க மரியாதை யுடன் சுமந்து சென்றார்கள். நகர மாந்தரும் மற்றவரும், மாதர்களும் வாட்டமுற்ற முகத்துடன் பல்லக்கின் பின்னே சென்றார்கள்.

பிறகு உயிருடன் இருக்கும் காலத்தில் எந்த இடத்தை வசுதேவர் பிரியமாகக் கொண்டாடினாரோ, அந்த இடத் தில் சந்தனக் கட்டையால் சிதையை அடுக்கி, வசுதேவரின் சடலத்தை வைத்து, தகனம் செய்தார்கள். அவருடைய மனை வியர் நால்வரும் சிதையில் ஏறி, தங்கள் கணவருடன் சேர்ந்து, மேலான கதியை அடைந்தார்கள்.

பிறகு விருஷ்ணிகள் உலக்கையால் அடித்துக்கொண்டு மாண்டு கிடக்கும் இடத்துக்கு அர்ச்சுனன் போனான். எல்லோ ருக்கும் செய்யும் முறைப்படி கிரியைகளைச் செய்து முடித் தான்.

கிருஷ்ணன், பலராமர் இவர்களுடைய சடலங்களைக் கண்டதும் துக்கம்மேலிட்டுப் புலம்பி அர்ச்சுனன் அழுதான். பிறகு, தகுந்தவர்களைக் கொண்டு, அவர்களின் சடலங்களைத் தகனம் செய்வித்தான்.

யாவும் முடிந்த பின்னர், ஏழாம் நாளன்று, துவாரகை யிலிருந்து அத்தினாபுரத்துக்குப் புறப்பட்டான்; விருஷ்ணிகுல மாதர்கள் அழுது புலம்பிக்கொண்டு அவனைப் பின்தொடர்ந் தார்கள்: குதிரைக்காரர்களும் தேராளிகளும் வேலைக்காரர் களும் அவர்களைச் சுற்றிச் சூழ்ந்துகொண்டு, பாதுகாவலாகச் சென்றார்கள்.

நகரத்தைவிட்டு, அவர்கள் அப்பால் சென்றதும், துவா ரகை, சமுத்திரத்தில் மூழ்கிவிட்டது.

அர்ச்சுனன் காடுகளிலும் மலைச்சாரல்களிலும் நதிகளி லும் தங்கித்தங்கி, விருஷ்ணிகுல மாதர்களை அழைத்துக் கொண்டு சென்றான்.

ஆயிரக்கணக்கான மாதர்களைப் பார்த்தன் ஒருவன் மட்டும் துணைவந்து, அழைத்துச் செல்கிறான் என்பதை அறிந்த திருடர்கள், பெண்களிடமிருக்கும் நகைகளை அபகரிக்க விரும்பி, பயணம் செய்யும் அந்தக் கூட்டத்தினரைத் தாக்கினார்கள்.

அர்ச்சுனன் அவர்களை நோக்கி, "தீயவர்களே! என் அம்புக்கு இரையாகாமல் அப்பால் செல்லுங்கள்" என்று எச்சரித்தான்.

அதைப் பொருட்படுத்தாமல், திருடர்கள் மாதர்களையும் மற்றவர்களையும் தாக்கினார்கள்.

அர்ச்சுனன் தனது பிரசித்தமான காண்டீபத்தை எடுத்து, நாண்பூட்டத் தொடங்கினான்; முடியவில்லை; சிரமப்பட்டுப் பூட்டி முடித்தான். அத்திர மந்திரங்கள் நினைவுக்கு வரவில்லை. தனது வலிமை விபரீதமாக மாறியிருப்பதைக் கண்டு, அர்ச்சுனன் நாணமுற்றான்.

விருஷ்ணி குல மாதர்களை அர்ச்சுனனால் பாதுகாக்க முடியவில்லை. திருடர்கள் அவர்களை நாற்புறங்களிலும் இழுத்தார்கள்; தூக்கிக்கொண்டு ஓடினார்கள். முயன்றும் இதைத் தடுக்க முடியாது போனது குறித்து அர்ச்சுனன் பெருமூச்சு விட்டு வருந்தினான். 'இது தெய்வத்தின் திருவுளம்' என்று கருதி, துயரமுற்று இருந்தான்.

அர்ச்சுனனே வருத்தமுற்று, மிகுந்திருந்த விருஷ்ணிகுல மாதர்களை அழைத்துக்கொண்டு, குருசேத்திரத்தை அடைந்தான். யுதிட்டிரரின் அனுமதியின் பேரில் எஞ்சியிருந்த யாதவ வீரர்களுக்கு, ஒவ்வோர் இடத்தைக் கொடுத்து, அதற்கு அவர்களை அரசன் ஆக்கினான்.

கிருஷ்ணனுடைய மனைவியர் எஞ்சியிருந்தவர்களை இந்திரப்பிரத்தத்துக்கு அழைத்துச் சென்றான். அங்கே சென்றதும் ருக்மணி முதலியோர் தீக்குளித்து உயிர் துறந்தனர். சத்தியபாமை முதலியோர் தவ வாழ்வை மேற்கொண்டனர்.

அர்ச்சுனனுக்குத் துக்கம் தாங்க முடியவில்லை; நீர் மல்கிய கண்களுடன் சென்று, வியாச மகரிஷியை அவன் தரிசித்தான்.

# காலத்தின் கோலம்

"அர்ச்சுனன் வியாசருடைய ஆசிரமத்துக்குச் சென்ருன். ஏகாந்தமான இடத்தில் இருக்கும் அவரை அணுகி "நான் அர்ச்சுனன்" என்று சொல்லி வணங்கினுன்.

"உனக்கு நல்வரவு" என்ருர் வியாசர். பிறகு "உட்கார்" என்று பணித்தார்.

அர்ச்சுனன் உட்கார்ந்தான். அவன் கலக்கமுற்று இருப்பதை வியாச மகரிஷி கவனித்தார். அவர் அவனிடம் "அர்ச்சுனு! நீ எதாவது தவறு செய்துவிட்டாயா? அல்லது எதிலும் தோல்வி அடைந்தாயா? எதனுல் வாட்டமுற்று இருக்கிருய்?" என்று கேட்டார்.

"மகரிஷியே! தாமரை மலரை நிகர்த்த கண்களுள்ள கிருஷ்ணன் மேகம்போன்ற தனது திருமேனியை விட்டு, பரம பதம் அடைந்துவிட்டார், அதனை நினைக்க நினைக்க, எனக்கு மதிமயக்கம் ஏற்படுகிறது. உரையாடுதல், தீண்டல், தரிசித்தல் இந்த மூன்றும் கண்ணனிடம் அமிர்தத்துக்கு ஒப்பாய் இருக்கும் அவற்றை இழந்து இருப்பதால், என் புத்தி மயங்குகிறது. உலக்கைகளால் அடித்துக்கொண்டு, யாதவ வீரர்கள் அழிந்துவிட்டார்கள். வாளையும் ஈட்டியையும் ஏற்கும் ஆற்றல் பெற்ற வீரர்கள் கோரைப் புற்களுக்கு இரையாகி, உயிர் துறந்தார்கள். ஐந்து லட்சம் யாதவ வீரர்கள் கோரைப் புற்களால் அழிந்து போனுர்கள். யாதவர்களின் அழிவும் கண்ணனின் அழிவும் என் நெஞ்சை உறுத்துகின்றன. கண்ணன் இறந்தார் என்பதை என்னுல் நம்ப முடியவில்லை. சமுத்திரம் வறண்டதைப் போலவும், மந்தர மலை அசைந்ததைப் போலவும், நெருப்பு குளிர்ந்ததைப் போலவும் கருதி, இதை நான் நம்ப முடியாமல் இருக்கிறது. கண்ணன் பிரிந்த பின், இவ் உலகில் வாழ எனக்கு விருப்பம் இல்லை. எனது ஆற்றலும் பராக்கிரமும் குறைந்து வருகின்றன; திருடர்களிடமிருந்து யாதவகுல மகளிரை நான் காக்க முடியாமல் போனது, என் நெஞ்சைப் பிளக்கிறது" என்று சொல்லி வருந்தினுன்.

"கௌரவனே! அந்தண சாபத்தால் யாதவர்கள் அழிந்தார்கள். இதற்காக நீ கவலைப்படாதே. தடுக்க ஆற்றல் இருந்தும், வேண்டும் என்றுதான் கண்ணன் சும்மா இருந்துவிட்டார். பூமியின் பாரதத்தைக் குறைக்க அவதரித்த கிருஷ்ணன், அந்தக் காரியத்தை நிறைவேற்றிவிட்டு, தனது ஸ்தானத்துக்குத் திரும்பிவிட்டார்; நீங்களும் தேவர்களுக்குப் பிரியமான காரியத்தைச் செய்து முடித்துவிட்டீர்கள். நீங்களும் செல்ல வேண்டிய காலம் நெருங்கிவிட்டது. புத்தி, பலம், அறிவு, ஆற்றல் இந்த நான்கும் செல்வம் உண்டாகும் காலங்களில் ஒருவனுக்கு உண்டாகின்றன. செல்வம் அழியும் காலத்தில் சேர்ந்து அழிந்துவிடுகின்றன. உலக நடப்புகள் அனைத்தும் காலத்தை அடிப்படையாகக்கொண்டவை; பலமுள்ளவன் பலவீனன் ஆவதும் எஜமானனாய் இருந்தவன் பணியாளன் ஆவதும், காலத்தின் மாறுபாடே என்பதை நீ தெரிந்துகொள்" என்று சொன்னார்.

அர்ச்சுனன் அவரிடம் விடை பெற்றுக்கொண்டு அத்திணபுரம் திரும்பினான்.

# வியாசர்

அருளிய

# மகா பாரதம்

மகாபிரஸ்தானீக பருவம்

# வியாசர்

## அருளிய

# மகா பாரதம்

## புறப்பாடு

**யா**தவர்களின் அழிவை அறிந்த யுதிட்டிரர், ராஜ்யத்தைத் துறந்து தவவாழ்வை மேற்கொள்ள எண்ணினார். ஆகவே, அர்ச்சுனனிடம் "புத்தியுள்ளவனே! காலம் என்பது ஒவ்வொரு பிராணியையும் பக்குவம் செய்கிறது. கால பாசத்துக்குக் கட்டுப்பட்டு, நாமும் மாளாமல் தப்ப முடியாது" என்று சொன்னார்.

"ஆம், உண்மைதான். காலத்தின் பிடிப்பிலிருந்து யாராலும் தப்ப முடியாது" என்று அர்ச்சுனன் ஒப்புக் கொண்டான்;

பீமனும் நகுல சக தேவர்களும் அர்ச்சுனன் சொன்னதை அங்கீகரித்தனர்.

ஆகவே, யுதிட்டிரர் தாம் துறவு ஏற்பதற்கு வேண்டிய ஆயத்தங்களைச் செய்தார். யுயுத்சுவை வருவித்து ராஜ்யத்தை அவனிடம் ஒப்படைத்தார். அர்ச்சுனன் பேரன் பரீட்சித்தை அரசனாக்கி, அபிஷேகம் செய்தார்.

பிறகு அவர் சுபத்திரையை நோக்கி, உன் பேரன் கௌரவர்களுக்கு அரசனாக, அத்தினாபுரத்திலிருந்துகொண்டு

ஆட்சிபுரிவான்; யாதவ வீரன் வஜ்ரன் இந்திரப்பிரதத்தத்தி லிருந்து யாதவர்களைப் பரிபாலிப்பான். இவர்களைப் பேணிக் காப்பது உன் கடமை'' என்று சொன்னார்.

இதன் பின்னர், தம்பியர்களுடன் சேர்ந்து கிருஷ்ணன், வசுதேவர், பலராமர் முதலியவர்களுக்கு நீர்க்கடன் செய்து முடித்தார்; அவர்களை நினைத்து வியாசர், மார்க்கண்டேயர், நாரதர் முதலிய ரிஷிகளுக்கு அன்னமிட்டு உபசரித்தார்; தான தருமங்களை நிறையச் செய்தார்.

பிறகு கிருபரை அழைத்து மரியாதை செய்து, பரீட் சித்தை அவரிடம் ஒப்படைத்தார்; நகர மாந்தரைத் தருவித்து, தமது விருப்பத்தைத் தெரிவித்தா..

நகர மாந்தர், "அரசே! தாங்கள் இவ்விதம் செய்ய வேண்டாம்'' என்று வேண்டினர்.

ஆயினும் துறவு பூணுவதில் அரசர் யுதிட்டிரர் உறுதி யுடன் இருந்தார். தன் கருத்துக்கு இணங்கும்படி செய்து அவர்களிடம் அனுமதி பெற்றுக்கொண்டார்.

இதன் பிறகு யுதிட்டிரர் தான் அணிந்திருந்த ஆடை ஆபரணங்களை அகற்றிவிட்டு, மரவுரி தரித்துக்கொண்டார். அவ்வாறே, பீமசேனன் முதலானவர்களும் திரௌபதியும் மரவுரியை உடுத்துக்கொண்டார்கள்.

செய்ய வேண்டிய கிரியைகளை முறைப்படி செய்துவிட்டு, அறுவரும் புறப்பட்டார்கள். இதைக் கண்ணுற்ற ஜனங்கள் உரக்க அழுதார்கள். நெடுந்தூரம் அழுதுகொண்டு, அவர் களைப் பின்தொடர்ந்தார்கள். பிறகு விடைபெற்றுக் கொண்டு திரும்பிவிட்டார்கள்.

முதலில் பாண்டவர்கள் கீழ்த்திசையில் சென்றார்கள்; பற்பல நாடு நகரங்களையும் நதிகளையும் கடந்து, பல திசை களுக்கும் சென்று, கடைசியில் வடக்குத் திசையை நோக்கிப் புறப்பட்டார்கள். இமயமலைச்சாரலை அவர்கள் அடைந்

முதலில் யுதிட்டிரர் சென்றார்; அவருக்குப் பின்னே பீமன், அர்ச்சுனன், நகுலன், சகதேவன் ஆகியோர் வரிசைக் கிரமமாகச் சென்றார்கள். ஐவருக்கும் பின்னே, திரௌபதி சென்றாள். இந்த அறுவரையும் பின்தொடர்ந்து நாய் ஒன்று வந்துகொண்டிருந்தது.

யோக பலத்தால் விரைந்து அவர்கள் மேரு மலையில் ஏறினார்கள். சிறிது தூரம் சென்றதும், திரௌபதி கீழே விழுந்தாள். இதைக் கவனித்த பீமன், "அரசே! திரௌபதி கீழே விழுந்துவிட்டாள். அதருமம் செய்யாத அவள் இப்படி விழக் காரணம் என்ன ?" என்று கேட்டான்.

"தோன்றலே! அர்ச்சுனனிடம் இவள் மிகுதியான பிரியம் வைத்திருந்தாள். அதன் பயனை அனுபவிக்கிறாள்" என்று பதில் சொன்னார் யுதிட்டிரர்.

பிறகு மனத்தைத் திடப்படுத்திக்கொண்டு அவர்கள் முன்னே சென்றார்கள். சிறிது தூரம் சென்றதும், சகதேவன் கீழே விழுவதைக் கவனித்த பீமன், "அகந்தையற்ற சகதேவன் கீழே விழக் காரணம் என்ன?" என்று கேட்டான்.

"தன்னை விஞ்சிய பண்டிதன் எவனும் இல்லை என்ற இறுமாப்பு சகதேவனுக்கு இருந்தது. அந்தக் குற்றமே அவன் கீழே விழக் காரணம்" என்று பதில் சொன்னார் யுதிட்டிரர்.

திரௌபதியும் சகதேவனும் விழுந்ததைப் பார்த்துச் சகியாத நகுலனும் கீழே விழுந்தான். "ஒப்பற்ற அழகுள்ள நகுலன் கீழே விழுந்துவிட்டான்" என்று கூறினான் பீமன்.

"தன்னை விஞ்சிய அழகன் இந்த அவனியிலே கிடையாது என்ற எண்ணம் நகுலனுக்கு இருந்தது. அதுதான் அவன் கீழே விழக் காரணம்" என்று யுதிட்டிரர் பதில் சொன்னார்.

இதன் பின்னர், அர்ச்சுனன் கீழே விழுவதைக் கவனித்து, அதை யுதிட்டிரரிடம் பீமசேனன் தெரியப்படுத்தினான்.

அதற்கு யுதிட்டிரர், "தான் ஒருவனே சூரன்; தன்னந் தனியாகப் பகைவரைத் தன்னால் வெல்ல முடியும் என்ற

எண்ணம் அர்ச்சுனனுக்கு இருந்தது; அதனால் மற்ற வில்லாளர்களை இவன் அவமதித்தான்'' என்று கூறினார் யுதிட்டிரர்.

இவ்வாறு பதில் சொல்லிவிட்டு, யுதிட்டிரர் மேலே சென்றார்; பீமனும் நாயும் அவரைப் பின்தொடர்ந்து சென்றனர். சிறிது தூரம் சென்றதும், பீமனும் விழுந்தான். "அரசே! நான் விழக் காரணம் என்ன?'' என்று கேட்டான் பீமன்.

"குந்தி மைந்தனே! நீ பெருந் தீனி தின்று, பலத்தால் பிறரை அவமதித்தாய்; வீணே தற்புகழ்ச்சி செய்துகொண்டாய். அதன் பயன்தான் இப்பொழுது நீ விழுந்தாய்'' என்று சொல்லிவிட்டு யுதிட்டிரர் மேலே சென்றார்.

நாய் ஒன்று மட்டும் அவரைத் தொடர்ந்து சென்றுகொண்டிருந்தது.

யுதிட்டிரர் சென்றுகொண்டிருந்தார். நாயும் அவரைத் பின்தொடர்ந்து சென்றது. அப்போது ஆகாயத்திலும் பூமியிலும் ஒலி முழங்க, இந்திரன் தேரில் வந்தான். அவன் யுதிட்டிரரை அணுகி, "இந்தத் தேரில் ஏறிக்கொள்ளும். சொர்க்கம் செல்லலாம்'' என்று சொன்னான்.

அதற்கு யுதிட்டிரர். "இந்திரனே! என் தம்பியர்கள் கீழே விழுந்துவிட்டார்கள். திரௌபதியும் கீழே விழுந்துவிட்டாள். அவர்கள் இன்றி, நான் மட்டும் தனியே சொர்க்கத்துக்கு வர விரும்பவில்லை'' என்று வருத்தத்துடன் கூறினார்.

"பரத குலத் தோன்றலே! உமக்கு முன்பே அவர்கள் சொர்க்கத்தில் இருக்கிறார்கள். அனைவரையும் அங்கே நீர் பார்க்கலாம்'' என்று தெரிவித்தான் இந்திரன்.

"இந்திரனே! இந்த நாய் என்னைத் தொடர்ந்து வந்துகொண்டிருக்கிறது. அன்புள்ள இந்த நாயையும் தேரில் ஏற்றிக் கொள்ளுங்கள்; நாம் சொர்க்கம் செல்லலாம்'' என்று சொன்னார் யுதிட்டிரர்.

"அரசே! நீர் இப்பொழுது தேவத்தன்மை அடைந்திருக்கிறீர். எனக்குச் சமதையான நிலையையும் செல்வத்தையும் அடைந்திருக்கிறீர். ஆகவே, இந்த நாயை விட்டுவிடும். நீர் மட்டும் சொர்க்கத்துக்கு வாரும்'' என்று கூறினான் இந்திரன்.

"இழிந்தவர்கள் செய்யும் காரியத்தைச் செய்யும்படி என்னை நீர் ஊக்குவித்தல் கூடாது. அன்புடன் என்னைத் தொடரும் நாயை நான் புறக்கணிக்க முடியாது" என்று பதில் சொன்னார் யுதிட்டிரர்.

"நாய் உள்ளவர்களுக்குச் சொர்க்கம் இல்லை" என்று கூறினான் இந்திரன்.

"அப்படியானால் எனக்குச் சொர்க்கம் வேண்டாம், அன்புள்ளவனை விட்டுவிட்டு, நான் மட்டும் சொர்க்கம் வர ஆசைப்படவில்லை. இது முறையும் அன்று" என்று மறுத்துச் சொன்னார் யுதிட்டிரர்.

"வீரரே! உன் தம்பியரும் திரௌபதியும் உம்பால் அளவற்ற அன்புபூண்டு இருந்தனர். அவர்களை விட்டுவிட்டீர். ஆனால், நாயை மட்டும் சொர்க்கத்துக்கு அழைத்துச் செல்ல நீர் ஆசைப்படுகிறீர். உமக்கு ஏன் இந்த மதிமயக்கம்?" என்று வினவினான் இந்திரன்.

"இந்திரனே! இறந்த மனிதனுடன் ஒருவனுக்கு நட்பும் பகையும் உண்டாவது இல்லை. என் தம்பியரையும் திரௌபதியையும் உயிருடன் மீட்க என்னால் முடியாது. அதனால் அவர்களை நான் விட்டுவிட நேர்ந்தது. ஆனால், இந்த நாயோ உயிருடன் என்னைத் தொடர்ந்து வருகிறது. ஆகவே, அதைப் புறக்கணித்துவிட்டு நான் மட்டும் சொர்க்கம் சேர விரும்புவது முறையாகாது" என்று பதில் சொன்னார் யுதிட்டிரர்.

யுதிட்டிரர் சொன்ன இந்த பதிலைக் கேட்ட நாய், அக மகிழ்ந்தது. தான் எடுத்துக்கொண்டிருந்த நாய் வடிவத்தை விட்டு, தரும தேவதை, தம் சுய வடிவத்தில் தோன்றினார்; யுதிட்டிரரின் நடத்தைக்காக அவரைப் பெரிதும் பாராட்டினார்.

"மைந்தா! உனது சீலத்தை, முன்பு துவைத வனத்தில் பரிசோதித்து அக மகிழ்ந்தேன். இப்பொழுதும் உன் செயலைப் பாராட்டுகிறேன். அன்புள்ள நாய்மீது பரிவுகொண்டு சொர்க்

கத்தையும் இழக்க நீ துணிந்தாய்! அதனால் இந்த மானுட வடிவத்துடன் சொர்க்கத்தை நீ அடைவாய். இந்தப் பெரும் பேறு உனக்கு மட்டும்தான் கிட்டுகிறது" என்று வாழ்த்தினார்.

இதன் பின்னர், யுதிட்டிரரைத் தேரில் ஏற்றிக்கொண்டு இந்திரனும் தருமதேவதையும் சொர்க்கத்தை அடைந்தனர்.

அப்பொழுது நாரதர் வந்து யுதிட்டிரருக்கு நல்வரவு கூறினார். "யுதிட்டிரரே! நீர் முன்னோருடைய புகழை எல்லாம் மறைத்துக்கொண்டு, பெரும் புகழ் அடைந்திருக்கிறீர். மானுட தேகத்துடன் சொர்க்கம் அடையும் பெரும் பேறு உம் ஒருவருக்குத்தான் இதுவரை கிட்டி இருக்கிறது" என்று சொன்னார்.

சொர்க்கத்தில் தம் தம்பியரையும் மற்றவர்களையும் அரசர் யுதிட்டிரர் காணவில்லை. ஆகவே, அவர் நாரத முனிவரிடம், "முனிபுங்கவரே! என் தம்பியர் எந்த உலகத்தில் வசிக்கின்றனரோ, அங்கு வசிப்பதையே நான் விரும்புகிறேன். மற்ற உலகங்களை நான் விரும்பவில்லை" என்று கூறினார்.

இதைச் செவிமடுத்த புரந்தரன், "குருநந்தனரே! மானுட சுபாவத்தில் சிக்கி, ஏன் பேசுகிறீர்? எந்த மனிதனும் அடைய முடியாத மேலான கதியை நீர் அடைந்திருக்கிறீர். உம் தம்பியருக்கு இந்தப் பேறு கிட்டவில்லை. தேவர்களையும் சித்தர்களையும் சந்தித்து, தேவ லோகத்தில் மகிழ்ச்சியுடன் வாசம் செய்யும்" என்று சொன்னான்.

அதற்கு யுதிட்டிரர், "அசுரரைக் கொல்பவரே! என் தம்பியரும் திரௌபதியும் இல்லாத உலகம், மேன்மையான உலகமாய் இருப்பினும், அதில் வாழ நான் பிரியப்படவில்லை. அவர்கள் இருக்கும் உலகத்தில் இருப்பதையே என் உள்ளம் விரும்புகிறது" என்று கூறினார் யுதிட்டிரர்.

# வியாசர்

அருளிய

# மகா பாரதம்

## சொர்க்காரோகண பருவம்

# வியாசர்

அருளிய

# மகா பாரதம்

---

## சொர்க்கம் வேண்டாம்

யுதிட்டிரர் சொர்க்கம் போய்ச் சேர்ந்தார். அங்குச் சூரியன் போல் பிரகாசித்துக்கொண்டு, துரியோதனன் கம்பீரமாக ஓர் ஆசனத்தில் அமர்ந்திருப்பதைக் கண்டு ஆச்சரியமுற்றார். அவனைச் சூழ்ந்து வீர லட்சுமியும் தேவர்களும் வீற்றிருந்தார்கள். செழிப்புடன் துரியோதனன் இருப்பதைப் பார்க்க விரும்பாது, கோபத்துடன் யுதிட்டிரர் முகத்தைத் திருப்பிக் கொண்டார்.

அவர் அங்குள்ளவர்களை நோக்கி, "பேராசையும் குறுகிய மனப்பாங்குமுடைய துரியோதனனுடன் சேர்ந்து வசிக்க நான் விரும்பவில்லை. எங்களைப் படாத பாடுகள் எல்லாம் படுத்தி, கொடுமைகள் செய்தவன் இவன்; இவனால் உற்றார் உறவினர்களையும் நண்பர்களையும் நாங்கள் கொல்லும்படியாயிற்று. எங்கள் பத்தினி பாஞ்சாலியைச் சபைக்கு இழுத்து, அவமானப்படுத்தி,எங்கள் மனம் புண்படச்செய்தவன் இவன். ஆகவே, இவனுடன் இருக்கவோ அல்லது இவனைப் பார்க்கவோ நான் விரும்பவில்லை. என் தம்பியர் எங்கு இருக்கின்றனரோ அங்கு இருப்பதையே நான் விரும்புகிறேன்" என்று கூறினார்.

பிறகு அங்கிருந்து யுதிட்டிரர் திரும்பினார்.

இதைக் கவனித்த நாரதர் சிரித்தார். "அரசே! நீ இவ் விதம் சொல்லாதே. சொர்க்கத்தில் விரோத மனப்பான்கு கூடாது. துரியோதனனை நீ நிந்தியாதே. க்ஷத்திரிய தருமப் படி துரியோதனன் வீர சொர்க்கம் அடைந்திருக்கிறான். பகைமை பாராட்டாமல் துரியோதனனுடன் தங்கி, இங் கேயே, நீ வாசம் செய்" என்று சொன்னார்.

அதற்கு யுதிட்டிரர், "நாரத முனிவரே! துரியோதனன் நல்லோருக்குத் தீமை செய்தவன்; அறம் தெரியாதவன்; பாவி. இவனுக்கு வீர சொர்க்கம் கிடைத்திருக்கிறது! என் தம்பியர் சூரர்கள்; சத்திய சீலர்கள்; அவர்கள் எத்தகைய உலகங்களை அடைந்திருக்கின்றனர்? திரௌபதி எப்படி இருக்கிறாள்? கர்ணன், திட்டத்துய்மன், சாத்யகி முதலி யோரை இங்கு நான் காணவில்லை. போர் செய்து மரணம் எய்திய அந்த வீரர்கள் இப்பொழுது எங்கே இருக்கின்றனர்? விராடன், துருபதன், சிகண்டி, அபிமன்யு ஆகியோரை நான் எங்கே காணலாம்?" என்று கேட்டார். மேலும் தொடர்ந்து "எனக்காகப் போர் செய்தவர்களும் என் தம்பியரும் இல் லாத உலகத்தில் வசிக்க நான் விரும்பவில்லை. என் தம்பியர் எங்கு இருக்கிறார்களோ அதுதான் எனக்குச் சொர்க்கம்; மற்றது எனக்குச் சொர்க்கம் இல்லை" என்று கூறினார் யுதிட்டிரர்.

அதற்குத் தேவர்கள், "யுதிட்டிரனே! அவர்கள் இருக்கும் இடத்துக்கு நீ போக விரும்பினால், தாராளமாக நீ அங்கே செல்லலாம். தேவராஜனுடைய கட்டளையினால் உமக்குப் பிரியத்தைச் செய்ய நாங்கள் ஆயத்தமாய் இருக்கிறோம்" என்று சொன்னார்கள்.

பிறகு, தேவ தூதன் ஒருவனிடம், "யுதிட்டிரரை அவர் உற்றார் உறவினர் இருக்கும் இடத்துக்கு அழைத்துப் போ" என்று கட்டளையிட்டார்கள்.

யுதிட்டிரரை அழைத்துக்கொண்டு, தேவ தூதன் புறப் பட்டான். தேவ தூதன் முன்னே சென்றான்; யுதிட்டிரர் பின்னே சென்றார்.

இருள் சூழ்ந்து எங்கும் பயங்கரமாய் இருந்தது. தலை மயிர், மாம்சம், உதிரம் இவை கலந்த சேறு; எங்கும் ஒரே துர்நாற்றம் ; காட்டு ஈக்களும் கொசுக்களும் மொய்த்தன. பிணங்கள், எலும்புகள் முதலியன நாற்புறமும் சிதறிக் கிடந்தன. புழுக்கள் பூச்சிகளின் எண்ணிக்கை கணக்கில் அடங்கா; கை, கால், வயிறு, தொடை, இவை வெட்டப்பட்டவர்கள் உதிரம் ஒழுகக் கிடந்தார்கள்.

இவற்றை எல்லாம் பார்த்ததும் யுதிட்டிரர் சிறிது நேரம் ஆலோசனையில் மூழ்கி நின்றார். பிறகு தேவ தூதனை நோக்கி, "இந்த வழியாக நாம் இன்னும் எவ்வளவு தூரம் செல்லும்படி இருக்கும் ? என் சகோதரர்கள் எங்கே இருக்கின்றனர் ? அதை எனக்குச் சொல்" என்று கேட்டார்.

அதற்கு அந்தத் தேவ தூதன், "அரசே! இதுவரைதான் உம்மை அழைத்துச் செல்ல, தேவர்கள் கட்டளை இட்டார்கள். உமக்குக் களைப்பாய் இருந்தால் நீர் திரும்பிவிடலாம்" என்று சொன்னான்.

துர்நாற்றம் சகிக்க முடியாத இருந்தபடியால், யுதிட்டிரர் திரும்பினார். அப்போது தீனமான குரல்கள் நாற்புறங்களிலிருந்தும் அவரைக் கூவி அழைத்தன. "தரும புத்திரரே! புண்ணிய சீலரே! சிறிது நேரம் இங்கேயே நில்லும்; நீர் வந்தவுடன் நறுமணமுள்ள காற்று எங்கள்மீது வீசுகிறது; அதனால் நாங்கள் சுகமடைகிறோம். நீர் நின்றுகொண்டிருந்தால் எந்த வாதனையும் எங்களுக்கு ஏற்படவில்லை. ஆகையால், சிறிது நேரம் இங்கேயே நில்லும்" என்று கதறின.

"ஆகா ! என்ன கஷ்டம் !" என்று சொல்லிக்கொண்டு, யுதிட்டிரர் சிறிது நேரம் நின்றார். குரல்கள் ஏதோ பழகின குரல்களாக யுதிட்டிரருக்குத் தோன்றியது. ஆகவே, அவர் "நீங்கள் யார் ? எதற்காக இங்கே இருக்கிறீர்கள் ?" என்று கேட்டார்.

"பிரபுவே ! நான் கர்ணன், நான் பீமன், நான் அர்ச்சுனன், நான் நகுலன், நான் சகதேவன், நான் திரௌபதி. நான் திட்டத்துய்மனன்" என்று பல குரல்கள் ஒரே சமயத்தில் பதில் சொல்லின.

இதைச் செவிமடுத்த யுதிட்டிரர் தாங்க முடியாத துயரம் அடைந்தார். "இவர்கள் என்ன பாவம் செய்தார்கள்? இந்த இடத்தில் இவர்கள் இருப்பதற்குரிய காரணம் எனக்குப் புலப்படவில்லை. பாவியான 'துரியோதனன் இந்திரன்போல் சொர்க்கத்தில் இருந்து சுகம் அனுபவித்துக் கொண்டு இருக்கிறான்! இவர்களோ நரகத்தை அடைந்து அவதிப்படுகிறார்கள். நான் தூங்குகிறேனா? அல்லது விழித்திருக்கேனா? அல்லது புத்தி பேதலித்துவிட்டதா?" என்று கவலையுற்றார்.

பிறகு, அவர் தேவ தூதன் பக்கம் திருப்பி, "நீ தேவர்களிடம் செல். நான் இங்கேயே இருக்கிறேன். என்னை அடுத்த வாழ்ந்த என் சகோதரர்கள் நரகத்தில் அவதிப்படும் பொழுது, அவர்களைவிட்டுப் பிரிய மனம் வராது" என்று சொன்னார்; தேவர்களையும் தருமத்தையுமே அவர் நிந்திக்கத் தொடங்கிவிட்டார்.

தேவதூதன் இந்திரனிடம் திரும்பிச்சென்று, யுதிட்டிரர் கூறியதை அவரிடம் கூறினான்.

## மேலான நிலை

இவ்விதம் சொல்லிவிட்டு, யுதிட்டிரர் நகரத்திலேயே சிறிது நேரம் நின்றார்.

சிறிது நேரத்திற்குப் பின்னர், இந்திரனும் தரும தேவதையும் மற்றுமுள்ள தேவர்களும் அங்கே வந்து சேர்த்தனர்.

தேவர்கள் அங்கே வந்தவுடன் இருள் விலகிவிட்டது. பயங்கரமான காட்சிகளும் மறைந்தன. நறுமணமுள்ள காற்று எங்கும் வீசிற்று. தேவர்களுக்கு அரசனான இந்திரன் யுதிட்டிரரை அணுகி, "அண்ணலே! தேவர்கள் உம்பால் மகிழ்ந்தனர். இதுவரை நீர் அனுபவித்தது போதும். மேன்மையான உலகத்தை நீர் அடையப் போகிறீர். உங்கள் உற்றார் உறவினரும் மேலான கதியை அடைந்திருக்கின்றனர்.

அரசர்கள் அனைவரும் அவசியம் நரகத்தைப் பார்க்க வேண்டும். புண்ணிய பாவங்களை ஒருவன் இரு வகைகளில் அனுபவித்துத் தீர வேண்டும். எவன் முந்தி புண்ணியத்தை அனுபவிக்கிறானோ, அவன் பிந்தி நரகத்தை அடைகிறான். எவன் முந்தி நகரத்தை அடைகிறானோ, அவன் பிந்தி சொர்க்கத்தை அனுபவிக்கிறான். அதிகமான பாவத்தைச் செய்பவன் முதலில் சொர்க்கத்தை அடைகிறான். நீர் அதிகமான புண்ணியத்தையும் சிறிது பாவத்தையும் செய்தவர். துரோணரை வஞ்சிக்க நீர் ஒரு பொய் சொன்னீர். அதன் பயனை இப்போது அனுபவித்தீர்; நரகத்தை சிறிது நேரம் பார்த்தீர்; அதன் பயனாய் உம் தம்பியரும் திரௌபதியும் நரகத்தை அனுபவித்தனர். பாவத்திற்கு உரிய பயனை அனுபவித்து விட்டு, அவர்கள் சொர்க்கத்தை அடைந்துவிட்டார்கள். எவனை நினைத்து நீர் அதிகம் பரிதபிக்கிறீரோ, அந்தக் கர்ணனும் மேலான பதவியை அடைந்துள்ளான். அரிச்சந்திரன் மாந்தாதா முதலியவர்களைப்போல நீரும் மேலான கதியை அடையப் போகிறீர். அதோ தெரியும் தேவநதியில் நீர் நீராடும். உடனே உமது மானிடத்தன்மை அகன்றுவிடும். அதற்குரிய துன்பம், துயரம் கவலை, பகை அனைத்தும் உம்மை விட்டு விலகிவிடும்'' என்று சொன்னான்.

இதன் பின்னர், தரும தேவதை, யுதிட்டிரரிடம் "மேன்மை பெற்றவனே! உன்னை நான் சோதித்தது இது மூன்றாவது தடவை; தருமத்தில் உனக்குள்ள உறுதிப்பாடு குன்றாது இருப்பது குறித்து மகிழ்ச்சி அடைகிறேன். முதலில் துவைத வனத்தில் யக்ஷனாக வந்து உன்னைப் பரீட்சித்தேன். இரண்டாவது முறை நாயாக வந்து உன் சீலத்தைச் சோதித்தேன். மூன்றாவது முறை, உன் சகோதரர்களின் பொருட்டாய் நீ நரகத்தில் இருக்கச் சம்மதிக்கிறாய் என்பதை அறிந்தேன்; அகமகிழ்ந்தேன்.

"பார்த்தனே! நீ பரிசுத்தன்; பாபமற்றவன். ஆகையால், நீயும் உன் சகோதரர்களும் நரகத்தை அடையத் தக்கவர்கள் அல்லர். இது தேவராசன் செய்த மாயை. அரசர்

களாய் இருப்பவர்கள் ஒரு முறை அவசியம் நரகத்தைப் பார்க்க வேண்டும். நீ சிறிது நேரம் பெரும் துயரத்தை அனுபவித்து விட்டாய். இது போதும்'' என்று சொன்னார்.

பிறகு அங்கே கிருஷ்ணன், அர்ச்சுனன். கர்ணன், பீமன், நகுலன், சகதேவன், திரௌபதி முதலியோர் சொர்க்கத்தில் இருப்பதைக் கண்டு களிப்புற்றார்.

இதன் பின்னர் யுதிட்டிரர் தனது மானுட தேகத்தை விட்டு, தேவ சரீரத்தைப் பெற்றார். அத்துடன் மனிதப் பிறவிக்கு உரிய பகைமை உணர்ச்சிகளும் கவலைகளும் நீங்கி, யுதிட்டிரர் பரிபூரணம் அடைந்தார்.

சுபம்

வியாசர் அருளிய மகா பாரதம்

முற்றும்

# அநுபந்தம்

1. யார் யார் அம்சம் ?
2. சந்திர வமிசம்
3. பருவங்கள்
4. சுலோக எண்ணிக்கை
5. டாக்டர் வி. எஸ். சுதங்கர் பதிப்பு
6. அக்குரோணி
7. பதினெட்டு.

## யார் யார் அம்சம் ?

பூபாரத்தைக் குறைக்கத் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் இடையே பல முறை போர் நடந்திருக்கிறது. மகா பாரதப் போரும் பூபாரத்தைக் குறைக்க நடந்த போர்தான் என்று கருத வேண்டியது இருக்கிறது. அந்தப் போரில் பங்கெடுத்துக்கொண்ட பாண்டவர்கள் கௌரவர்களின் அம்சங்கள் தேவர்களாகவும் அசுரர்களாகவும் குறிக்கப்பட்டிருக்கின்றன. அவர்களில் யார் யார், எந்த எந்த வமிசம் என்பதை அடியில் தந்திருக்கிறோம்:

1. ஜராசந்தன்-விப்ரசித்தி-அசுரன்
2. சிசுபாலன்-இரண்யகசிபு-அசுரன்
3. சல்லியன்-சம்கலாதன் } இருவரும் பிரகலாதன் தம்பியர்
4. திருஷ்டகேது-அனுகலாதன் }
5. துருமன்-சிபி-அசுரன்
6. பகதத்தன்-பாஷ்கலன்-அசுரன்
7. சால்வன்-அசகன்-அசுரன்
8. பாகலீகன்-அகரன்-அசுரன்
9. காசிராஜன்-தீர்க்கசிவன்-அசுரன்
10. மணிமான்-விருத்திரன்-அசுரன்
11. ஏகலைவன்-குரோத கவசர்களில் ஒருவன்-அசுரன்
12. சகுனி-துவாபரன்
13. துரியோதனன்-கல்புருடன்
14. கௌரவர்கள்-புலஸ்தியர் புதல்வர்கள்
15. துரோணர்-பிருகஸ்பதி அம்சம்-தேவர்
16. அசுவத்தாமா-சிவன், யமன், இருவர் அம்சம்
17. பீஷ்மர்-அஷ்ட வசுக்களில் ஒருவர்
18. கிருபர்-ருத்ரர்களில் ஒருவர்

19. சாத்யகி-சப்த மருத்துக்களில் ஒருவர்
20. துருபதன்- ,,
21. கிருதவர்மா- ,,
22. விராடன்- ,,
23. பாண்டு- ,,
24. திருதராட்டிரன்-ஹம்சன்—கந்தர்வராஜன்
25. விதுரர்-தரும தேவதை
26. யுதிட்டிரர்-தரும தேவதை
27. பீஷ்மன்—வாயு
28. அர்ச்சுனன்-இந்திரன்
29. நகுலன்-அசுவினி தேவர்
30. சகதேவன்-அசுவினி தேவர்
31. கர்ணன்—சூரியன்
32. கிருஷ்ணன்-விஷ்ணு
33. பலராமர்-ஆதிசேஷன்
34. திட்டத்துய்மனன்—அக்கினி
35. அபிமன்யு-வர்ச்சனன்-சந்திரன் புதல்வன்
36. ருக்மிணி—இலக்குமி
37. திரௌபதி-இந்திராணி அம்சம்
38. குந்தி-சித்தி-தேவப் பெண்
39. மாத்ரி—திருதி ,,
40. காந்தாரி-மதி ,,

# சந்திர வமிசம்

அரச வமிசங்களை வடமொழி இலக்கியங்களில் இரு முக்கிய பிரிவுக்குள் அடக்கிச் சொல்லுகிறார்கள்; சூரிய வமிசம், சந்திர வமிசம் என்று. இராமாயணத்தின் முக்கிய பாத்திரமான இராமன் சூரிய வமிசத்தில் பிறந்தவன்; மகா பாரதத்தின் முக்கிய பாத்திரங்களான பாண்டவர்கள், கௌரவர்கள் கிருஷ்ணன் முதலியோர் சந்திர வமிசத்தில் பிறந்தவர்கள். சந்திர வமிச வரலாற்றில், பிரம்மா முதல் ஆயுவரையுள்ளவர்களின் வரிசையும் பெயரும் பற்பல விதமாகக் காணப்படுகின்றன. பல நூல்களை ஒப்புநோக்கி, அடியில் வருமாறு வரிசைப்படுத்தி, சந்திர வமிசத்தின் தலைமுறையினரைத் தந்திருக்கிறோம்.

| | | | |
|---|---|---|---|
| 1. | பிரம்மா | | தானே தோன்றியவர். |
| 2. | அத்திரி | | இவர் சப்தஷிகளில் ஒருவர் பிரம்மாவின் மனத்தில் உதித்தவர். |
| 3. | சந்திரன் | | அத்திரியின் கண்களிலிருந்து பிறந்தவர். |
| | சந்திரன் | + | தாரை. |
| 4. | புதன் | + | இளை-ஆணாயிருந்து பெண்ணானவள். |
| 5. | பூருரவஸ் | + | ஊர்வசி. |
| 6. | ஆயு | + | சுவர்ப்பனவீ. |
| 7. | நகுஷன் | + | விராஜா. |
| 8. | யயாதி | + | சர்மிஷ்டை. |
| 9. | பூரு | + | கௌசல்யை. |
| 10. | ஜெனமேஜெயன் | + | அனந்தை. |
| 11. | பிராசீனவான் | + | ஆஷ்மாகி. |

| | | | |
|---|---|---|---|
| 12. | சய்யாதி | + | வராங்கி-திரிசங்கு மகள் |
| 13. | அகம்யாதி | + | பானுமதி |
| 14. | சார்வ பௌமன் | + | சுந்தரை |
| 15. | ஜெயத்சேனன் | + | சுசுரவை |
| 16. | அபராசீனன் | + | மரியாதை |
| 17. | அரிகன் | + | ஆங்கி |
| 18. | மகாபௌமன் | + | சுயக்ஞை |
| 19. | அயுதாநாயி | + | பாஸை |
| 20. | அக்குரோதனன் | + | கண்டு |
| 21. | தேவாதிதி | + | மரியாதை |
| 22. | ரிசன் | + | வாமதேவி |
| 23. | ரிட்சன் | + | சுவலந்தி |
| 24. | அந்திய நாட்ரன் | + | சரஸ்வதிதேவி |
| 25. | திரஸ்னு | + | காளிந்தி |
| 26. | இலிலன் | + | ரதந்தரி |
| 27. | துஷ்யந்தன் | + | சகுந்தலை-இரண்டாம் மனைவி |
| 28. | பரதன் | + | சுந்தை |
| 29. | புமன்பு | + | சுவர்ணை |
| 30. | சுகோத்திரன் | + | ஜயந்தி |
| 31. | ஹஸ்தி | + | யசோதை-அஸ்தினாபுரியை நிர்மாணித்தவன் |
| 32. | விகுஞ்சனன் | + | சுந்தரை |
| 33. | அஜமீடன் | + | ரிட்சை |
| 34. | சம்வரணன் | + | தபதி |

35. குரு + சுபாங்கி
36. விதூரதன் + சம்பிரியை
37. அனஸ்வான் + அமிர்தை
38. பரீட்சித்து + சுவேச்சை
39. பீமசேனன் + சுகுமாரி
40. பிரதீபன் + சுநந்தி, சௌப்பிய சுந்தரி
41. சந்தனு + கங்காதேவி
42. பீஷ்மர் மணம் செய்து கொள்ளவில்லை

சந்தனு + சத்தியவதி

விசித்திர வீரியன்

|

அம்பிகை + அம்பாலிகை

| |

திருதராட்டிரன் + காந்தாரி    பாண்டு + குந்தி

| |

கௌரவர்கள்    பாண்டவர்கள்

# சுலோக எண்ணிக்கை

(கும்பகோணம் பதிப்பு)

வியாச மகரிஷி மகா பாரதத்தை இலட்சம் சுலோகங்களில் செய்து முடித்தார் என்று பாரதத்தில் வருகிறது. ஆனால், அதே பாரதத்தில், பருவ சங்கிரக பருவத்தில் குறிப்பிட்டிருக்கும் சுலோகங்களின் எண்ணிக்கை வருமாறு:

| | | கும்பகோணம் பதிப்பு |
|---|---|---|
| 1. | ஆதி பருவம் | 8884 |
| 2. | சபா பருவம் | 2511 |
| 3. | வன பர்வம் | 11664 |
| 4. | விராட பருவம் | 2050 |
| 5. | உத்தியோக பருவம் | 6698 |
| 6. | பீஷ்ம பருவம் | 5884 |
| 7. | துரோண பருவம் | 8909 |
| 8. | கர்ண பருவம் | 4964 |
| 9. | சல்லிய பருவம் | 3220 |
| 10. | சௌப்திக பருவம் | 870 |
| 11. | ஸ்திரீ பருவம் | 775 |
| 12. | சாந்தி பருவம் | 14732 |
| 13. | அனுசாசன பருவம் | 8000 |
| 14. | ஆஸ்வமேதிக பருவம் | 3320 |
| 15. | ஆசிரமவாசிக பருவம் | 1506 |
| 16. | மௌசல பருவம் | 320 |
| 17. | மகாபிரஸ்தானிக பருவம் | 320 |
| 18. | சொர்க்காரோகண பருவம் | 209 |
| | மொத்த சுலோகம் | 84836 |

# டாக்டர் வி. எஸ். சுதங்கர் பதிப்பு

| | | | | குறைவு |
|---|---|---|---|---|
| 1. | ஆதி பருவம் | 7984 | — | 900 |
| 2. | சபா பருவம் | 2511 | | |
| 3. | வன பர்வம் | 11664 | | |
| 4. | விராட பருவம் | 2050 | | |
| 5. | உத்தியோக பருவம் | 6698 | | |
| 6. | பீஷ்ம பருவம் | 5884 | | |
| 7. | துரோண பருவம் | 8909 | | |
| 8. | கர்ண பருவம் | 4900 | — | 64 |
| 9. | சல்லிய பருவம் | 3220 | | |
| 10. | சௌப்திக பருவம் | 870 | | |
| 11. | ஸ்திரீ பருவம் | 775 | | |
| 12. | சாந்தி பருவம் | 11525 | — | 207 |
| 13. | அனுசாசன பருவம் | 6700 | — | 1300 |
| 14. | ஆஸ்வமேதிக பருவம் | 3320 | | |
| 15. | ஆசிரமவாசிக பருவம் | 1506 | | |
| 16. | மௌசல பருவம் | 300 | — | 20 |
| 17. | மகாபிரஸ்தானிக பருவம் | 120 | — | 200 |
| 18. | சொர்க்கரோகண பருவம் | 200 | — | 9 |
| | மொத்தம் | 82136 | — | 2700 |

இந்தக் கணக்குப்படி இப்பொழுது வியாச பாரதத்தில் இருப்பது 84836 சுலோகங்கள்தான். டாக்டர் சுதங்கர் அவர்களின் பதிப்புப்படி 82136 தான். இது கும்பகோணப் பதிப்பிலுள்ள சுலோகங்களைக் காட்டிலும் 2700 சுலோகங்கள் குறைவு. ஹரி வம்சம் என்னும் நூல் சுமார் 16000 சுலோகங்களைக் கொண்டது. அதையும் இந்தச் சுலோகக் கணக்கில் சேர்த்துக்கொண்டால், ஏறக்குறைய 100000 சுலோகங்கள் ஆகின்றன.

மகா பாரதத்தில் பகவான் கிருஷ்ணன் மிக முக்கியமான பாத்திரம். அவருடைய பிறப்பு, வளர்ப்பு முதலியவற்றைத் தனியே விரிவாக ஹரிவம்சத்தில் சொல்லி இருக்கிறார்கள். ஹரி வம்ச எண்ணிக்கையை, மகாபாரத சுலோக எண்ணிக்கையோடு சேர்த்து மொத்தம் 100000 சுலோகமாகக் கணக்கிட்டு, மகாபாரத ஆசிரியர் சொல்லி இருக்கிறார் என்று நாம் கொள்ள வேண்டியது இருக்கிறது.

# அக்குரோணி

மகா பாரதப் போரில் பதினெட்டு அக்குரோணிகள் பங்கெடுத்துக்கொண்டதாக நாம் படிக்கிறோம். அக்குரோணி என்றால் என்ன? அதை நாம் தெரிந்துகொள்ள வேண்டாமா? இதன் விவரம் கீழே தரப்பட்டிருக்கிறது.

ஒரு தேர், ஒரு யானை, மூன்று குதிரை, ஐந்து காலாள் இது அடங்கியது ஒரு பத்தி.

3 பத்திகள்—ஒரு சேனாமுகம்
3 சேனாமுகம்—ஒரு குல்மம்
3 குல்மம்—ஒரு கணம்
3 கணம்—ஒரு வாகினி
3 வாகினி—ஒரு பிருதனை
3 பிருதனை—ஒரு சமூ
3 சமூ—ஒரு அனிகினி
10 அனிகினி—ஒரு அக்குரோணி

இந்தக் கணக்குப்படி ஒரு அக்குரோணியில்,

| | | |
|---|---|---|
| தேர்கள் | — | 21870 |
| யானை | — | 21870 |
| குதிரை | — | 65610 |
| காலாள் | — | 109350 |

இப்படி எண்ணிக்கை கொண்ட பதினெட்டு அக்குரோணிகள் மகா பாரதப் போரில் கலந்துகொண்டன.

கௌரவர்கள் சார்பாகப் பதினொரு அக்குரோணியும் பாண்டவர்கள் சார்பாக ஏழு அக்குரோணியும் பங்கு எடுத்துக்கொண்டு போர் செய்தன.

கௌரவர்களின் பக்கம் 4 அக்குரோணி சேனை அதிகமிருந்தும் அவர்கள் வெற்றி பெறவில்லை. பாண்டவர்களிடம் படை பலம் குறைவாய் இருந்தும் அவர்கள் வெற்றி பெற்றனர்.

வெறும் மிருக பலத்தினால் மட்டும் வெற்றி கிட்டி விடாது என்றும், கிட்டினாலும் அது நீடித்து நிலைத்து இருக்காது என்றும் மகாபாரதம் வெகு அழகாகப் போதிக்கிறது.

எந்தக் கட்சியில் தர்மமும் நியாயமும் இருக்கிறதோ, அந்தக் கட்சிக்குத்தான் முடிவில் வெற்றி கிட்டும் என்றும், அப்படிக் கிட்டுகின்ற வெற்றி நீடித்து நிலைபெறுடையதாய் இருக்கும் என்றும் மகாபாரதம் வற்புறுத்திப் பேசுகிறது.

இவ்வளவு பெரிய சேனை கலந்துகொண்டு போரிட்டதன் பலன், அனைவரும் மாண்டு போனார்கள். கௌரவர்கள் பக்கம் மூவரும்—அசுவத்தாமா, கிருபர், கிருதவர்மா,—பாண்டவர்கள் பக்கம் எழுவரும்,—பாண்டவர்கள் ஐவர், சாத்யகி—கிருஷ்ணன்—ஆகப் பத்து பேர் மட்டுமே உயிர் பிழைத்தனர்.

போர் என்பது பெருத்த அழிவையே உண்டாக்கும் என்பதைச் சொல்லாமல் சொல்லி, மக்களை மகா பாரதம் உணர வைக்கும் அருமையை இலக்கிய ரசிகர்களும் சரி, அரசியல்வாதிகளும் சரி, மற்றவர்களும் சரி உணராமல் இருக்கமுடியாது.

# பதினெட்டு

வடமொழி இலக்கியங்களில், குறிப்பாக, வியாசர் அருளிய மகாபாரதத்தில் பதினெட்டு என்ற எண்ணிக்கை சிறப்பான ஒரு ஸ்தானத்தைப் பெற்று இருக்கிறது. மகா பாரதத்தின் முக்கிய பருவங்கள் பதினெட்டு; பகவத் கீதையின் அத்தியாயங்கள் பதினெட்டு, போரில் பங்கெடுத்துக்கொண்ட அக்குரோணியின் எண்ணிக்கை பதினெட்டு? போர் நடந்த நாட்கள் பதினெட்டு; வடமொழியிலுள்ள முக்கியமான புராணங்களின் எண்ணிக்கையும் பதினெட்டு.

இதேபோல, தமிழ் நூல் வழக்கிலும் மரபிலும் பதினெட்டு என்பது ஓர் இடத்தைப் பெற்று இருக்கிறது.

தமிழில் நீதி நூல்கள் பதினெட்டைத் தொகுத்து "பதினெண் கீழ்க்கணக்கு" என்று அழைக்கிறார்கள்.

சித்தர்களில் பதினெட்டுப் பெயர்களை, ஒரு தொகுப்பாக, பதினெண் சித்தர்கள் என்று குறிப்பிடுகிறார்கள்.

ஆடி மாதம் பதினெட்டாம் தேதியைப் பதினெட்டாம் பெருக்கு என்று கூறுகிறார்கள்.

ஒரு கறுப்பன் கோயிலில் பதினெட்டுப் படிகள் இருக்கின்றன. அதனால் அந்தக் கறுப்பனுக்குப் "பதினெட்டாம் படிக் கறுப்பன்" என்று பெயர்.

வடமொழி நூல் மரபிலும். தமிழ் நூல் மரபிலும் பதினெட்டு என்பது சிறப்பானதொரு ஸ்தானத்தை வகிப்பது கவனிக்கத்தக்கது.